# வாகீச கலாநிதி
# கி.வா. ஜகந்நாதன்

பதிப்பாசிரியர்

முனைவர் ம. இராசேந்திரன்

முனைவர் ச. சிவகாமி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# வாகீச கலாநிதி
# கி.வா. ஜகந்நாதன்

பதிப்பாசிரியர்

முனைவர் ம. இராசேந்திரன்
முனைவர் ச. சிவகாமி



**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**
**INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES**
இரண்டாம் முதன்மைச் சாலை, சி.ஐ.டி. வளாகம்
தரமணி, சென்னை - 600 113.

788

திங்கள் (தொடர்) ஆய்வுக் கருத்தரங்கம் - தமிழறிஞர் வரிசை - 16
வாகீச கலாநிதி கி.வா.ஜகந்நாதன் (29-07-2004)

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | **Vākīca kalāniti ki.vā.jakannātaṉ** |
| Editors | : | Dr. M. Rajendran<br>Director (Full Additional Charge)<br>IITS, Taramani, Chennai - 600 113.<br><br>Dr. S. Sivakami<br>Associate Professor<br>IITS, Taramani, Chennai - 600 113. |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Taramani, Chennai - 600 113.<br>Ph: 22542992 |
| Publication No | : | 595 |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition |
| Date of Publication | : | 2008 |
| Paper Used | : | 18.6 kg TNPL Map litho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | vi + 210 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 60/- (Rupees Sixty only) |
| Printing | : | United Bind Graphics<br>189-D, Royapettah High Road<br>Mylapore, Chennai - 600 004 |
| Subject | : | Biographical & Critical Studies on<br>K.V. Jagannathan |




கட்டுரையாளர் கருத்துகளுக்கு நிறுவனம் பொறுப்பன்று.

முனைவர் ம. இராசேந்திரன்
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

# முகவுரை

உலக மொழிகளுள் பழமை வாய்ந்த பண்பட்ட மொழியான தமிழ் ஆய்வுப்பாதையிலும் வெற்றிநடை போடுகின்றது. தமிழ் வளர்ச்சிப் பணியில் ஆய்வாளரும் சிறப்பிடம் கொள்வதால், அவர்களில் முன்னிற்போரை இன்றைய தமிழாய்வாளர்களுக்கு அறிமுகப்படுத்துவதை முதன்மை நோக்காகக் கொண்டு 'தமிழறிஞர் வரிசை'த் திங்கள் கருத்தரங்கம் அன்றைய இயக்குநர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களால் 19-06-2003இல் தொடங்கப்பட்டது. பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தனார் முதல் வாகீசகலாநிதி கி.வா. ஜ. வரை (29-07-2004) பதினாறு கருத்தரங்குகள் திட்டமிடப்பட்டுச் செயல்படுத்தப்பட்டன. அவ்வரிசையின் நிறைவு நூலாக இது வெளிவருகின்றது.

கி.வா.ஜ. தமிழ்த்தாத்தா உ.வே.சாமிநாதையரின் தலை மாணாக்கராகவும் சிறந்த தொண்டராகவும் அமைந்து தமிழ் இலக்கிய, இலக்கணங்களில் வல்லமை பெற்றவர். சிறந்த உரையாசிரியராகவும் பதிப்பாசிரியராகவும் உயர்ந்தவர். இதழாசிரியராக இதழுலகிலும் கோலோச்சியவர். சிறந்த படைப்பாளியும் ஆவார். இவரின் பல்துறைத் திறன்களை, தொல்காப்பியம் முதல் இன்றைய படைப்பிலக்கியம் வரையிலான வல்லமையை ஆய்வாளர்கள் ஆய்ந்து திறம்பட வெளிப்படுத்தியுள்ளனர். அவரது வாழ்க்கை வரலாறு தமிழ்ப் பணியாக ஓங்கி நிற்பதை, தலைசிறந்த இருபதாம் நூற்றாண்டுத் தமிழாளர்களுள் ஒருவராக முன்னிற்பதைத் தமிழுலகில் அவரின் உயரிய இடத்தினை அக்கட்டுரைகள் தெளிவாகக் காட்டுகின்றன.

நிறுவனப் பணியில் பங்கேற்று, சீரிய கட்டுரைகளை வழங்கியுள்ள கட்டுரையாளர்களையும் முதற்சுற்றுத் தமிழறிஞர் வரிசைக் கருத்தரங்கத்தின் ஒருங்கிணைப்பாளராக இருந்து கருத்தரங்கப் பணிகளையும் கட்டுரைப்பதிப்புப் பணிகளையும் செய்த முனைவர் ச. சிவகாமி அவர்களையும் பாராட்டுகின்றேன்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையையும் காட்டிவரும் **நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர்** அவர்களுக்கு என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

தமிழின் உயர்வுக்குப் பாடுபட்டுவரும் **தமிழக நிதியமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் க. அன்பழகன்** அவர்களுக்கு நன்றி.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் **தமிழ் வளர்ச்சி, அறநிலையம், செய்தி மற்றும் விளம்பரத் துறை அரசுச் செயலாளர் திரு கோ. சந்தானம் இ.ஆ.ப.** அவர்களுக்கும் நன்றி.

இந்நூலின் மெய்ப்புத் திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதன், கணியச்சிட்ட திருமதி ந. லட்சுமி ஆகியோருக்கும் இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் அச்சகத்தாருக்கும் பாராட்டுகள்.

**இயக்குநர்**

## கட்டுரையாளர்

முனைவர் அன்னிதாமசு
ஆய்வாளர்
செம்மொழி உயராய்வு நிறுவனம், மைசூர் - 6.

முனைவர் தி. உமாதேவி
விரிவுரையாளர்
ஜவஹர்லால் நேரு பல்கலைக்கழகம், புதுதில்லி

முனைவர் பொ.நா. கமலா
(ஓய்வு) தமிழ்ப் பேராசிரியர்
எஸ்.எப்.ஆர். மகளிர் கல்லூரி, சிவகாசி

திரு. கீழாம்பூர் சங்கரசுப்பிரமணியம்
ஆசிரியர், கலைமகள்
சென்னை

முனைவர் ச. சிவகாமி
இணைப்பேராசிரியர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

முனைவர் வே. சீதாலட்சுமி
இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை
எத்திராஜ் மகளிர் கல்லூரி, சென்னை - 600 008

செல்வி நா. புனிதப் பொற்கொடி
தலைவர், தமிழ்த்துறை
சி.எஸ்.ஐ. ஈவாட் மகளிர் கிறித்துவ கல்லூரி
மெல்ரோசாபுரம் - 603 2-4

முனைவர் க.ப. வித்யாதரன்
ஜோதிடர்
எண். 4, மகாலட்சுமி தெரு, தி.நகர், சென்னை - 600 017

# உள்ளே

# வாழ்க்கை வரலாறு

*கீழாம்பூர் சங்கரசுப்பிரமணியம்*

கி.வா.ஜ. என்னும் மூன்றெழுத்து மந்திரத்திற்குச் சொந்தக்காரரான கி.வா. ஜகந்நாதன், தமிழ் இலக்கியத்தின் தரத்தையும் நாடோடிப் பாடல்களின் பெருமையையும் தமிழ்ப் பழமொழிகளின் மதிப்பையும் கூட்டியவர். 1906 ஏப்ரல் 11ஆம் தேதி வாசுதேவ - பார்வதியம்மாள் தம்பதியினருக்குத் திருச்சி மாவட்டத்திலுள்ள கிருஷ்ணராஜபுரம் என்னும் சிற்றூரில் பிறந்தார். கி.வா.ஜ. சின்ன வயதினிலேயே இலக்கிய ஈடுபாடும், பெரியவர்களை மதிக்கும் பண்பும் பெற்றிருந்தார். தமிழ்த் தாத்தா உ.வே.சாமிநாதையரின் தலைமாணாக்கராக இருந்து தமிழ் பயின்று, உ.வே.சா.வின் அருந்தமிழ்ப் பணிக்குத் துணை நின்றார். உ.வே.சா. மறைந்த பிறகு அவருடைய வாழ்க்கை வரலாற்றை எழுதி நிறைவு செய்த பெருமை கி.வா.ஜ.வுக்கு உண்டு.

இளம்பருவத்திலிருந்தே மோகனூரில் உள்ள காந்தமலை முருகப் பெருமானிடம் ஆழ்ந்த அன்பு கொண்டிருந்தார் கி.வா.ஜ. எனவே சிறுவயது முதலே அவர் திருப்புகழ், கந்தர் அலங்காரம், கந்தர் அனுபூதி, திருவாசகம் முதலான நூல்களைப் படிக்கத் தொடங்கினார். எட்டாவது வகுப்பு வரை அவர் 'வாங்கல்' என்னும் ஊரில் படித்தார். அப்பள்ளியில் எட்டாவது வகுப்பிற்கு மேல் இல்லை. எனவே கி.வா.ஜ.வின் பெற்றோர் அவரைக் கிருஷ்ணராஜபுரத்தில் உள்ள அவருடைய மாமா வீட்டிற்கு அனுப்பி வைத்தனர். அங்கிருந்து கொண்டு குளித்தலையில் உள்ள உயர்நிலைப் பள்ளியில் தம் பள்ளிப் படிப்பைத் தொடர்ந்தார் கி.வா.ஜ. அவருக்கு அந்தப் பருவத்திலேயே இலக்கியம் படிக்க வேண்டும் என்ற ஆசை மிகுதியாக இருந்தது. தமது தந்தையார், சிற்றுண்டி வாங்கிச் சாப்பிடுவதற்காகக் கொடுத்த பணத்தை அவர் நல்ல இலக்கிய நூல்களை வாங்குவதற்குப் பயன்படுத்தினார்.

குளித்தலை உயர்நிலைப் பள்ளியில் கணக்கையும் பௌதிகத்தையும் விருப்பப் பாடமாக எடுத்துக் கொண்டு கி.வா.ஜ. கல்வி பயின்று வந்தார். எனவே ஒன்பதாம் வகுப்பிற்குப் பின்பு தமிழைக் கற்றுக்கொள்ளும் வாய்ப்பு அவருக்கு இல்லாமற்

போய்விட்டது. எனினும் தமிழ்மொழி மீது கொண்ட பற்றினால், அவர் பல சமய இலக்கிய நூல்களைத் தாமாகவே தேடிப் படித்தார். தாம் படித்த செய்யுட்களைப் போல் தாமே எழுத முயன்றார். அவரது கன்னி முயற்சியில் உருவானது தான் 'போற்றிப் பத்து' என்னும் பதிகம். நடராஜனைப் பற்றி அமைந்த அது, 'ஒற்றுமை' என்னும் இதழில் வெளிவந்தது. இதையறிந்த கி.வா.ஜ.வின் தமிழாசிரியரான கொங்கணாம்பட்டி நரசிம்மையர் அவரது ஆற்றலைப் பாராட்ட, அவரது வகுப்பு மாணவன் ஒருவன் அவரை 'இளம்பூரணன்' என்று அழைக்கத் தொடங்கினான். அது முதல் பள்ளி நண்பர்கள் அனைவருமே அவரை 'இளம்பூரணன்' என்றே அழைக்கலானார்கள். தம்முடைய பன்னிரண்டாம் வயதிலேயே கவிதை எழுத வேண்டும் என்ற ஆர்வம் கி.வா.ஜ.வின் உள்ளத்தில் முளைத்து விட்டது. 'காரிகை கற்றுக் கவி பாடுவதைவிடப் பேரிகை கொட்டிப் பிழைப்பதே மேல்' என்பது ஆன்றோர் வாக்கு. கவிதை இலக்கணத்தை முழுவதுமாகத் தெரிந்து கொள்வதற்கு முன்பே கவிதையின் ஓசை நயத்தை உணர்ந்து அதைப் போலவே பாடுவது கி.வா.ஜ.வின் வழக்கம். புதுச்சேரியிலிருந்து வெளியான 'கற்பகம்', 'ஆத்மசக்தி' போன்ற பத்திரிகைகளும், 'பராசக்தி', 'லட்சுமி' போன்ற வேறு சில பத்திரிகைகளும் அவருடைய கவிதைகளை வெளியிட்டன.

எஸ்.எஸ்.எல்சி. வகுப்பில் படித்துக் கொண்டிருந்தபோது வயதுக்குறைவு காரணமாகக் கி.வா.ஜ.வுக்கு அந்த ஆண்டு அத்தேர்வு எழுத இயலாமற் போனது; எனவே அடுத்த ஆண்டு தேர்வு எழுத அவர் தொடர்ந்து படித்தார்; நடுவில் முடக்குவாத நோய் காரணமாக மூன்று நான்கு மாதங்கள் பள்ளிக் கூடத் திற்கே போக முடியாமல் போய்விட்டது. இம்முறை பள்ளிக்கு வரவேண்டிய நாட்கள் போதவில்லை என்பதால் அவரால் பள்ளி இறுதித் தேர்வு எழுத முடியாமல் போய்விட்டது. எனவே மோகனூருக்குத் திரும்பி வந்துவிட்டார் கி.வா.ஜ.

காந்தியடிகள் தலைமையில் நாட்டு விடுதலைக்காகப் பலரும் முனைப்புடன் போராடிக் கொண்டிருந்த காலம் அது. கி.வா.ஜ. இக்காலகட்டத்தில் காந்தி இயக்கத்தினருடன் இணைந்தார்; சர்க்காவில் நூல் நூற்கத் தொடங்கினார்; அந்த நூலால் நெய்யப் பட்ட கதர்த் துணிகளையே உடுத்தத் தொடங்கினார். அன்று முதல் தம் இறுதிநாள் வரை கி.வா.ஜ. கதர்த் துணியைத் தவிர வேறு எதையும் அணிந்ததில்லை. மோகனூரில் உள்ள திலகர் வாசகசாலைக்குச் சென்று அங்கு வரும் பத்திரிகைகள் அனைத்தையும் படிப்பார். பத்திரிகைகளில் வரும் தேசபக்திக் கவிதைகளை

விரும்பிப் படிப்பார். படித்ததோடு மட்டுமன்றி, அவர் 'சுதந்திரதேவி திருப்பள்ளியெழுச்சி', 'திருக்கோயில்' போன்ற பாடல்களையும் படைத்தார். சேலத்திலிருந்து வெளிவந்து கொண்டிருந்த 'தமிழ்நாடு' பத்திரிகைக்கும் ஒரு சில கவிதைகள் எழுதி அனுப்பினார் அவர்.

ஒரு சமயம் திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் ஒரு விழாவில் சொற் பொழிவாற்ற சேந்தமங்கலம் வந்திருந்தார். அவருடைய பேச்சைக் கேட்டது முதல் அவரிடம் தமிழ் முறையாகக் கற்க வேண்டும் என்ற ஆர்வம் கி.வா.ஜ.வுக்கு ஏற்பட்டது. ஆயின் சேந்தமங்கலத்தில் இருந்த அன்பர்களோ, சிதம்பரத்தில் பணியாற்றி வந்த உ.வே.சாமிநாதையரிடம் கல்வி கற்றால்தான் அவரது எழுத்தாண்மை உரம் பெறும் என்று கருதினர். அவர்களின் எண்ணப்படியே 1929ஆம் ஆண்டு டிசம்பர் மாதத் திருவாதிரைத் திருநாளில் உ.வே.சா.வை நண்பர்கள் கண்டார்கள். கி.வா.ஜ.வை அவரிடம் கல்வி கற்க அனுப்ப விரும்புவதாகச் சொன்னார்கள். கி.வா.ஜ.வின் பணிவும் பக்தியும் உ.வே.சா.வைப் பெரிதும் ஈர்த்தன. "நான் சில தினங்களில் சென்னை சென்று விடுவேன்; உங்களுக்கு இங்கே கல்லூரியில் சேர்ந்து படிக்க விருப்பமா?" என்று கி.வா.ஜ.வைக் கேட்டார் உ.வே.சா. ''சென்னைக்கே வந்து உங்களிடம் படிக்க விரும்புகிறேன்" என்றார் கி.வா.ஜ. "நீங்கள் ஊருக்குப் போய் ஒரு நல்ல நாள் பார்த்து இவரைச் சென்னைக்கு அழைத்து வாருங்கள்" என்று கி.வா.ஜ.வுக்கு வாழ்த்துக் கூறி அனுப்பி வைத்தார் உ.வே.சா. அவர் கூறியபடியே 1927ஆம் ஆண்டு டிசம்பர் மாத இறுதியில் கி.வா.ஜ., உ.வே.சா.விடம் தமிழ் கற்க மாணவராகச் சேர்ந்தார் (ச.கு. கணபதி ஐயர், வாழ்க்கை வரலாறு, வாழும் தமிழ், பக். 20-21).

1930ஆம் ஆண்டு திருவல்லிக்கேணி இந்து உயர்நிலைப் பள்ளியில் சில மாதங்கள் கி.வா.ஜ. தமிழ்ப் பண்டிதராகப் பணியாற்றினார். பின்னர் அரசுக் கையெழுத்து நூலகத்தில் கவனிப்பாளர் பதவியில் சேருவதற்குரிய வாய்ப்புக் கிடைத்தது. இருந்தும் "தங்களிடம் இருந்து தமிழ் படிப்பது ஒன்றுதான் இப்போது எனது இலட்சியம்" (நான் அறிந்த கி.வா.ஜ., ப. 145) என்று தம் ஆசிரியரிடம் கூறிவிட்டு, அவருடைய தமிழ்ப் பணியில் தம்மையும் இணைத்துக் கொண்டார் கி.வா.ஜ. "எனக்குத் தள்ளாமை வந்துவிட்ட நேரத்தில் எனக்குத் துணையாக இருக்க இறைவன்தான் உம்மை என்பால் அனுப்பியிருக்கிறான்''

(மு.நூ., ப. 146) என்று அகமகிழ்ந்த உ.வே.சா., தம் அனுபவ அறிவையும் மனிதப் பண்பாட்டினையும் கி.வா.ஜ.வுக்கு உணர்த்தினார்; அவரைத் தம் குடும்பத்தில் ஓர் உறுப்பினராகவே ஏற்றுக்கொண்டார்; 1932 ஜூன் மாதம் 13ஆம் நாள் தஞ்சை மாவட்டத்தில் ஒரு நல்ல குடும்பத்தில் பிறந்த அலமேலு அம்மையாரைத் தேர்ந்தெடுத்துக் கி.வா.ஜ.வுக்குத் திருமணம் செய்து வைத்தார் உ.வே.சா. துறவு பூண்டு தனிமையில் ஆன்மபலம் பெற நினைத்த கி.வா.ஜ.வை இந்தத் திருமணம் திசை திருப்பிவிட்டது. தமிழ்ப் பணியில் முழுமையாக ஈடுபட வைத்தது.

இல்லற வாழ்வின் பயனாகக் கி.வா.ஜ.விடம் விளைந்த நன்முத்துக்கள் நான்கு. சாமிநாதன், குமரன், முருகன் என்னும் பெயருடைய மூன்று ஆண் குழந்தைகளும், உமா என்னும் பெயருடைய பெண் குழந்தை ஒன்றும் கி.வா.ஜ.வுக்குப் பிறந்தனர்.

1932ஆம் ஆண்டு 'கலைமகள்' பத்திரிகை தொடங்கப் பட்ட போது, அதன் பதிப்புப் பணிக்கு உ.வே.சா., கி.வா.ஜ.வைப் பரிந்துரை செய்தார். அந்நாட்களில் கி.வா.ஜ.வும் மிகக் கடுமை யாக உழைத்தார். காலையில் உ.வே.சா.வுடன் இருந்து பதிப்பு வேலைகளைக் கவனிப்பது; பிற்பகலில் 'கலைமகள்' வேலை களை அலுவலகத்திற்குப் போய்க் கவனிப்பது; மாலையில் மறுபடியும் உ.வே.சா.வுக்கு உதவி செய்வது; இரவில் ஸ்ரீகாம கோடி பீடாதிபதி போன்றோர் சொற்பொழிவுகளைக் குறிப் பெடுப்பது; மறுநாள் காலையில் அக்குறிப்புக்களைக் கட்டுரை யாக்குவது என ஓய்வில்லாமல் உழைத்தார் கி.வா.ஜ. இவற்றிற் கிடையே 1933ஆம் ஆண்டு அவர் வித்துவான் இறுதித் தேர்வும் எழுதினார். அத்தேர்வில் அவர் முதல் வகுப்பில் முதல் மதிப்பெண் பெற்றுத் தேர்ச்சி பெற்றார். திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடாலயத் தலைவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் ஆண்டுதோறும் வித்துவான் தேர்வில் முதன்மை பெறும் மாணவருக்கு வழங்கிவரும் ஆயிரம் ரூபாய் பரிசினையும் பெற்றார். பின்னர் சென்னைப் பல்கலைக்கழகத்தில் மூன்று ஆண்டுகள் ஆராய்ச்சி மாணவராக இருந்து உ.வே.சா.வின் மேற் பார்வையில் காப்பியங்கள் பற்றிய ஆய்வினை மேற்கொண்டார்..

1934ஆம் ஆண்டு 'கலைமகள்' பத்திரிகை ஆசிரியராக இருந்த டி.எஸ். ராமசந்திரையர் காலமானார். அதனைத் தொடர்ந்து 'ஹரிஜன சாஸ்திரி' எனப் பெயர் பெற்ற ஆர்.வி. சாஸ்திரி 'கலைமகள்' பத்திரிகையின் ஆசிரியரானார். அதன் விற்பனை எண்ணிக்கை குறைந்து வருவது குறித்துக் கவலையுற்றார்

அதன் அதிபர் நாராயணசாமி ஐயர். இந்நிலையில் அவர் உ.வே.சாமி நாதையருடன் கலந்து பேசி ஒரு முடிவுக்கு வந்தார். பத்திரிகை தொடங்கப்பட்ட நாளிலிருந்து உதவி ஆசிரியராகப் பணியாற்றி வரும் கி.வா.ஜ.வே அதன் ஆசிரியராகத் தகுதி பெற்றவர் என்பதை உணர்ந்து, அப்பொறுப்பினை அவரிடம் ஒப்படைத்தார். அன்று முதல் தம் வாழ்நாளின் இறுதிமூச்சு வரை அப் பத்திரிக்கையின் வளர்ச்சிக்காகவே அரும்பாடுபட்டார் கி.வா.ஜ.

பத்திரிகைப் பணிக்கிடையே கி.வா.ஜ. தம் ஆசிரியர் உ.வே.சா.வுடன் சைவ மடங்கள், நிறுவனங்கள், சங்கங்கள் எனப் பல்வேறு இடங்களுக்குச் சென்றார்; சான்றோர் பலரைச் சந்தித்தார்; அவர்களின் பாராட்டையும் பெற்றார்.

1942ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 25ஆம் நாள் தம் தந்தையை இழந்து வருந்திக் கொண்டிருந்த கி.வா.ஜ.வைப் பேரிடி ஒன்று தாக்கியது; அது ஏப்ரல் மாதம் 28ஆம் நாள் தந்தையை இழந்த மூன்று நாட்களுக்குப்பின் ஞானகுருவாகப் போற்றிய உ.வே.சா.வையும் இழந்ததுதான். உ.வே.சா. மறைந்த பிறகு, அவர் அரைகுறையாக விட்டுச் சென்ற பணிகளைக் கி.வா.ஜ. நிறைவு செய்தார். 'என் தந்தையார்' என்ற பெயரில் உ.வே.சா.வின் மகன் கலியாண சுந்தரமையர் எழுத நினைத்த உ.வே.சா. வரலாறு, அவரும் விரைவில் மறைந்துவிட்டமையால் கைகூடவில்லை. பின்னர் உ.வே.சா.வின் பெயரர் க.சுப்பிரமணியம் ஐயரின் வேண்டுகோளுக்கிணங்கி 'என் ஆசிரியப் பிரான்' என்னும் தலைப்பில் அவ்வரலாற்றை நிறைவு செய்தார் கி.வா.ஜ. தம் ஆசிரியப் பிரானாக விளங்கிய திரிசிரபுரம் வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களுடைய வரலாற்றினை உ.வே.சா. எழுதி முடித்ததைப்போல், தம் ஆசிரியப் பிரானாக விளங்கிய உ.வே.சா.வின் வரலாற்றை நிறைவு செய்யும் பேற்றினைப் பெற்றார் கி.வா.ஜ. கிரேக்க நாட்டில் சாக்ரடீஸ், பிளேட்டோ, அரிஸ்டாட்டில் என்று புகழ்பெற்ற ஆசிரிய - மாணவர் பரம்பரை போலத் தமிழ்நாட்டிலும் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, உ.வே. சாமிநாதையர், கி.வா. ஜகந்நாதன் என்ற ஆசிரிய-மாணவர் பரம்பரை உருவாகித் தமிழ்நாட்டிற்கும், தமிழ்மொழிக்கும் தொண்டு செய்துள்ளனர். ஜான்சனுக்கு அமைந்த பாஸ்வெல் போல, உ.வே.சா.வுக்குக் கி.வா.ஜ. அமைந்தார்.

'கலைமகள்' பத்திரிகைப் பணியைச் செம்மையாக நிறைவேற்றினார் கி.வா.ஜ. 'கலைமகள்' மூலம் பற்பல புதிய

எழுத்தாளர்களை - கவிஞர்களை, சிறுகதை ஆசிரியர்களை, கட்டுரை ஆசிரியர்களை - உருவாக்கிய பெருமை கி.வா.ஜ.வுக்கு உண்டு. தம் வாழ்நாள் இறுதிவரை பத்திரிகைத் தொண்டே தம் வாழ்க்கைத் தொண்டாக வாழ்ந்தவர் கி.வா.ஜ. 'கலைமகள்' பணியை நடத்திக் கொண்டே, தம் பேச்சாற்றலால் உலகம் முழுவதும் சுற்றி வந்தார் கி.வா.ஜ. இந்திய மண்ணில் கி.வா.ஜ. ஏறாத மேடை இல்லை; பேசாத பேச்சு இல்லை; பங்குபெறாத, தலைமை தாங்காத பட்டிமண்டபங்கள் இல்லை என்னும் அளவிற்குத் தம் பேச்சாற்றலால் தமிழ் மக்களைக் கவர்ந்தவர் கி.வா.ஜ.

படிப்பதற்கு மிகக் கடினமானது என்று கருதப்பட்ட சங்க இலக்கியங்களைக் கூடக் கதை போல மிக எளிமையாகக் கட்டுரைகள் மூலம் கற்பித்தார் கி.வா.ஜ. திருமுருகாற்றுப் படையை 'வழிகாட்டி' என்னும் பெயரில் நூல் எழுதியும் பேசியும் 'திருமுருகாற்றுப்படை அரசு' என்னும் பட்டம் பெற்றுள்ளார் கி.வா.ஜ. இளமையிலேயே முருகன் மீது மிகுந்த பற்றுக்கொண்ட கி.வா.ஜ. முருகனுடைய பணிக்காகவே தம் வாழ்நாளைக் கழித்தார். அருணகிரிநாதரின் இலக்கியங்களில் இணையற்ற ஈடுபாடும், அசைக்க முடியாத ஆழ்ந்த புலமையும் கொண்ட அவர், முருகன் பெருமை பேசா நாளெல்லாம் பிறவா நாளே என்பது போல் நாளும் கந்தர் அலங்காரத்தையும், கந்த புராணத்தையும், கந்தர் அனுபூதியையும் பேசி வந்தார். கி.வா.ஜ.வின் பேச்சாற்றலைப் பாராட்டும் வகையில், அவருக்குக் காஞ்சிக் காமகோடி பீடாதிபதி பெரியவர்கள் 'வாகீச கலாநிதி', 'திருமுருகாற்றுப்படை அரசு' என்ற பட்டங்களை வழங்கி யுள்ளார். மேலும் சிருங்ககிரி ஆசாரியர்கள் 'தமிழ்க் கவி பூஷணம்' என்ற பட்டத்தையும், புஷ்பகிரி மடாதிபதி 'உபன்யாஸ கேசரி' என்ற பட்டத்தையும், தருமை ஆதீனகர்த்தர் 'செந்தமிழ்ச் செல்வர்' என்ற பட்டத்தையும், 'சென்னை மாநிலத் தமிழ்ச் சங்கம்', தமிழ்ப் பெரும்புலவர்' என்ற பட்டத்தையும், மதுரை ஞானசம்பந்தர் மடம் 'திருநெறித் தவமணி' என்ற பட்டத்தையும் கி.வா.ஜ.வுக்கு வழங்கியுள்ளனர். இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், அமெரிக்கா, பர்மா, ஐரோப்பா போன்ற உலக நாடுகளுக்கும் சென்று தம் நாவன்மையை மெய்ப்பித்திருக்கிறார் கி.வா.ஜ. மலேசியாவில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டிலும் கலந்துகொள்ளும் வாய்ப்பைப் பெற்றார் கி.வா.ஜ.

கி.வா.ஜ.வைத் தமிழ் இலக்கியவாதியென்று மட்டுமே உலகம் அறியும். அவர் சிறந்த தேசியவாதியும் கூட. காந்தீயத்தின்

மீது மிகுந்த நம்பிக்கை கொண்டவர். "காந்தியின் கண்களுக்குக் காந்த சக்தியுண்டு, அந்தக் காந்த சக்தியே இந்தியாவுக்கு விடுதலை வாங்கித்தரும்" என்று தன்னைச் சந்திக்க வரும் நண்பர்களுடன் உரையாடும்போது இவர் சொன்னதுண்டு.

ஒரே பத்திரிகையில் 50 ஆண்டுகளுக்கும் மேலாக ஆசிரியராக இருந்த பெருமை இவருக்கு உண்டு. அது மட்டு மல்ல பதிப்பாளர்களின் மூன்று தலைமுறைகளோடு ஒத்துப் போனவர் இவர். உ.வே.சா.வின் ஆலோசனையின் பெயரில் கி.வா.ஜ.வைக் கலைமகளுக்கு ஆசிரியராக்கினார் கலைமகளின் அதிபர் நாராயணசுவாமி ஐயர். "கலைமகளில் பலவகைகளில் கி.வா.ஜ.வின் எழுத்தாற்றல் பரிணமித்திருக்கிறது. அவர் வர்ணனைக் காவியம் வரைந்தாலும் உருக்கமான சிறுகதைகளை ஸ்ருஷ்டித்தாலும் எதிலும் அவருடைய முத்திரைப் பதிவு தனிச் சிறப்போடு இருக்கும். எங்களுக்குள் மோதலே ஏற்பட்டதில்லை. எங்கள் ஆசிரியர் குழுவை ஒரு குடும்பமாகவே நாங்கள் கருதிப் பழகி வருகிறோம்." இப்படி கி.வா.ஜ. மணிவிழா மலரில் நாராயண சுவாமி ஐயருக்குப் பிறகு கலைமகளின் நிர்வாகப் பொறுப்புக்கு வந்த என். ராமரத்தினம் எழுதியுள்ளது குறிப்பிடத் தக்கதாகும். மூன்றாம் தலைமுறையைச் சேர்ந்த ஆர். நாராயண சுவாமி, கிவா.ஜவைப் பற்றி மிகுந்த பெருமை கொண்டு அவருடன் மரியாதையுடன் பழகி வந்தார். சஹாராவில் இருந்த காஞ்சிப் பெரியவரைச் சந்திக்க கி.வா.ஜ.வுடன் ரயிலில் சென்றார்களாம். "தனியாக உட்கார்ந்து கொண்டிருக்கும்போது முருகா முருகா என்று வாய் முணுமுணுத்தபடியே இருப்பார். காந்தமலை முருகன் மீது கி.வா.ஜவுக்குப் பக்தியுண்டு. அதனால் எப்போதுமே முருகனின் நினைவாகவே அவர் இருந்ததைக் கண்டு வியந்திருக்கிறேன்" என்கிறார் இப்போதைய கலைமகள் பதிப்பாசிரியர் ஆர். நாராயணசுவாமி. எல்லாத் தரப்பினருடனும் அவர் சுமுகமாகப் பழகினார் என்பதற்கு இதைவிட வேறு என்ன சான்று வேண்டும்?

தன்னைச் சந்திக்க வரும் இலக்கியவாதிகளிடமும் பெரிதும் அன்பு காட்டுவார். யார் கதை கொண்டு வந்து கொடுத் தாலும் நன்றாக இல்லையென்று சொல்லமாட்டார். பிரசுரிக்க இயலவில்லையென்றால் இன்னும் கொஞ்சம் மெருகூட்டிச் சிறப்பாகச் செய்யுங்கள் என்று சொல்லித்தான் திருப்பிக் கொடுப்பார்.

கிவா.ஜவின் நினைவாற்றலுக்கும் எளிமைக்கும் உதாரணமாக ஒரு சம்பவத்தைக் கம்பன் கழகத் தலைவரும் நீதிபதியுமான

மு.மு. இஸ்மாயீல் ஒருமுறை விவரித்தார். கம்பன் கழகப் பட்டிமண்டபத்தின் நடுவராக இஸ்மாயீல் ஏற்பாடு செய்யப் பட்டிருந்தார். ஆனால் உடல்நலக் குறைவினால் அவரால் நடுவராக இருக்க முடியாத சூழ்நிலையில் அப்பொறுப்பைக் கி.வா.ஜ. ஏற்றாராம். தமது முன்னுரையில் சுவைபடப் பேசினார் கி.வா.ஜ. "போர் தொடங்குவதற்கு முன் இராவணனிடம் தூது ஒன்று அனுப்ப வேண்டுமென்று ராமன் கூறுகிறான். லட்சுமணன் மறுத்ததாலும் நீதிமுறை அதுதானென்பதால் எல்லோரும் ஏற்கிறார்கள். தூதுவனாக யாரையனுப்புவது என்ற கேள்வி பிறக்கிறது. அனுமனை அனுப்பலாம். ஆனால் அனுமனைத் தூது அனுப்பினால் இராவணனிடம் சென்று மீளக்கூடிய வீரர் வேறு யாருமில்லையென்று, எதிரிகள் நினைத்துவிடக் கூடும் என்ற காரணத்தால், அனுமனைத் தூதனுப்ப ராமன் விரும்ப வில்லை. அப்படியானால் வேறு யாரையனுப்புவது? அங்கேதான் இதற்குத் தகுதியானவன் - எதிரிகள் போரில் இறங்கினாலும் தீதின்றி மீள வல்லவன் அவன் என்ற முடிவில் அங்கதனைத் தூதனுப்பு கிறான் ராமன். இதனைக் கேட்டதும் அங்கதன் அளவில்லார் ஆனந்தம் அடைகிறான். அனுமனுக்கு அடுத்தபடியாகத் தான் தேர்ந்தெடுக்கப்பட்டதில் அங்கதனுக்குப் பெருமையும் பெருமிதமும். இதனைக் கம்பன் அருமையாக,

**மாருதி அல்லன் ஆகின் நீ எனும் மாற்றம் பெற்றேன்**
**யாரினி என்னோடு ஒப்பார்? என்பதோர் இன்பமுற்றான்**

என்று பாடுவான். இந்தப் பாட்டினை எடுத்துக்காட்டி அன்றைய பட்டிமண்டபத்திற்கு இஸ்மாயீல் நடுவராக இருக்க முடியாத நிலையில் அவருக்கு அடுத்தபடியாகத் தனக்கு நடுவர் பதவி கிடைத்த விதத்தைப் பாங்குடன் கூறினார். இதன் மூலம் கி.வா.ஜவின் எளிமை, தன்னடக்கம், உவமைநயம், நினைவாற்றல், கம்ப ராமாயணப் பயிற்சி எல்லாவற்றையும் தெரிந்து கொள்ளலாம்.

சிறுகதை, புதினத்திற்கு முதலிடம் கொடுத்து அவர் இலக்கியத்தை வளர்த்தவர். தமிழ்ச் சிறுகதை வளர்ச்சிக்கு வித்திட்ட மணிக்கொடி இதழ் போலக் கலைமகளும் சிறுகதை, நாவல் இலக்கியத்திற்குப் பெரிதும் தொண்டாற்றியது. அக்காலத்தில் சிறந்த சிறுகதை எழுத்தாளர்களாக விளங்கிய கு.ப. இராஜகோபாலன், த.நா. குமாரசாமி, சிதம்பரசுப்பிரமணியம், சி.சு. செல்லப்பா, ரஸவாதி போன்றவர்கள் கி.வா.ஜ.வின் நண்பர் களாக இருந்தனர். அவரைச் சுற்றி எப்போதும் ஒரு இலக்கிய வட்டம் இருந்து கொண்டேயிருக்கும். அகிலன், மாயாவி,

அநுத்தமா, ராஜம்கிருஷ்ணன், ஆர். சூடாமணி, பி.வி.ஆர், எல்லார்வி போன்றவர்களின் சிறுகதைகளை வெளியிட்டு அவர்களை இலக்கிய உலகுக்கு அறிமுகப்படுத்தியது கி.வா.ஜ. தான். மூத்த தமிழறிஞர்கள் கி.வா.ஜ.வை எப்போதும் நினைவு கூர்வார்கள். காரணம் தமிழ் இலக்கியத்தில் சந்தேகம் என்றால் இவருடன் தொடர்பு கொண்டாலோ தொலைபேசியில் பேசினாலோ போதும். சந்தேகம் தெளிந்துவிடும். தமிழ் இலக்கணத்துக்கு விளக்கம் தருவதில் இவர் வல்லவர்.

நாட்டார் பாடல்கள், நாடோடிப் பாடல்கள், ஏட்டில் எழுதாக் கவிதை, கிராமிய மணங்கமழும் பாடல்கள் என்றெல்லாம் அழைக்கப்படும் நாட்டுப்புறப் பாடல்கள் இயற்கைச் சூழ்நிலையில் எவ்விதக் கட்டுப்பாடுமின்றி மக்களின் உணர்ச்சிப் பிரதிபலிப்பைக் காட்டுவனவாகும். தமிழ்நாட்டில் மனிதன் நடமாடத் தொடங்கிய காலம் முதல் இந்தப் பாடல்கள் பிறந்து வாழையடி வாழையாக உலவிவருகின்றன. வயல்வெளியில் நாற்று நடும்போதும், கடலில் அல்லது ஆற்றில் ஓடத்தைச் செலுத்தும்போதும், மீன்பிடிக்கும் போதும் களைப்புத் தெரியாமல் இருக்கப் பாடும் தொழில் முறை விளக்கப் பாடல்கள்; தாய்மார்கள் தங்கள் குழந்தைகளைத் தூங்க வைக்கப் பாடும் தாலாட்டுப் பாடல்கள்; கதைப் பாடல்கள்; விளையாடும் பொழுது சிறுவர் சிறுமியர் பாடும் விளையாட்டுப் பாடல்கள்; காதலனும் காதலியும் பாடும் தெம்மாங்குப் பாடல்கள் என அனுபவத்தில் மக்களிடையே மலிந்துள்ள நாடோடிப் பாடல்கள் ஏராளம். பல இடங்களுக்குச் சென்று பாடல் பாடக் கூடியவர்களைத் தேடிக் கண்டுபிடித்து அவர்களது மனம் கோணாமல் பேசி இந்தப் பாடல்களை அவர்களிடமிருந்து பெறுவது என்பது தனிக்கலை. இந்தக் கலையைத் தமது ஆசிரியரிடம் இருந்து பயின்றவர் கி.வா.ஜ.

உ.வே.சா. ஊர் ஊராகச் சென்று ஓலைச்சுவடிகளைச் சேகரித்து எப்படித் தமிழ் இலக்கியங்களைக் காத்தாரோ அதே போன்று கி.வா.ஜ.வும் ஊர் ஊராகச் சென்று நாடோடிப் பாடல்களையும் பழமொழிகளையும் சேகரித்துத் தொகுத்தார்.

'சங்குச் சக்கர சாமி வந்து சிங்கு சிங்குன்னு ஆடிச்சாம்' பாடலைக் கி.வா.ஜ. பாடினால் அரங்கமே அதிரும். அவருடைய அந்தச் சின்ன உருவமும் குடுமியும் கணீர் குரலும் பார்ப்போரை, கேட்போரைப் பரவசப்படுத்தும். நாட்டுப்புறப் பாடல்களைப் போலப் பழமொழிகளைச் சேகரித்து

நூலாக்கியவர் கி.வா.ஜ. தன் குருநாதர் மீது கொண்ட பக்தியின் காரணமாகத் தன் மகனுக்குச் சாமிநாதன் என்று பெயர் சூட்டினார். அதே போன்று காந்தமலை முருகன் ஞாபகமாகத் தம் வீட்டிற்குக் 'காந்தமலை' என்று பெயர் சூட்டினார்.

கி.வா.ஜ.வால் பல பட்டங்கள் பெருமை பெற்றன. கலை மாமணி, பத்மஸ்ரீ, சாகித்திய அக்காதெமி, காஞ்சிப் பெரியவரால் வழங்கப்பட்ட வாகீச கலாநிதி, சிருங்கேரி சங்கராச்சாரியார் அளித்த 'தமிழ்க்கவி பூஷணம்' என்பன கிடைத்த பட்டங்களில் குறிப்பிடத்தக்கவை.

கி.வா.ஜ.வின் சொற்பொழிவுகள் கேட்கக் கேட்க இலக்கிய ரஸம் மிக்கனவாக இருக்கும். சிரிக்கவும் பேசுவார், சிலேடையாகவும் பேசுவார். ஒரு முறை இவர் உட்காருவதற்காகப் பலகையொன்றை நாராயணமூர்த்தி என்பவர் எடுத்து வந்தார். இதைப் பார்த்த கி.வா.ஜ. தம் நண்பர் சுப்புவிடம் 'நாராயண மூர்த்தி நல்ல திறமைசாலி, ஒரு கையில் பல கை கொண்டு வருகிறான் பாருங்கள்' என்றார். இதைக் கேட்ட எல்லோரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள். இப்படிச் சுவைபடச் சிலேடைகள் தானாகவே பிறக்கும்.

கி.வா.ஜ. மறைந்தபோது கலைஞர் கருணாநிதி ஓர் அஞ்சலிக் கட்டுரை எழுதியிருந்தார். கலைமகளில் இக்கட்டுரை வெளியானது. "தமிழக அரசே முன் வந்து கி.வா.ஜ.வின் நூல்களை வாங்கிட வேண்டும். இறுதிக் காலத்தில் அவருக்கு இருந்த வருத்தத்தைப் போக்கும்வண்ணம் இனியாவது அவரது நூல்களுக்கு உரிய மரியாதை தந்து அரசும் தமிழகமும் போற்றிட வேண்டும் என்று ஓர் வேண்டுகோளைத் தெரிவித்துக் கொள்கிறேன்" என்று அக்கட்டுரையில் கலைஞர் கூறியிருந்தார்.

கி.வா.ஜ.வின் நூல்களை நாட்டுடைமையாக்கித் தமிழ் இலக்கிய உலகிற்கு இப்போதைய முதல்வர் பெருமை சேர்த்திட வேண்டும் என்று பல அறிஞர் பெருமக்களும் விரும்புகின்றனர். வாகீச கலாநிதி கி.வா.ஜ.வுக்குத் தமிழக அரசு செய்யும் பொருத்தமான மரியாதையுமாக இது இருக்கும்.

# பன்முகப் பார்வை

*பொ.நா. கமலா*

தமிழன்னையின் தவப்புதல்வனாகத் தோன்றிய கி.வா. ஜகந்நாதன், அவளது திருவடிகளில் எண்ணற்ற தமிழ் நூல்களைச் சூட்டிய அறிஞர் பெருந்தகை ஆவார். இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்து அரை நூற்றாண்டுக்கும் மேலாகத் தமிழ்த்தொண்டும், இறைத்தொண்டும் ஆற்றி நல் வைரமாக ஒளிவீசித் திகழ்ந்தவர் அவர். தன் ஆசான் உவே. சாமிநாத ஐயரவர்களிடம் பெற்ற பயிற்சியினாலும், அறிஞர் பெரு மக்கள் பலரிடம் பெற்ற அனுபவ அறிவினாலும் பட்டை தீட்டப் பெற்றவர் அவர். எனவே அன்னாரது பன்முகங்களும் பலவாகிய பார்வை ஒளிகளை வீசுவன. சிந்தைக்கினிய செந்தமிழைப் பேசும் முகம் ஒன்று என்றால், செவிக்கினிய முருகன் புகழ்பாடும் முகம் ஒன்று; வேத உபநிடத புராண இதிகாசங்களில் தோய்ந்த முகம் ஒன்று எனின், ஆய்வின்பால் ஆர்வம் கொண்ட முகம் ஒன்று; ஆசான்மேல் பற்றுக் கொண்ட முகம் ஒன்று என்றால், மாந்தர்பால் பரிவு கொண்ட முகம் ஒன்று.

அன்னார் எழுதிய முந்நூறுக்கும் மேற்பட்ட நூல்களில் அவரது பலவாகிய முகங்களும் பார்வைகளும் வெளிப்படுவன வற்றைப் பகுத்தாய்ந்து தொகுத்தளிப்பது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### *இதழியல் பார்வை*

கி.வா. ஜகந்நாதனின் வாழ்வோடு பின்னிப் பிணைந்தது கலைமகள் இதழ். அவர் ஒரு தலைசிறந்த இதழாளர் என்பதை அவரோடு பழகிய அறிஞர்தம் கூற்றுகள் மெய்ப்பிக்கின்றன. அவ்விதழின் பதிப்பாசிரியர் நா.ராமரத்னம் கூற்றாவது: 'கலைமகளின் உயிராக இருப்பவர் கி.வா.ஜ., கி.வா.ஜ.வின் உயிராக இருப்பது கலைமகள். கலைமகளையும், கி.வா.ஜ.வையும் வெவ்

வேறாக எண்ணிப்பார்க்கவே முடியாது. காலத்துக்கு ஏற்றாற் போன்று அட்டைப்பட அமைப்பையும், கலைமகளுக்கே உரிய தனி எழிலையும், இலக்கியத் திறத்தையும், கம்பீர நடையையும், பொருள் ஆழத்தையும் தந்தவர் கி.வா.ஜ. எனவே கலைமகள் பத்திரிகை கி.வா.ஜ.வின் படைப்பு' என்று குறிப்பிட்டுள்ளார் (திரு. கி.வா.ஜ. மணிவிழா மலர், 1966, ப.13). கலைமகளில் வெளியாகும் கட்டுரைகள், கவிதைகள், சிறுகதைகள், வர்ணனைக் காவியங்கள் அனைத்திலும் தம் முத்திரையைப் பதித்து எழுதியவர் கி.வா. ஜகந்நாதன்.

அன்னாரின் எழுத்தாற்றலைக் கா.ஸ்ரீ.ஸ்ரீ. போற்றிப் புகழ்ந்துள்ளார். "எழுத அமர்ந்தால் அவருடைய மணிமணியான எழுத்தாற்றல் தட்டுத் தடங்கலின்றி, அடித்தல் திருத்தமின்றி 'ராஜதானி எக்ஸ்பிரஸ்' வேகத்தில் செல்லும்" என்பது அவர் வாக்கு (கலைமகள், டிசம்., 1988, ப.25). திருமுருக கிருபானந்த வாரியார், 'தமிழ்நாட்டில் இன்று சிலர் தமிழ்மகளை விலைமகளாக்கி மாசுபடுத்திக் காசு பறிக்கும் கொடுமையைப் பார்க்கும்போது தரத்தைக் கெடுக்காமல் இலக்கிய எழிலுடன் கலைமகளைப் போற்றிக் காக்கும் கி.வா.ஜ.வுக்குத் தமிழுலகம் கடமைப்பட்டி ருக்கிறது' என்று கூறியுள்ளார் (திரு. கி.வா.ஜ. மணிவிழா மலர், ப.35).

கலைமகளுக்கென்றே கி.வா.ஜ.வை உருவாக்கி அளித்தவர் அவரது ஆசிரியர் உ.வே.சாமிநாத ஐயரவர்கள் என்றால், நல்ல எழுத்தாளர்களைத் தேடிக் கண்டுபிடித்துக் கலைமகளில் எழுத ஊக்குவித்தவர் கி.வா.ஜ. அவ்வாறு ஊக்குவிக்கப்பட்ட அவரது மாணவருள் ஒருவரான எஸ்.வி.ரமணி பின்னாளில் ஆசிரியர் குழுவிலும் ஒருவர் ஆனார். பெண் எழுத்தாளர்களுக்கும் வாய்ப்பளித்து அவர்களை முன்னுக்குக் கொண்டு வந்த பெருமை கி.வா.ஜ.வைச் சாரும். ராஜம்கிருஷ்ணன், அநுத்தமா, கோமகள், கோமதி ஸ்வாமிநாதன் போன்றோர் கலைமகளின் வார்ப்புகளே.

சங்க இலக்கியம், பக்தி இலக்கியம், இலக்கணம் ஆகிய வற்றில் வாசகர்க்கு ஏற்படும் ஐயத்தைப் போக்கி 'விடையவன் விடைகள்' என்ற பகுதியில் வெளியிட்டு வந்தார். 1970ஆம் ஆண்டு கலைஞர் மு.கருணாநிதி முதலமைச்சராகப் பொறுப்பேற்றபோது அவருக்குக் கி.வா.ஜகந்நாதன் கவிதையிலேயே கட்டுரை கேட்டு எழுதினார். அவரைப் பற்றி மு.கருணாநிதி, 'தமிழ்ப் புலமையுடன் பேச, எழுதத் தெரிந்தவர்கள் பத்திரிகைப் பணிக்கு வருதல் அரிது.

கி.வா.ஜ., துணிந்து பத்திரிகைப் பணியை ஏற்றுக் கொண்டார்' என்று பாராட்டினார் (கலைமகள், நவம்., 1988, ப.6).

1932-இல் ஆர்.நாராயணசாமி ஐயரால் தோற்றுவிக்கப் பட்ட கலைமகள் இதழை 1937 முதல் 1988 வரை கிட்டத்தட்ட அரைநூற்றாண்டுக்காலம் பொறுப்பேற்றுத் திறம்பட நடத்தி வந்தவர் கி.வா.ஜ. அன்னார் மறைந்தபோது நீதிபதி மு.மு. இஸ்மாயீல், 'கலைமகள் தன் ஆசிரியரை இழந்துவிட்டது. கலைமகளோ தன் அருமைப் புதல்வரில் ஒருவரைத் தன்னிடம் அழைத்துக் கொண்டு விட்டாள்' என வருந்தினார் (கலைமகள், நவம், 1988, ப.29). தன் இறுதிமூச்சுவரை கலைமகளுக்காகவே வாழ்ந்தவர் கி.வா.ஜகந்நாதன்.

## இலக்கியங்களில் நாட்டம்

கி.வா.ஜகந்நாதன் இலக்கியக் கடலின் ஆழங்கண்டு மூழ்கி முத்தெடுத்தவர். 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையம்' எனத் தான் பெற்ற இலக்கிய இன்பத்தை இவ்வையம் முழுதும் பெற வேண்டும் என்ற ஆர்வத்தால், தமிழ் இலக்கிய நூல்கள் பல வற்றையும் எளிமையாக்கிக் கட்டுரை நூல்களாக அளித்துள்ளார். கட்டுரை நூல்களோடு சிறுவர்க்கான இலக்கியங்களும், பயண இலக்கியங்களும், நாடோடி இலக்கியங்களும் வெளியிட்டுள்ளார்.

'தமிழ்நூல் அறிமுகம்' என்ற நூலில் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு நூல்களை அறிமுகம் செய்யும் முகமாக அவற்றுள் சில இலக்கியக் காட்சிகளைச் சொல்லோவியமாக்கியுள்ளார். 'சங்கநூற் காட்சிகள்' சங்க இலக்கியங்கள் பற்றியது. 'வீரர் உலகம்' புறநானூற்று விளக்கமாக அமைந்தது. அந்நூல் சாகித்திய அக்காதெமி பரிசு பெற்றது. 'கற்பக மலர்' திருக்குறளில் தெய்வம் பற்றிய கருத்துகள் வருமிடத்தைத் தொகுத்துரைக்கிறது. 'முல்லை மணம்' தனிப்பாடல்களின் சுவைகளைக் கூறுவது. இலக்கண இலக்கியங்களில் பேசாத பேச்சின் கோலங்களை எல்லாம் தொகுத்துப் பதினாறு கட்டுரைகளாக்கி வெளியிட்டது 'பேசாத பேச்சு'. உரையாசிரியர்களின் உரைமூலம் கிடைத்த செய்திகளைத் தொகுத்துக் 'கன்னித் தமிழ்' நூலாக்கினார். புறநானூற்றுப் பாடல்களை ஒட்டிய வரலாறுகள், தனிப்பாடல்களை ஒட்டிய வரலாறுகள் ஆகியவற்றைத் திரட்டித் 'தமிழின் வெற்றி' யாக்கியுள்ளார். பழைய நகைக்குப் புதுமெருகு கொடுத்து அதற்கு ஒளியுண்டாக்குமாறு போன்று இலக்கியங்களில்,

உரைகளினிடையே இலைமறைகாயாக, வெளிப்படையாக உள்ள செய்திகளைப் புதுமெருகோடு அளிப்பது 'புதுமெருகு'. 'வாழ்வரசி' என்ற கட்டுரைத் தொடர் பழந்தமிழர் வாழ்வு, உள்ளம், நாடு, வீடு என்பன அமைந்திருந்த வகையினை விரித்துரைப்பது. 'எல்லாம் தமிழ்' நன்னனுக்குப் 'புலவர் இட்ட சாபம்' முதல் 'பரதேசியின் உபாயம்' வரை பத்துக்கட்டுரைகள் கொண்டது. அவர் எழுதாத இலக்கியம் தமிழில் இல்லை, எடுத்துரைக்காத தமிழக வரலாற்று நிகழ்ச்சி இல்லை எனுமாறு, அன்னாரது இலக்கியக் கட்டுரைகள் அனைத்தையும் உள்ளடக்கி உள்ளன.

'ஜோதிமாமா' என்ற பெயரில் அன்னார் படைத்த குழந்தை இலக்கியங்களாவன: கிழவியின் தந்திரம், கவிஞர் கதை, சின்னராஜா, அதிசயப்பெண், விளையும் பயிர் என்பன.

இலங்கைக்குப் பயணம் மேற்கொண்ட கி.வா. ஜகந்நாதன், அங்குத் தான் கண்டுகளித்த முருகன் திருத்தலங்களைப் பற்றிக் 'கதிர்காமயாத்திரை' என்ற நூல் படைத்துள்ளார். 'கண்டறியாதன கண்டேன்' என்ற தொடர் கட்டுரைகள், பிரான்சு, இங்கிலாந்து போன்ற நாடுகளுக்குச் சென்று அங்குள்ள இயற்கைக் காட்சிகள், கல்வி நிலையங்கள், அரும்பொருட்காட்சியகங்கள், மாட மாளிகைகள் ஆகியவற்றைக் கண்டு களித்தது பற்றியன. பாரீஸில் இலத்தீன் வளாகத்தில் உள்ள காலேஜ்-த-பிரான்ஸ் என்ற கல்லூரியில் 15-7-1970இல் தொடங்கி நடைபெற்ற உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கருத்தரங்கில் கலந்து கொண்டமை பற்றியும், அதில்தான் உரையாற்றியமை பற்றியும் குறிப்பிட்டுள்ளார். அவரது பயணக் கட்டுரைகள், உலகில் எங்குச் சென்றாலும் தன் கடன் தமிழ்ப்பணியும், இறைப்பணியும் செய்து கிடப்பதே என்பதை உணர்த்தி நிற்கின்றன.

கி.வா. ஜகந்நாதன் ஏட்டிலக்கியங்களில் மட்டுமன்றி வாய்மொழியாக வழங்கும் பாட்டிலக்கியங்களிலும் நாட்டம் கொண்டதனால், ஆயிரத்துக்கும் மேற்பட்ட நாட்டுப்புறப் பாடல்களைத் தொகுத்துள்ளார். 'கஞ்சியிலும் இன்பம்', 'மலையருவி', 'நாடோடி இலக்கியம்' என்ற நூல்களைப் படைத்தளித்துள்ளார். 'கன்னித்தமிழ்' நூலிலுள்ள 'உழவர் மொழி' என்ற கட்டுரை உழவரது பழமொழிகள் பற்றியது. பழமொழிகளில் ஆர்வங் கொண்டதால் 22000 பழமொழிகளைத் தேடித் தொகுத்து நூலாக்கியுள்ளார். முறையான நாட்டுப்புற ஆய்வுக்கு, அவரது நூலான 'மலையருவி' வழிவகுக்கும் என்பது நிர்மலா மோகன் கருத்து.

நாடோடிப் பாடல்களை அப்படியப்படியே சொல்வதை விட ஒரு நிலைக்களத்தை அமைத்துப் பொருத்திக் காட்டினால் தமிழ்நாட்டார் அவற்றில் ஈடுபடுவார்கள் என்று எண்ணி.... இலக்கியத்தோடு ஒப்பிட்டு இவற்றினிடையே உள்ள வேறுபாடுகளை எடுத்துக்காட்டு முகமாக அமைந்தது 'நாடோடி இலக்கியம்' நூல் என அந்நூலின் முன்னுரையில் கி.வா.ஜ. குறிப்பிட்டுள்ளார். அதில் 'பாட்டி கதையும் பாட்டும்' என்ற இரண்டாவது கட்டுரை, நெடுநல்வாடைக் காட்சியைச் சித்திர மாக்கிச் செவிலியைப் பாட்டியாக்கி அமைவது. செவிலி தலைவி உரையாடல் மூலம் குறியவும் நெடியவுமான பொருள் பொருந்தாத பொய்ம்மொழிக் கதைகள் அவ்விலக்கியத்தில் இடம் பெறுவது போன்று இக்கட்டுரையின்கண் பழங்கதை, விடுகதைகள் பாட்டியால் கூறப்பெற்றுள்ளன. ஏட்டளவில் உள்ளது இலக்கியம்; வாய்மொழிப் பாட்டளவில் உள்ளது நாடோடி இலக்கியம் என்பது இதன்மூலம் உணர்த்தப் பெறுகிறது. சோம்பேறிக் கணவனுக்கு வாழ்க்கைப்பட்ட மனைவியின் செயலை நாடகம் போல் பாட்டாக உரைப்பது 'வீரமுள்ள வீராயி'. அத்தைமகள் ரத்தினத்துக்குப் பரிசம் போடவிருக்கும் வேலையனும், அவன் தோழன் சுப்பையனும் மாறிமாறிப் பாடும் ஏற்றப்பாட்டு இடம்பெற்றுள்ளது. கணவன் வந்துவிட, காதலனை விரட்ட எண்ணிய மனைவி குறிப்பாகப் பாடிய அடிகள் நகைச்சுவை ஊட்டுவன.

> **தண்டெடுத்தார் தடியெடுத்தார் தாமேபுறப்பட்டார்**
> **மணிகட்டி மாடுகளா! நாக்கைப்பிடித்து ஓடுங்கள்**

என்பன அந்த அடிகளாம்.

வாய்மொழி வழக்குகளில் தம் உள்ளத்தைப் பறி கொடுத்த கி.வா. ஜகந்நாதன், அவை மறைந்து விடக்கூடாது என்பதைக் கருத்தில் கொண்டு அவற்றை ஏட்டில் பொறித்து விட்டார் என்று கூறினால் அது மிகையாகாது.

## இலக்கண வல்லுநர்

தமிழ் இலக்கியங்களை எழுத்தெண்ணிப் படித்த கி.வா.ஜகந்நாதன் இலக்கணங்களையும் ஆழ்ந்து கற்றவர். எழுத்து, சொல், யாப்பு, அணி என்ற ஐந்திலக்கணங்களிலும் வல்லுநர் என்பது அவர் எழுதிய நூல்கள், கட்டுரைகளிலிருந்து தெரிய வருகிறது.

'பயப்படாதீர்கள்' என்ற நூல் தொல்காப்பிய எழுத்து இலக்கணம் பற்றியது. 'எழுத்து விசித்திரம்' என்ற கட்டுரை பழங்காலத் தமிழ் எழுத்துகளின் உருவத்தை விளக்குகிறது (பக்.61-67). 'எழுத்துக் குடும்பம்' என்ற பிரிவில் எழுத்துகளின் உறவுகளைக் குடும்ப உறவுகள் மூலம் விளக்கியுள்ளார்.

தொல்காப்பியச் சொல்லதிகாரம் பற்றிய நூல் 'வாழும் தமிழ்'. இதில் 32 கட்டுரைகள் அடங்கியுள்ளன. இலக்கண ஆசிரியர்கள் வாழ்வை ஆராய்ந்தவர்கள் என்பதைக் 'கேள்விகள்' என்ற கட்டுரை குறிப்பிடுகிறது (பக்.17-23). பேச்சுக் குறிப்பு பலவிதமாக இருக்கிறது. அவற்றை ஆராய்ந்து ஆறுவிதமாகப் பிரித்த இலக்கண நூலாசிரியர் வெறும் வார்த்தைகளை ஆராய்ந்தவராகத் தோன்றவில்லை. வார்த்தைகளுக்குப் பின்னே உள்ள வாழ்வையே ஆராய்ந்துள்ளனர் எனக் குறிப்பிட்டுள்ளார். இடக்கரை அடக்கியும், அமங்கலத்தை மங்கலமாக்கியும் பேசும் தமிழரின் பேச்சு நாகரிகத்தைப் 'பேச்சில் அழகு' என்ற கட்டுரையின் கண் விளக்கியுள்ளார்.

தமிழ்நூல் அறிமுகம், சங்க நூற்காட்சிகள் என்ற நூல்களில் அகவிலக்கியங்கள், புற இலக்கியங்களைத் திணை, துறையோடு அவர் விளக்கும் வகையால், கற்போர் அவற்றைப் புரிந்து கொள்ள இயலுகிறது. 'அறத்தொடு நிற்றல் துறைக்கும், 'கையறுநிலைத்' துறைக்கும் அவர் கூறும் சான்றுகள் உள்ளத்தில் ஆழப் பதிவன.

பழந்தமிழ் இலக்கண நூலான வீர சோழியத்தில் காப்பிய இலக்கணத்தைத் தேடிக் கண்டவர்,

'கோப்பிற் பொருளன காப்பிய மாகும்' என்ற நூற்பா வினை எடுத்துக்காட்டி, அதற்கு உரையாசிரியர், 'காப்பியமாவது பெருநூலாம்' எனக் கூறிய விளக்கத்தையும் அளித்துள்ளார்.

யாப்பிலக்கணம் கற்றால்தான் கவிபாடலாம் என்றெண்ணி அஞ்சியோர்க்காகக் 'கவிபாடலாம்' என்ற நூலை எழுதி 1978ஆம் ஆண்டு தைப் பொங்கலன்று அதனை வெளியிட்டுள்ளார்.

**காரிகை கற்றுக் கவிபாடுவதினும்**
**பேரிகை கொட்டிப் பிழைப்பது மேல்**

என்பது பழமொழி. அம்மொழியை மாற்றிக் காரிகையைக் கற்காமலே எவரும் கவிபாடலாம் என்பதற்கு ஊக்கம் அளித்தவர் கி.வா.ஜகந்நாதன்.

திணை இலக்கியங்களுக்கு நயம் சேர்ப்பவை உள்ளுறையும், இறைச்சியுமாம். இரண்டன் வேறுபாட்டையும் நுண்மையாக அறிந்த அவர், கைந்நிலைப் பாடல் ஒன்றில் அமைந்துள்ள இறைச்சியை எடுத்துக் காட்டியுள்ளார்.

**வெந்த புனத்துக்கு வாசம் உடைத் தாகச்**
**சந்தனம் ஏந்தி அருவி கொணர்ந்து இடூஉம்**
**வஞ்சமலை நாடன்**

என்ற அடிகளுக்குப் பொருள் கூறும் அன்னார், "தலைவியினுடைய மனம் வெந்த புனம் போல இருக்கிறது; குளிர்ச்சி இல்லை. தலைவன் அருவி போல வந்து அவளுக்கு இன்பமாகிற நறுமணத்தை ஊட்ட வேண்டியவன். ஆனால் அப்படிச் செய்யவில்லை. . . . தலைவன் இன்னது செய்கிறான் என்பதை இது குறிக்கவில்லை. என்ன செய்ய வேண்டும் என்பதைப் புலப்படுத்துகிறது. அவன் செய்வதற்கு உவமையாக இருந்தால் உள்ளுறை உவமம். அவன் அருவியைப் போல இருந்தாலும் இனி இது செய்ய வேண்டும் என்பதை மேலே ஆய்ந்து கொள்ளும்படி அமைந்திருப்பதால் இது இறைச்சி ஆகும்" என்பது அவர் கூற்று. உள்ளுறைக்கும் இறைச்சிக்கும் உள்ள நுண்ணிய வேறுபாட்டினை எளிய சொற்களில் விளக்கிவிட்டார்.

பலாப்பழத்தைத் தோலுரித்துச் சுளையைத் தருவது போல இலக்கணத்தின் சாரத்தை எடுத்துச் சுவையாகத் தர வல்லவராகக் கி.வா.ஜ. விளங்கினார்.

### சிறந்த சிறுகதையாசிரியர்

மாந்தரது வாழ்வைக் கூர்ந்து நோக்கும் திறன் பெற்றவராத லால், கி.வா.ஜகந்நாதன் தம் கற்பனை கலந்து கதை படைக்கும் திறனையும் பெற்றவராக விளங்கினார். அன்னாரது சிறுகதைத் தொகுப்புகளாவன: கலைஞன் தியாகம், பவழ மல்லிகை, அறுந்த தந்தி, நீலமணி, கலைச்செல்வி, வளைச்செட்டி, அசையாவிளக்கு, குமரியின் மூக்குத்தி, பூக்காரி என்பன. கலைஞன் தியாகமும், பவழமல்லிகையும் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் பரிசு பெற்றவை.

'பாசம்' (பவழமல்லிகை) சிறுகதை தாயுள்ளத்தின் கனிவைக் கூறுவது; 'நீலமணி' (நீலமணி) என்ற சிறுகதை வறுமைக் கொடுமையால் தீட்சிதர் ஒருவர் இறைவன் திருவுருவில் புதைக்கப் பட்டிருந்த நீலமணிகளை விற்றது பற்றியது; பிச்சைக்காரிக்கும் கற்பு உண்டு என்பதை விளக்குவது 'அவள்' (கலைஞன் தியாகம்).

அவர் எழுதிய பின்வரும் சிறுகதைகள் கலைமகள் தீபாவளி மலரில் இடம் பெற்றுள்ளன:

பகையுற்ற இரு குடும்பங்கள் தம்பகை தீர்ந்து காதலர் களாகிய தம் மக்களை இணைத்து வைத்தது பற்றிய சிறுகதை 'பகை தீர்த்த திருமணம்' (1985). தனக்கு மணம் பேசப்பட்டிருந்த பெண் தன்னுயிரைத் தேர்க்காலில் கொடுத்துத் தியாகம் செய்து, இரு ஊராரின் பகைமையுணர்வைப் போக்கியதைக் கதை சொல்லியான சாமியாரே கூறுவதாக அமைந்த கதை 'உயிர்ப்பலி' (1981). எல்லோருமே பணத்தை எட்டிப்பிடிக்க முயலுகிறார்கள் என்பது வைத்தியநாத முதலியாரின் அசைக்க முடியாத நம்பிக்கை. அந்த நம்பிக்கை அறியாப் பருவத்துச் சிறுவர்கள் விளையாடிய இருகாட்சிகளைக் கண்ட பின்னர்த் தகர்ந்தது. சேரிக்குழந்தைகள் முதலாளிகள் போலப் பாவனை செய்து நடித்துக் கொண்டிருந்தனர். செல்வர் வீட்டுச் செல்வங்களோ டொம்பங் கூத்தாடியாகவும், குருட்டுப் பிச்சைக்காரனாகவும் நடித்து விளையாடினர். அவர் மகனே குருட்டுப் பிச்சைக் காரனாக நடித்தான். 'எல்லோரும் மேல்தளத்தை எட்டிப்பிடிக்க ஆசைப்படுகிறார்கள்' என்று இதுவரை வைத்தியநாத முதலியார் எண்ணியிருந்தார். குழந்தைகள் ஏன் இவ்வாறு நடிக்கிறார்கள் என்பது அவருக்குப் புரியவில்லை என்பதை விளக்குவது 'விளங்கவே இல்லை' சிறுகதை. பூனைக்குட்டியிடமும் தாய்ப் பூனையிடமும் அன்பு பாராட்டும் தன் நண்பர் சங்கரன், தன் உடன் பிறந்த தங்கையிடம் மட்டும் ஏன் வெறுப்பைக் கொட்டுகிறார் என்பது தனக்குப் புரியவில்லை என்பதைக் கூறும் கதை 'புரிந்ததும் புரியாததும்' (1975).

மேற்கூறிய சிறுகதைகளில் மாந்தர்தம் உணர்ச்சிச் சித்திரிப்புகள் இடம்பெறுகின்றன. மாந்தருக்குள் பகை கூடாது; பணமே முதன்மையானது அன்று; பாசமும் நேசமும் மனிதர்க்கு இன்றியமையாத பண்புகள் என அவை வலியுறுத்துகின்றன.

காக்கைகளைப் பற்றியது ஒரு சிறுகதை. தம்மை அருவருத்து ஒதுக்கும் மாந்தரால் வருத்தமுற்ற காக்கைகள் நாரதரிடம் முறையிட, அவரது அறிவுரைப்படி அவை கதிரவன், சிவன், பிரம்மனிடம் சென்று மூவகைப் பேறுகளைப் பெற்றன பற்றியது அச்சிறுகதை. கதிரவன் ஒரு காக்கைக்குச் சனியின் வாகனமாக இருந்து நீத்தார் பலியுணவைப் பெறுமாறு அருளினான். சிவன் ஒரு காக்கைக்குச் சாம்பலைக் கழுத்தில் பூசி அவ்வுறுப்பை வெண்மையாக்கினார். பிரம்மன் மனைவி வாணி,

வீணைநரம்பெடுத்து ஒரு காகத்தின் நாவில் தடவினாள். அது கூ! கூ! கூ! வெனக் கூவ ஆரம்பித்தது. காக்கையின் கூட்டில்தான் குயில் முட்டையிடுகிறது. பிற காக்கைகள் அண்டங் காக்கைகள் ஆயின. பறவை பற்றிய இந்தக் கதையிலும் கி.வா.ஜ. ஒரு நீதியைப் பொதிந்துள்ளார். இறைவனை அடைந்தால் மேன்மையுறலாம் என்பதே அது (கூ! கூ! கூ! 1965). கி.வா.ஜகந்நாதனின் சிறுகதைகள் பலதளங்களில் கால்கொண்டு, வாழ்வின் நிதர்சனங்களையும், இலட்சியங்களையும் உணர்த்துகின்றன.

### கவிதையாற்றல்

இலக்கண அறிவு பெறாத இளமைக் காலத்திலேயே எதுகை, மோனை ஓசையழகு அமையக் கவிபாடும் ஆற்றலைக் கி.வா. ஜகந்நாதன் பெற்றிருந்தார். தாம் பிறந்து வளர்ந்த ஊரான கிருஷ்ணராயபுரத்து மக்கள், மாலையில் திருக்கோயிலில் இறைவனை வழிபட்டுவிட்டுத் திரும்பும் காட்சியைப் பதினோரு வயதிலேயே கவிதையாக வடித்துள்ளார்.

**மன்றிலே காலை வைத்து மன்றிலே நடனம் செய்த**
**மன்றுளெம் பெருமான் தன்னை வாழ்த்தியே செல்வ மான**
**கன்றுகள் தாயை விட்டுக் கண்களில் நீரை வார்த்துச்**
**சென்றது போலுந் தாங்கள் சேர்ந்தன ரகங்கள் மன்னா!**

என்பது அந்தப் பாடல் (கலைமகள், நவம்.1988, ப.63).

'மேகமண்டலம்' என்ற கவிதைத் தொகுதி கி.வா.ஜகந்நாதனின் கவிதையாற்றலுக்குச் சிறந்த சான்றாக விளங்குகிறது.

**குனிந்து குனிந்து மனம்–மிகக்**
**கோழையா னோர்களையே**
**முனைந்து நிமிர்ந்து நிற்க–எரி**
**மூட்டிக்கவி வளர்ப்போம்**

எனத் தன் கவிதைக் கனல்மூலம் மக்களைத் தட்டிஎழுப்பப் பாடும் இப்பாடல் அதில் இடம் பெற்றுள்ளது.

ஆசுகவி பாடுவதிலும் தேர்ச்சி பெற்றவராகக் கி.வா. ஜகந்நாதன் விளங்கினார். புனாவை அடுத்த பார்வதி மலையிலிருந்து முருகனை வழிபடச் சென்றபோது, மகாராட்டிரத்துப் பெண்களும், பிறவடநாட்டுப் பெண்களும் கார்த்திகேயர் மணமாகாதவர் என்று கருதியதால், அவரை வழிபட்டால் அவர் பற்றிக் கொள்வார் என்பதால் வழிபடுவதில்லை என்று கேள்வியுற்றார். அம்முருகனை வழிபட்ட உடன் பிறந்த பாடலாவது:

புண்ணியமா நகர்தன்னில் ஓங்கும் குன்றில்
பொலிகின்ற தேவதே வேசன் கோயில்
நண்ணியொளிர் ஆறுமுகத் தேவே மஞ்ஞை
நற்பரிமீ தமர்ந்தருளும் கார்த்திகேயா
பெண்ணினத்தில் தமிழ்நாட்டு வள்ளி தன்னைப்
பெட்புற்றுப் பார்த்ததிரு விழியால் ஈங்கே
அண்ணுமடந் தையர்தம்மைப் பாரே னென்னும்
அதனாலோ அவர்பாராத தெய்வம் ஆனாய்?

எனப் பாடினார். வள்ளியைப் பார்த்த திருவிழியால் பிறமாதரைப் பாராதிருக்கிறாயோ என்ற பொருள் கொண்ட இப்பாடலை உடனிருந்த நண்பர்கள் பாராட்டினர். 'அவர்கள் கட்டிவிட்ட கதைக்கு என் கற்பனை தாழ்ந்தது' எனத் தாம் பாட நேர்ந்த சூழலைக் கூறினார் (பெரும்பெயர் முருகன், பக்.111-114).

கவிதையில் சிலேடை அமையுமாறு பாடுவது கி.வா. ஜகந்நாதனுக்குக் கைவந்த கலை. நண்பர் சீதாபதியின் அழைப்புக் கிணங்க கொல்கொத்தா சென்றிருந்தபோது பழையதுக்கும், காஃபிக்கும் சிலேடை அமையுமாறு பாடினார். நா.ரா. முருக வேளுடன் இலங்கைக்குச் சென்றிருந்த போது இட்டிலிக்கும் சிவபெருமானுக்கும் சிலேடை பாடினார் (செய்யுளில் சிலேடை).

தன் நண்பர்கள், அன்பர்கள் பிறந்தநாளுக்கு வாழ்த்துக் கவிதைகள் பாடுவது அன்னாரது இயல்பாகும். அவற்றைத் தொகுத்தால் ஒரு நூலாகிவிடும் என ம.பொ.சிவஞானம் பாராட்டியுள்ளார் (கலைமகள், நவம்., 1988, ப9).

'ஜோதி' என்ற பெயரில் எண்ணற்ற பாடல்களை, கீர்த்தனைகளைக் கி.வா.ஜகந்நாதன் இயற்றியுள்ளதாக எஸ்.விரமணி கூறுகிறார் (கலைமகள், நவம்., 1988, ப.63). கற்பகம், பராசக்தி, ஆத்மசக்தி, தமிழ்நாடு ஆகிய இதழ்கள் இளைஞர் கி.வா.ஜ.வின் கவிதையாற்றலை ஊக்குவித்தன எனின், கலைமகள் இதழ் அவரைக் கவிஞராக்கிச் சிறப்பித்தது.

## பேச்சாற்றல்

எளிய தமிழில் எழுதும் திறன் பெற்ற கி.வா. ஜகந்நாதன் தமிழ்ப்புலமையுடன் பேசும் திறனும் பெற்றவர். அவர் வாய் திறந்தால் இலக்கிய சமயப் பிரசங்கம் குற்றாலத்து அருவியெனப் பொழியும் என்று கா.ஸ்ரீ.ஸ்ரீ. போற்றிக் கூறியுள்ளார். அவரது சொல்லாற்றலைக் கண்ட காஞ்சி காமகோடி பீடாதிபதிகள், 'வாகீச கலாநிதி' என்ற பட்டமளித்து அன்னாரைச் சிறப்பித்தார்.

அன்னாருடைய பேச்சின் தனித்தன்மை பற்றிக் குறிப்பிடும் மு.மு.இஸ்மாயீல், 'அவர் எடுத்துக் காட்ட விரும்பிய பொருளை விளக்குதற்குப் பொருத்தமான இலக்கிய மேற்கோள்கள் அவர் சிந்தனையில் நர்த்தனமாடிக் கொண்டிருக்க, அவை அற்புதமாக அவரது சொல்லில் வெளிப்படும்' என்ற தம் கூற்றுக்கிணங்க, கி.வா.ஜ.வின். சொல்லாற்றல் வெளிப்பட்ட பான்மையையும் எடுத்துக்காட்டியுள்ளார் (கலைமகள், நவம், 1988, ப. 29).

கருத்துச்செறிவுடன் பேசவல்ல அன்னார் நகைச்சுவை யுடனும் பேச வல்லவர். பள்ளியில் நடைபெற்ற ஓர் இலக்கியக் கூட்டத்தில் 'எழுத்துலகின் முடிசூடா மன்னர் இவர்' என்று கூறி வரவேற்றபோது, 'என்னை முடிசூடா மன்னர் என்றார். இதோ முடி இருக்கிறதே' என்று தம் வழுக்கைத் தலையைச் சுட்டிக் காட்டியவுடன் அரங்கமே சிரிப்பொலியால் அதிர்ந்தது (கலை மகள், டிசம்., 1988). பிறிதோரிடத்தில் பேசுகையில் ஒலிபெருக்கி பழுதுபட்டது. உடன் மாற்று ஒலிபெருக்கி பொருத்தப் பெற்றது. அதுவும் சற்று நேரத்தில் பழுதுபட்டது. கி.வா. ஜகந்நாதன், 'இம்மைக்கும் சரியில்லை. அம்மைக்கும் சரியில்லை' என்று கூறச் சிரிப்பொலி எழுந்தது (குங்., 23-4-2004, ப102).

மேடைகளில் மட்டுமன்றிப் பிறருடன் உரையாடும் போதும் நகைச்சுவை விருந்தளிப்பவர் கி.வா.ஜகந்நாதன். ஒருமுறை காரைக்குடி கம்பன் விழாவில் அனைவர்க்கும் காஃபி அளிக்கப் பட்டது. தூத்துக்குடி வழக்குரைஞரும், கம்பராமாயணத்தில் ஈடுபாடு கொண்டவருமான பால்நாடார் பால் கேட்க, 'உங்களைப் பால் நாடார் என்று சொல்கிறார்கள். இப்போது பாலை நாடுகிறீர்களே' என முரணமையக் கூறி அனைவரையும் சிரிக்க வைத்தார்.

இந்தியாவில் ஏறாத மேடையில்லை, பேசாத கழகமில்லை எனுமாறு வலம் வந்த கி.வா.ஜகந்நாதன், இலங்கை, பர்மா, மலேசியா, சிங்கப்பூர், அமெரிக்கா, பிரான்சு, ஐரோப்பா போன்ற அயல்நாடுகளிலும் பயணம் மேற்கொண்டு தம் நாவன்மையை மெய்ப்பித்தார்.

### உரையாசிரியர்

கி.வா. ஜகந்நாதன் சிறந்த உரையாசிரியராகவும் திகழ்ந்தார். இலக்கிய இலக்கணத்தின் சாரத்தைச் சுவைப் பழமாகப் பிழிந்து, வாழ்வின் மறைமுகமான நுணுக்கங்களையும், ரசபேதங்களையும் குழந்தைக்கும் விளங்கும் மிக எளிமையான ஆற்றோட்டமான

நடையில் விளக்கும் ஈடு இணையற்ற உரையாசிரியராகக் கி.வா.ஜ. விளங்குவதாகக் கா.ஸ்ரீ.ஸ்ரீ. குறிப்பிட்டுள்ளார் (கலைமகள், டிசம்., 1988, ப.25). பொருநராற்றுப்படையில் இடம்பெறும்,

**ஆறலை கள்வர் படைவிட அருளின்**
**மாறுதலை பெயர்க்கும் மறுவின் பாலை**

என்ற அடிகளுக்கு விளக்கம் கூறப் புகுந்த கி.வா.ஜ., பாலைக் காட்சியை நாடகக் காட்சியாக்கி அளித்துள்ளார். 'பாலை நிலம், ஒருபொருநன், அவனுடைய மனைவியாகிய விறலி, அவர்களின் சுற்றத்தினர் ஆகியவர்கள் போய்க் கொண்டிருக்கிறார்கள். விறலி தன் கையில் ஒரு யாழைத் தாங்கி இருக்கிறாள். பட்டினிப் பட்டாளமாகிய அவர்கள் தங்கள் கலையைச் சுவைக்கும் வள்ளல் எங்கே இருக்கிறான் என்று தேடிச் செல்லுகிறார்கள். திடீரென்று சில வழிப்பறிக்காரர்கள் அங்கே வருகிறார்கள். யாழின் மேல் அவர்கள் கண்கள் செல்கின்றன. ஒருவன் கேட்கிறான்:

'என்ன அது?'

'இதுவா? இது யாழ், இதன் குடம் இது
இதற்குள் ஒன்றும் இல்லை'

'யாழ் என்றால்?

'இசை எழுப்பப் பயன்படுவது
இந்த நரம்புகளை மீட்டி இசை பாடலாம்'

'எங்கே செய்து காட்டு; பார்க்கலாம்'

விறலி யாழைச் சுருதி கூட்டிப்பாட, பாலை நிலத்தில் இன்னிசை அலை பாய, அவர்கள் கையில் உள்ள ஆயுதங்கள் தாமே நழுவுகின்றன. அவை மட்டுமா? அவர்கள் உள்ளத்திலுள்ள கொடுமையும் நழுவுகிறது. தம்மை மறந்து கேட்கிறார்கள் என இரு அடிகளுக்கு உரை விளக்கம் அளித்துள்ளார் (தமிழ் நூல் அறிமுகம், பக்.20-21). கற்போர் உள்ளத்தில், நாடகக் காட்சியாக இப்பாலைக் காட்சி பதிந்து விடுமாறு செய்யும் ஆற்றல் அன்னாரது உரை விளக்கத்திற்கு உள்ளது. நற்றிணையில் 34ஆவது பாடலில் வரும்,

**முருகே! நாடன் மார்புதர வந்தநோய்**
**அண்மை அறிந்தும் அண்ணாந்து சூடி**
**வேண்ட வந்தோய்! மடவை**

என்ற அடிகளுக்கு அவர் அளிக்கும் விளக்கவுரையானது, ஒரு சிறுகதையைப் படிப்பது போன்ற உணர்ச்சியை வாசகர்க்குத் தோற்றுவிக்கிறது (சங்கநூற் காட்சிகள், பக்.68-76).

இலக்கியங்களுக்கு மட்டுமேயன்றி, இலக்கணங்களுக்கும் எளிமையாக உரைதர வல்லவர் கி.வா.ஜகந்நாதன். புணர்ச்சி விதியை விளக்க வந்தவர், நிலைமொழியை மனைவியாகவும், வருமொழியைக் கணவனாகவும் உவமித்து, கற்புள்ள பெண், தன் கணவனுக்கு உரிய இணையாக மாறுவது போன்று, நிலைமொழி ஈறும் வருமொழிக்கு இயைய மாறுகிறது என விளக்கியுள்ளார்.

மர (ம்) ஞ் + சாய்ந்தது

இவ்வாறு வாழ்வோடு இணைத்து விளக்கவுரை அளிப்பது அவர்தம் தனிச்சிறப்பாகும்.

## ஆய்வு நோக்கு

சென்னைப் பல்கலைக்கழகத்தில் உ.வே.சாமிநாத ஐயரின் மாணவராக இருந்து 'தமிழ்க் காவியங்கள்' என்ற பொருளில் முனைவர் பட்டத்திற்கு ஆய்வு செய்து, அதனை நூலாகக் கி.வா.ஜகந்நாதன் வெளியிட்டார். காப்பியங்களில் ஆய்வு மேற் கொள்வோர்க்கு அந்த நூல் முன்னோடியாகும்.

'தமிழ்க் காவியங்கள்' ஏழு பிரிவுகளை உடையது. முதல் ஐந்து பிரிவுகள் காப்பிய இலக்கண வரலாறு பற்றியன. இறுதி இரு பிரிவுகள் காப்பிய இலக்கியங்கள் பற்றியன. முதல் ஐந்து பிரிவுகளில் தொல்காப்பியம், யாப்பருங்கலவிருத்தி, விரசோழியம் முதலிய பல நூல்களில் காணப்படும் காப்பிய இலக்கணங்களை யெல்லாம் ஒழுங்குபடுத்தித் தொகுத்து அமைத்துள்ளார். ஆறாவது பிரிவில் தமிழ்க் காப்பியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை, சிந்தாமணி, சூளாமணி ஆகிய வற்றைப்பற்றி விளக்கியுள்ளார்.

ஏழாவது பிரிவான 'பழமையும் புதுமையும்' என்பது பண்டைக்காலம் முதல் இன்றுவரை காவியங்கள் வளர்ச்சி யடைந்த வகைபற்றிக் குறிப்பிடுவது. பழங்காப்பியங்களாக இராமாயணம், மகாபாரதம், தகடூர் யாத்திரை என்பனவற்றைக் கூறி, அவற்றையடுத்துச் சிலம்பும், மேகலையும், பின்னர், பெருங்கதை, சிந்தாமணி, சூளாமணி, அவற்றைத் தொடர்ந்து பாரதவெண்பா, கம்பராமாயணம், பாகவதம், பெரியபுராணமும்

பிற புராணங்களும் பிற காப்பியங்களும் தோன்றின என்று வரிசைப்படுத்தியுள்ளார்.

அந்நூலில் முத்தாய்ப்பாக வருங்காலத்தில் காப்பியங்கள் எவ்வாறு அமைதல் வேண்டும் என எடுத்துரைத்துள்ளார். 'எளிய நடை, எளிய கதை, ஆழ்ந்த பாவங்கள், சிறந்த கற்பனைகளுடன்... சொல்லைக் காட்டிலும், பொருள், யாப்பைக் காட்டிலும், கருத்து, கதையைக் காட்டிலும் கதையின் லக்ஷியம் சிறந்திருக்க வேண்டும்' என முடித்துள்ளார். படைப்பாளிகள் உயர்ந்த குறிக்கோளைக் கொண்ட காப்பியங்களையே படைத்தளிக்க வேண்டும் என்பது அன்னார் கருத்து.

கம்பனையும் இளங்கோவையும் ஆழ்ந்து கற்றவர் கி.வா. ஜகந்நாதன். இருவர் கற்பனையும் தனித்தன்மை வாய்ந்தவை என விளக்கியுள்ளார். கண்ணகியும் கோவலனும் கவுந்தியடிகளுடன் மதுரைக்கு வருகையில் அங்குக் கட்டப்பட்டிருந்த கொடிகள் அவர்களை 'வாரல்' என்று கூறித்தடுத்தன என்பது சிலம்பின் சித்திரிப்பு. மிதிலையில் இராம இலக்குவர் நுழைந்தபோது அங்குக் கட்டப்பட்டிருந்த கொடிகள் 'வருக' என அவர்களை வரவேற்றன என்பது கம்பன் காட்டும் காட்சி. இவ்விரு காட்சிகளையும் விளக்கும் கி.வா.ஜகந்நாதன், மதுரையில் கம்பத்தின் உச்சியில் கட்டப்பட்டிருந்த உயர்ந்த கொடி பக்கவாட்டில் ஆடிக் கண்ணகி கோவலனைத் தடுத்தன. மிதிலையில் கயிற்றில் தோரணம் போலத் தொங்கவிட்டுக் கட்டப்பட்டிருந்த கொடிகள் கீழ்நோக்கி முன்னும் பின்னும் அசைந்து வரவேற்றன. எனவே இளங்கோ, கம்பர் இருவர் கற்பனையும் தனிப்பட்டவை என விளக்கம் அளித்துள்ளார் (திரு. கி.வா.ஜ.மணிவிழா மலர், 1966, பக்.34-35). இதிலிருந்து தற்குறிப்பேற்ற அணி நயம்பட அமைந்த இரு சித்திரிப்புகளிலும் உள்ள நுட்பமான வேறுபாட்டினை ஆய்வுக் கண்ணோட்டத்துடன் அணுகியவர் கி.வா.ஜகந்நாதன் என்பது புலனாகிறது.

ராஜாஜி, 'பெரியாழ்வாரே ஆண்டாள்' என்று எழுதிய போது, பலரும் கண்டனக் குரல் எழுப்பிப் பக்கம் பக்கமாகத் தம் மறுப்பைத் தெரிவித்தனர். கி.வா.ஜகந்நாதன், 'இன்னாரின் மகன் அல்லது இன்னாரின் மகள்' என்று கூறுவது தமிழ்ப் பண்பாட்டு மரபு. 'வில்லிபுத்தூர்க்கோன் கோதை' என்றால் 'பெரியாழ்வார் மகள் கோதை. வேறு பொருள் தேற வழியே இல்லை' எனக் கூறி மறுப்புத் தெரிவித்தார். பெரியாழ்வார் பாடல்கள், ஆண்டாள் பாடல்கள் இரண்டும் வேறுபட்ட கரு,

உரு, நடை, சொல்லாட்சி உடையன எனத் தெரிந்து தேர்ந்தமையால் தான் அவரால் இவ்வாறு மறுக்க முடிந்தது. இதுவும் அவரது ஆய்வுப் பார்வைக்குச் சான்றாகிறது.

### வேத உபநிடதங்களில் தோய்ந்தவர்

கி.வா. ஜகந்நாதன், 1933இல் சென்னையில் காஞ்சி காமகோடிப் பெரியவர்கள் ஆற்றிய சொற்பொழிவினை இளமை யிலேயே பட்டோலை பிடித்தெழுதும் பேறு பெற்றவர். அவற்றை நூலாகவும் வெளியிட்டார். 1957-58இல் சென்னையில் ஆற்றிய சொற்பொழிவுகளையும் கலைமகள் அலுவலகத்தின் மூலம் இரண்டாவது தொகுதியாக வெளியிட்டார். அதன் முன்னுரையில் விரைவில் மூன்றாவது தொகுதி வெளிவர இருக்கிறது என்ற குறிப்பு காணப்படுகிறது.

இளமை முதல் அவர் பெற்ற இந்தப் பயிற்சி, வேத, உபநிடதங்களில் தோய்ந்து தெளிய ஏதுவாக அமைந்தது. அவரது தமிழ் நூல்கள் அனைத்திலும் வடநூற் கருத்துகள் காணப்படு வதற்குக் காரணம் அவர் பெற்ற இப்பயிற்சியே ஆகும்.

### புராண இதிகாசங்களில் தேர்ந்தவர்

இலக்கியங்களில் ஆழ்ந்துள்ள பொருளை விளக்க முற்படும் கி.வா.ஜகந்நாதன் அவற்றில் இடம் பெறும் புராண இதிகாசச் செய்திகளை எடுத்துக் காட்டத் தவறுவதில்லை.

கலித்தொகையின் கடவுள் வாழ்த்தில் இறைவன் பலவகை நடனங்கள் ஆட, அம்பிகை அருகிருந்து தாளம் கொட்டுதலாகிய புராணச் செய்தி இடம் பெறுவதையும், மற்றொரு கலித்தொகைப் பாடலில் இராவணன் கைலை மலையை எடுக்க, இறைவன் காலால் அமிழ்த்த இராவணன் நசுங்கி அலறுதலாகிய புராணச் செய்தி இடம்பெறுவதையும் எடுத்துரைத்துள்ளார். பழமொழி நூலில் கண்ணன் யமுனையில் விளையாடியது, பசுமாடுகளைக் காத்தது, திருமாலானாலும் குற்றம் செய்தால் பழி வந்து சேர்தல் ஆகிய புராணச் செய்திகளைக் காட்டியுள்ளார்.

இராமனுடைய துணைவனாகச் சென்று வீடணன் இலங்கைக்கு அரசன் ஆனது, இராவணன் போரில் தோற்றது ஆகிய இராமாயண நிகழ்ச்சிகள் பழமொழிப் பாடல்கள் சிலவற்றில் இடம்பெறுவது கி.வா.ஜகந்நாதனால் எடுத்துக் காட்டப்பெறுகிறது. கலித்தொகைப் பாடலொன்றில் அரக்கு மாளிகையில் பஞ்சபாண்டவர்கள் அகப்பட்டதும், அது தீப்பற்றி

எரிய அதிலிருந்த யாவரையும் வீமன் மீட்டதுமாகிய மகாபாரதச் செய்தி உவமையாக வருவதனைக் கி.வா.ஜ. குறிப்பிட்டுள்ளார். 'சண்டைக்கு எடுபிடி மாடுபிடி' என்ற பழமொழியினைக் கூறி, தொல்காப்பியம் கூறும் வெட்சிப் போரினை விளக்க முற்படும் அவர், மகாபாரதத்தில் விராட பருவத்தில் துரியனின் நண்பன் திரிகர்த்த நாட்டு மன்னன் மச்ச நாட்டு மன்னனுடைய மாடுகளைக் கவர்ந்து சென்றதும், அம்மாடுகளை மீட்க மச்ச நாட்டு மன்னனுக்குத் துணையாக விராட மன்னனும், விராட மன்னனுக்குத் துணையாகப் பஞ்சபாண்டவர்களும் சென்று மீட்டதுமாகிய மாடுபிடி போரைக் குறிப்பாகச் சுட்டியுள்ளார்.

**ஒப்பிலக்கியப் பார்வை**

வீடு தோறும் ஏடு தேடி அலைந்த உ.வே. சாமிநாத ஐயரவர்கள் உடனிருந்து இளமை முதல் பதிப்புப் பணியில் ஈடுபட்டமையால் இலக்கியங்கள் பலவற்றில் கி.வா.ஜகந்நாதன் தேர்ந்த விற்பன்னராக விளங்கினார். அதனால் இலக்கியங்களில் ஒத்த செய்திகள் காணப்பெற்றால் அவற்றைப் பிறரறிய எடுத்துக் கூறினார்.

ஔவை 'வரப்புயர' எனச் சோழனை வாழ்த்தினாள். அதனை விளக்குமுகமாக,

**வரப்புயர நீருயரும்**
**நீருயர நெல்லுயரும்**
**நெல்லுயரக் குடியுயரும்**
**குடியுயரக் கோனுயர்வான்**

எனப் பாடினாள். அக்கருத்தினையுடைய சிறுபஞ்சமூலப் பாடலை எடுத்துத் தந்துள்ளார் கி.வா.ஜ.

**வார்சான்ற கூந்தல், வரப்புயர, வைகலும்**
**நீர்சான் றுயரவே நெல்உயரும்; சீர்சான்ற**
**தாவாக் குடிஉயரத் தாங்கரும்சீர்க் கோஉயர்தல்**
**ஓவாது உரைக்கும் உலகு** (த.நூ.அ., பக்.256-257)

களவழி நாற்பது என்ற நூல், கோச்செங்கட்சோழன், சேரமான் கணைக்கால் இரும்பொறையை வென்று சிறையிலிட்ட போது அவனைச் சிறைவீடு செய்வதற்காகப் பொய்கையாரால் பாடப்பெற்றது. அச்செய்தி ஒட்டக்கூத்தர் பாடிய மூவருலாவில் காணக்கிடக்கிறது என்றார். மேலும் கலிங்கத்துப் பரணியிலும், தமிழ்விடு தூதிலும் இந்தச் செய்தி இடம் பெற்றுள்ளது என்று

கூறும் அன்னார் இச்செய்திக்கு ஆதாரம் இல்லை என்று கூறும் ஒருசார் ஆராய்ச்சியாளரும் உளர் என்பதையும் குறிப்பிட்டுள்ளார் (த.தூ.அ., பக்.180-181).

இலக்கியங்களை ஒப்புநோக்கிக் காணும் அவரது திறன் இவற்றிலிருந்து புலனாகிறது.

**நுண்கலைகளில் நாட்டம்**

நுண்கலைகள் பலவற்றில் நாட்டம் கொண்டவர் கி.வா.ஜகந்நாதன் என்பது பின்கண்டவற்றிலிருந்து தெரியவருகிறது. 'காவியமும் ஓவியமும்' என்ற நூலின்கண் காவியம், ஓவியம் என்ற நுண்கலைகளின் சிறப்பினை விளக்கும் கி.வா.ஜகந்நாதன், சங்க இலக்கியங்களிலே புகுந்தால் பல்லாண்டுகள் ஓவியம் படைக்கப் பண்டம் இருப்பதைக் காணலாம் எனக் குறிப்பிட்டுள்ளார். தன் கூற்றினை மெய்ப்பிக்கும் முகமாக, அந்நூலில் அன்னார், தான் வரைந்த சொற்சித்திரங்கள் மூலமும், ஓவியரின் தூரிகைச் சித்திரங்கள் மூலமும் இலக்கியக் காட்சிகளைப் படிப்பவர் உள்ளத்தில் பசுமரத்தாணி போலப் பதியுமாறு செய்துள்ளார். அவற்றுள் காதல் சித்திரங்கள் பதினாறு, வீரச் சித்திரம் இரண்டு. 'யாருமில்லைத் தானே கள்வன்' போன்ற அகப்பாடல் காட்சியும், 'கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்' போன்ற வீரக்காட்சியும் கட்புலனுக்கும் சிந்தைக்கும் ஒருங்கே இனிமை பயக்கின்றன.

'கன்னித் தமிழ்' என்ற நூலின்கண் இடம் பெறும் 'பழந்தமிழர் ஓவியம்', 'ஓவிய வித்தகர்', 'கலை இன்பம்', 'கலையும் கலைஞனும்' (பக்.87-118) ஆகிய கட்டுரைகள் அனைத்தும் அவருக்கு ஓவியக் கலையின்பால் இருந்த நாட்டத்தையும், பிற கலைகளின்பால் இருந்த தேட்டத்தையும் உணர்த்தி நிற்கின்றன.

இசைஞானத்தோடு, இறைஞானம் கைவரப்பெற்ற கி.வா. ஜகந்நாதன் இசையின் சுருதியை, திருநாவுக்கரசரின் இறை யுணர்வுக்கு உவமித்துள்ளார்.

'பண்பொருந்தும் சுருதி என்றும் நில்லாமல் தொடர்ந்து இசைக்க வேண்டும். வாய்ப்பாட்டுக்காரர் பாடினாலும், பக்க வாத்தியக்காரர்கள் தனி ஆவர்த்தனம் வாசித்தாலும், யாவரும் சிறிதுநேரம் சும்மா இருந்தாலும் அந்தச் சுருதி நில்லாமல் இசைத்துக் கொண்டே இருக்கும்,' என்று கூறும் கி.வா.ஜகந்நாதன், 'திருநாவுக்கரசு நாயகிக்கு எத்தொழிலைச் செய்தாலும், ஏதவஸ்தைப்பட்டாலும் எவ்விடத்தும் எக்காலத்தும் இறையுணர்

வாகிய சுருதி நிற்பதே இல்லை. அவள் கண்களை மூடி உறங்கும் பொழுதும் அது இடைவிடாமல் இருக்கும்' என்றார்.

**என் கண் பொருந்தும் போதத்தும்**
**கைவிட நான் கடவேனோ?**

என்பது அப்பர் தேவாரம். இங்ஙனம் நில்லாத சுருதியைக் கூறி இடைவிடாத இறையுணர்வை விளக்கிய கி.வா.ஜ. இசைஞானி என்பது புலனாகிறது.

'பேசாத பேச்சு' என்ற கட்டுரை நூலில் இடம் பெறும் 'அபிநயங்கள்', 'முத்திரைகள்' என்ற இரு கட்டுரைகளும் நடனக் கலையில் கி.வா.ஜகந்நாதன் கொண்டிருந்த ஆர்வத்தைக் காட்டுகின்றன. வீரச்சுவை, அச்சச்சுவை பற்றிக்கூறும் அபிநயப் பாடல்களையும், மடியுற்றோன், தெய்வமேறப்பெற்றோனுக்குரிய அபிநயப் பாடல்களையும் 'அபிநயங்கள்' கட்டுரையில் எடுத்துக் காட்டியுள்ளார் (பக்.116-122). மேலும் 'முத்திரைகள்' என்ற கட்டுரையின்கண், பலவகையான முத்திரை வகைகள் பற்றி - முட்டி, பதாகை, பிண்டி, பிணையில், முட்டி இலக்கணம் கூறும் பாடல், பதாகை இலக்கணம் கூறும் பாடல், பிண்டிவகைகள் 33, பிணையல் வகைகள் 15 அவை இன்னின்ன, சிலம்பில் அடியார்க்கு நல்லார் கூறும் முத்திரைகள், பூசைக்கான முத்திரைகள்-என எடுத்துக் கூறுவதிலிருந்து (பக்.122-129) பேசாத பேச்சான நடனக்கலையில் கி.வா.ஜ.வுக்கிருந்த ஈடுபாடு தெரிய வருகிறது.

## இறைவன் மீது பற்று

ம.பொ.சிவஞானம், கி.வா.ஜகந்நாதன் மறைந்தபோது, முருகபக்தி-கலைமகள்-இந்த இரண்டு சக்திகளிடமிருந்து கி.வா.ஜகந்நாதன் வாழ்க்கையைப் பிரிக்க முடியாது என்று கூறி வருந்தினார் (கலைமகள், நவம்., 1988, ப9). எல்லாத் தெய்வங்கள் மீதும் கி.வா.ஜ.பற்று வைத்திருந்த போதிலும் முருகப்பெருமான் மீது அவர் ஆழ்ந்த பக்தி கொண்டிருந்தார்.

அன்னார் இளமையில் வாழ்ந்த ஊரான மோகனூரி லிருந்த காந்தமலை முருகப்பெருமான் மீது இணையற்ற அன்பு பூண்டவர். காந்தமலை அருணகிரி ஜெயந்தி விழாவின்போது 'அன்பு' என்ற பொருளில் முருகன் பற்றிய சொற்பொழிவுகளை ஆற்றினார். அவர் காந்தமலை முருகன் மீது எண்ணற்ற பாடல் களைப் பாடியிருந்தார். 'இறைநாட்டமுடையோனுக்கு இவை யெல்லாம் எதற்கு?' என அவற்றை அழித்துவிட முயன்றபோது

ச.கு. கணபதி ஐயரும், அவரது நண்பரும் இணைந்து தம் கையிலகப்பட்ட பாடல்களைத் தொகுத்து 'காந்தமலை முருகன் தோத்திர மஞ்சரி' என்ற நூலாக்கினர். பின்னாளில் அவர் எழுதிய 'ராஜகோபுரம்' என்ற சிறுகதை நிகழும் களமாகக் காந்தமலை முருகன் கோவில் அமைகிறது (கலைமகள் தீபாவளி மலர், 1979).

இளமையில் அன்னார் உள்ளத்தில் சுடர் வீசிய முருகபக்தி, பின்னர் முருகன் பற்றிய பக்தி இலக்கியங்கள் அனைத்தையும் எழுத்தெண்ணிப் படிக்குமாறு செய்தது. அதிலும் அருணகிரி நாதர் இலக்கியங்களில் ஈடுபாடு கொள்ளுமாறு செய்தது. நக்கீரர் இயற்றிய திருமுருகாற்றுப்படையினை 'வழிகாட்டி' என்ற நூலாக்கி வெளியிட்டார். அந்நூலில் அவர் பெற்ற புலமை கருதி அவருக்கு, 'திருமுருகாற்றுப்படை அரசு' என்ற பட்டம் அளிக்கப் பெற்றது. சங்க நூல்களில் இடம்பெறும் முருகன் பற்றிய செய்திகள், பிற பக்தி இலக்கியங்களில் இடம் பெறும் முருகன் பற்றிய செய்திகள் ஆகியவற்றின் தொகுப்பே 'பெரும்பெயர் முருகன்' என்ற நூல். இலங்கையிலுள்ள கதிர்காம வேலவன், தன்னை ஆட்கொண்டதாகப் பாடியுள்ளார்.

**பால்காட்டிச் சேயின் பசிபோக்கும் தாய்போல**
**நூல்காட்டி ஞானம் நுவலும் குருபோல**
**வேல்காட்டி மஞ்ஞை வியனூர்தி யுங்காட்டிக்**
**கால்காட்டி யாள்வான் கதிர்காம வேலவனே**

என்பது அப்பாடல் (கதிர்காமயாத்திரை, ப.75).

கலைமகள் தீபாவளி மலரில் 'ஜோதி' என்ற பெயரில் ஆண்டுதோறும் ஒவ்வொரு தெய்வத்தை வாழ்த்திப் பாடும் அன்னாரது இறைவாழ்த்து, பிற தெய்வங்களின் அருளையும் அவர் வேண்டி நின்றார் என்பதைக் காட்டுகிறது. மேலும் பன்னிரு திருமுறைகள் பற்றிய 'திருமுறை மலர்கள்' என்ற நூலிலிருந்தும், திருவெம்பாவைக்கு அவர் எழுதிய உரையிலிருந்தும், அபிராமி அந்தாதி உரை விளக்கத்திலிருந்தும், நாலாயிரத்திவ்வியப் பிரபந்தத்திற்குப் பெரியவாச்சான் பிள்ளை எழுதிய உரையில் அவர் கொண்ட நாட்டத்திலிருந்தும் அன்னார்க்குப் பிற கடவுளர் மீது இருந்த பக்தி புலனாகிறது.

'அழியா அழகு' என்ற நூலின்கண் கம்பராமாயண அடிகளுக்கு அவர் கூறும் விளக்கம் இராமபிரான்மேல் அவர் கொண்ட பற்றைத் தெற்றெனக் காட்டுகின்றது. கம்பனது உணர்ச்சிச் சித்திரத்துக்கு அவர்தரும் விளக்கமாவது:

'மையோ!' - மை சிமிழில் அடைபடுவது

'மரகதமோ!' - மரகதமும் சிறிய அளவில் அடங்குவது.

'மறிகடலோ!' - கடல்தன் இருக்குமிடத்துக்கு வந்து காண்பவர்களுக்குக் காட்சி அளிப்பது.

'மழை முகிலோ!' - இராமலாவண்யம் கைப்படவில்லை.

'ஐயோ!' - கையை விரித்தல்.

உவமையினால் அளவிடமுடியாத இராமனுடைய பேரழகை உணர்ச்சிச் சித்திரமாகக் காட்டிவிட்டான் கம்பன். அவனுக்கே அகப்படாமல் இருந்தது இராமனது வனப்பு. அறிவு தலைப் பட்டால் சொல் வரும். அநுபவம் தலைப்பட்டால் உணர்ச்சி எழும். சொல் அடங்கும்' எனக் கி.வா. ஜகந்நாதன் அளிக்கும் உரை விளக்கத்திலிருந்து, இராமபிரானின் பேரழகை அன்னார் உள்ளார்ந்து உணர்ந்ததாலேயே இத்தகைய விளக்கத்தை அளிக்க இயன்றது என்பது புலனாகிறது.

மேற்கூறியவை யாவும் கி.வா. ஜகந்நாதனுக்கு முருகன் மீதும், பிற கடவுளர் மீதும் இருந்த பக்தியைக் காட்டுகின்றன.

### ஆசான்மீது பற்று

தம் ஆசானான உ.வே. சாமிநாத ஐயரிடம் அளவு கடந்த அன்பும், பற்றுதலும் கொண்டவர் கி.வா.ஜகந்நாதன். இருபத்தொரு வயதில் சென்னை சென்ற அன்னார், 1928 முதல் 1942 வரை ஏறத்தாழ பதினைந்தாண்டுக் காலம் அவரிடம் பாடம் கேட்டார். கால் புண்ணுக்கு அறுவைச் சிகிச்சை செய்து கொண்ட உ.வே.சாவுக்கு உடனிருந்து தொண்டாற்றியவர் கி.வா.ஜ.

உ.வே. சாமிநாத ஐயர் தனது நூற்பணியில், உடனிருந்து செய்ய கி.வா.ஜகந்நாதனுக்கு வாய்ப்பளித்தார். அப்பணியை அவர் செவ்வனே செய்தார். அதனாற்றான் 'அருந்தமிழின் இலக்கியங்கள் ஆசான் பதிப்பதற்குப் பெருந்துணையாய் எப்பொழுதும் பின்னிருந்த நல்லறிஞர்' எனச் சௌந்தரா கைலாசம் கி.வா.ஜ.வைப் பாராட்டுகிறார். ஏட்டுச்சுவடிகளின் கரைக்கோட்டில் தம் ஆசான் இடும் இரகசியக் குறியீடுகளின் பொருள் நுட்பத்தை அறிந்தவர் கி.வா.ஜ. ஒருவர் மட்டுமே எனக் கா.ஸ்ரீ.ஸ்ரீ. குறிப்பிட்டுள்ளார் (கலைமகள், டிசம்., 1988, ப.24). உ.வே. சாமிநாத ஐயரின் 'என் சரித்திரம்' அன்னார் கூறக் கூற, மாணவர் கி.வா.ஜ. எழுத 1940இல் ஆனந்தவிகடனில் தொடர் வரலாறாக வெளிவந்தது. 1942இல்

ஐயரவர்கள் மறைந்த போது 'என் சரித்திரம்' பாதியில் நின்றது. கி.வா.ஜ., தம் ஆசானின் மகன் கலியாணசுந்தரத்துடன் இணைந்து அப்பணியை முடித்தார்.

தக்கயாகப்பரணி நூலின் முன்னுரையில் உ.வே.சா., கி.வா.ஜகந்நாதன் தம் நூற்பதிப்புப் பணியில் பேருதவி புரிந்ததைப் பாராட்டியுள்ளார். 'காவியமும் ஓவியமும்' என்ற தம் நூலைத் தம் ஆசிரியர் உ.வே.சா.வுக்குக் காணிக்கை ஆக்கியமையானது, கி.வா.ஜகந்நாதன் தம் ஆசான்பால் கொண்ட ஈடுபாட்டை உணர்த்தி நிற்கிறது. தம் மூத்த மகனுக்குச் 'சாமிநாதன்' எனத் தன் ஆசான் பெயரையே இட்டுள்ளார். பதிற்றுப்பத்து முன்னுரையில், தம் ஆசான் கூறிய கூற்றைப் பொன்னே போல் போற்றித் தம் நூலிலும் எடுத்தாண்டுள்ளார். 'உலகத்து மக்களுக்கு ஒரு செங்கோலைப் பிடிக்கும் கையினால் அந்த மக்களை அழிப்பதற்குக் காரணமாகும் மற்றொரு செங்கோலை (சிவந்த அம்பை)ப் பிடிப்பதை அரசன் பெருமையாகக் கொண்டது காலத்தின் இயல்பு. உலகத்தின் இயல்பென்று கூடச் சொல்லி விடலாம்' என்பது அவர் எடுத்தாண்ட கூற்று.

உ.வே.சா.வின் புலமைக்கு வாரிசாகத் திகழ்ந்தவர் கி.வா.ஜகந்நாதன். எனவேதான் கி.வா.ஜ.மறைந்த போது, கா.ஸ்ரீ.ஸ்ரீ. 'திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள், உ.வே.சாமிநாத ஐயரவர்கள், கி.வா. ஜகந்நாதன் என்று வழிவழியாக மூன்று தலைமுறைகளாக வந்த புலவர் பரம்பரைக்கு முற்றுப்புள்ளி விழுந்தது' என வருந்தினார் (கலைமகள், டிசம்., 1988, ப.23).

மேற்கூறியவை யாவும் கி.வா.ஜ.தம் ஆசிரியர்பால் கொண்டிருந்த அன்பையும் பற்றுதலையும் உணர்த்துகின்றன.

### வரலாற்றுப் பார்வை

கி.வா.ஜ.வின் வரலாற்றுணர்வு பற்றி ம.பொ.சிவஞானத்தின் கூற்றாவது: 'தமிழரசுக் கழக மாநாடுகளில் கலந்து கொண்டு அவர் பேசியிருக்கிறார். திருத்தணியை மீட்கும் முயற்சிகளிலே அவர் பெரிதும் ஆர்வம் காட்டி வந்தார்' (கலைமகள், நவம்., 1988, ப.9). இக்கூற்று இலக்கிய ஆர்வலரான கி.வா.ஜகந்நாதனுக்குத் தமிழகத்து வரலாற்றிலும் ஈடுபாடு இருந்ததையும், முருகன் திருத்தலம் தமிழர்க்கே உரியது, அதைமீட்டல் வேண்டும் எனும் வேட்கை இருந்ததையும் காட்டுகிறது.

'தமிழ்நூல் அறிமுகம்' என்ற நூலில் பதிற்றுப்பத்துச் செய்திகளை எடுத்துக் கூறிய அவர், 'பண்டைத் தமிழ்நாட்டின்

வரலாற்றை எழுதப் புகுபவர்க்கு இந்தப் பதிற்றுப்பத்து பெரிய சரித்திரப் புதையலாக விளங்குகிறது' என்று குறிப்பிட்டுள்ளார் (ப.109).

தமிழ்நாட்டு அரசியல் வாழ்வை விளக்குவது புறநானூறு என்று கூறி, முதுகுடுமிப் பெருவழுதி பல வேள்விகளைச் செய்தவன் என்பது தொடங்கி, முடியுடைவேந்தர்களும் முற்றுகை யிட, பாரி தன் மலையில் விளையும் உணவுப் பண்டங்களை வீரர்களுக்கு வழங்கி அந்த முற்றுகையினால் ஊறு அடையாமல் இருந்தமை வரையிலான செய்திகளை எடுத்துரைத்துள்ளார் (ப.134).

கடையேழுவள்ளல்கள் தமிழகத்தில் வாழ்ந்தனர் என்பதற்கு அகச்சான்றாகச் சிறுபாணாற்றுப்படையையும், புறநானூற்றையும் காட்டினார். நாலடியாரில் பெருமுத்தரையர் என்ற அரசர்களின் பெயர் வருகிறது. அக்குலத்தினர் ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்கள். ஆகவே நாலடியார் அதற்குப் பின்பே தோன்றியிருக்க வேண்டும். ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருஞானசம்பந்தர் சைனரோடு வாதம் செய்து தாம் எழுதிய ஏடு 'வையையில் எதிர் ஏறிச் செல்லச் செய்தார். அந்த வரலாற்றைப் போலச் சைனர் பாடல்களுக்கும் ஒரு வரலாறு வேண்டுமென்ற எண்ணத்தால் நாலடியார் பாடல்களும் வையையில் எதிர்நீச்சல் போட்டன என்ற கதை எழுந்திருக்கலாம் என்பது கி.வா.ஜ. கருத்தாகும் (ப.145). பழந்தமிழ் நாட்டில் அடங்கிய பல நாடுகள் ஊர்கள் ஆகியவற்றையும், அவற்றின் இன்றைய பெயர்களையும் ஆங்காங்கே அவர் எடுத்துரைத்துள்ளார்.

மேற்கூறியவை யாவும் அன்னாரது தெளிந்த தேர்ந்த வரலாற்று அறிவைக் காட்டுவனவாம்.

**அறிவியல் பார்வை**

கி.வா. ஜகந்நாதன், வடித்தெடுத்த பழமைவாதியாக இருந்த போதிலும் விஞ்ஞான உலகின் எந்தப் பிரதிநிதிக்கும் சற்றும் சளைக்காதவர் என மு.மு. இஸ்மாயீல் கூறுவதிலிருந்து (கலைமகள், நவம்., 1988, ப.29) அன்னார் பழமையுடன் அறிவியல் கண்ணோட்டமும் கொண்ட புதுமையாளர் என்பது அறியக் கிடக்கிறது.

வில்லியம் ஜேம்ஸ் என்ற உளவியலறிஞர் நனவோடை பற்றியும், இன எண்ணங்கள் பற்றியும் குறிப்பிட்டுள்ளார். இன

எண்ணங்கள் பற்றிக் கூறும் கி.வா.ஜ., நினைவுத் தொடர் ஒன்றன்பின் ஒன்றாகக் கால அடைவுப்படியே ஏற்படலாம்; அல்லது பின்னோக்கித் தலைகீழாகவும் தொடரலாம்; ஒரு வரிசை யில்லாமலும் நினைவு அமையலாம்; புலவருடைய எண்ணம் பின்னோக்கிச் சென்று கந்தபுராணத்தின் கடைசி அத்தியாயத் திலுள்ள கிரௌஞ்ச வதத்தை முதலில் பாடமுற்பட்டுள்ளது எனக் கடுவன் இளவெயினனார் செவ்வேள் பற்றிய பரிபாடலில் (5) பின்னோக்கு உத்தியைக் கையாண்டமையைக் குறிப்பிட்டுள்ளார். இஃது அறிவியலார் கூறும் இன எண்ணங்கள், நனவோடை, பின்னோக்கு என்ற கருத்துகளை அறிந்திருந்தார் என்பதைக் காட்டுகிறது (பெரும்பெயர் முருகன், பக்.47-50).

அளவற்ற ஒன்றைக் காட்டுதற்கு ஒரு சார்பு காட்டி விளக்குதல் மரபு. புரையோனின் காதலின் உயர்வைச் சொல்ல விரும்பிய தலைவி, தாமரைத் தண்தாது ஊதி மீமிசைச் சாந்தில் தொடுத்த தீந்தேனைக் காட்டி விளக்குகிறாள். தேன் போன்று அவன் காதலும், இனிமையும், தூய்மையும், உயர்வும் உடையது என்றாள். தலைவி இங்ஙனம் சார்பு காட்டி விளக்கியமைக்கு ஓர் அறிவியல் உவமை தருகிறார் கி.வா.ஜ. 'புள்ளிக்கு அளவு இல்லை. ஆனாலும் அதனைக் காட்டுவதற்குக் கணித நூலார் இரண்டு கோடுகளை ஒன்றை ஒன்று வெட்டும்படி போட்டு அவை வெட்டும் இடத்தில் உள்ளது புள்ளி எனச் சார்பினைக் காட்டுவார்கள் என்ற கணிதவியலார் செயலைக் குறிப்பிட்டுள்ளார். அவரது அறிவியல் பார்வைக்கு மேலே கூறப்பெற்றவை சான்றுகளாகின்றன.

### காந்தீயப் பார்வை

காந்தீயத்தில் நாட்டங் கொண்ட கி.வா.ஜகந்நாதன் காந்தீய இயக்கத்தில் இளமையில் இணைந்ததாக நிர்மலா மோகன் குறிப்பிடுகிறார் (ப.26). மகாத்மாவுடன் தனக்கு நேர்ந்த அறிமுகம் குறித்து மகிழும் கி.வா.ஜ., தனக்கு அப்பேறு கா.ஸ்ரீ.ஸ்ரீ. மூலம் கிட்டியது என நன்றி கூறுகிறார்.

காந்திமகான் மீது புத்தாண்டுப் பிறப்பன்று கவிதை யொன்று வெளியிட்டார்.

**காந்திமகான் பிறந்துநடந் திருந்த நாட்டில்**
**கால்வைத்து நடக்கின்றோம் என்னும் எண்ணம்**
**ஏந்தும்உளம் வேண்டும் அவர்காட்டி விட்ட**
**எத்தனையோ நெறிகள் உண்டாம் அவற்றைத் தேர்ந்து**

**மாந்தரெலாம் சோதரராய் உயிர்கள் யாவும்**
**வையகத்தில் ஒருகுடியாய் வாழ்வதற்கே**
**ஆம்தகுதி ஏதென்றே ஆய வேண்டும்;**
**அவ்வழியில் நம்வாழ்க்கை நிகழவேண்டும்**

என்பது அப்பாடல். காந்தியடிகளின் அடிச்சுவட்டைப் பின்பற்ற வேண்டும் என்பது அக்கவிதையின் சாரம்.

காந்தியடிகளின் மூன்று சீனக் குரங்குப் பொம்மைகள் மூன்று உறுப்புகளையும் பொத்திக் கொள்வது போன்று, வேறுவகையில் மூன்று உறுப்புகளையும் பொத்திக் கொள்ள வேண்டும் என நாலடியார் பாடல் குறிப்பிடுவதாகக் கி.வா.ஜ. எடுத்துக் காட்டியுள்ளார். 'அயலார் பற்றிய மறைபொருள் செய்தியில் செவிடாக, அயலார் மனைவியாயின் குருடாக, பிறர் பற்றிக் கோள் சொல்லும் திறத்தில் மூங்கையாக இருப்பவனிடத்தில் 'அறங்கூற வேண்டா' என்பது அப்பாடல் தரும்பொருளாம் (த.நூ.அ., பக்.149-150).

மனிதநேயத்தோடு வாழும் வகைக்கும், வன்முறையற்ற வழியில் வாழும் வகைக்கும் அன்னார் காந்திமகானை வழி காட்டியாகக் கொண்டார் என்பது இவற்றிலிருந்து தெரிகிறது.

## நடப்பியல் நோக்கு

தன் கட்டுரைகளில் ஆங்காங்கே உலக நடப்பியலானது இலட்சியங்களிலிருந்து வேறுபட்டிருப்பதைக் கி.வா.ஜகந்நாதன் எடுத்துக்காட்டியுள்ளார்.

இலட்சியங்கள் பல நிலவிய பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தில் தீண்டாமை நிலவியதையும் கி.வா.ஜ.சுட்டியுள்ளார்.

'சேரி இளையர் செலவரு நிலையர்' என்ற பரிபாடல் அடிக்கு 'மதுரையில் புறச்சேரியில் சில சாதியினர் வாழ்ந்தார்கள். அவர்கள் மதுரை மாநாகர் மக்களோடு ஒன்றி விளையாடும் உரிமை இல்லாதவர்கள். அதனால் நீரில் இறங்கி விளையாடவில்லை' என விளக்கங் கூறியுள்ளார். 'ஆசை இருந்தாலும் சமுதாய அமைப்பி னாலும், தங்களுடைய தொழில் வகையினாலும் நீருக்குள்ளே செல்ல முடியாத நிலையில் இருந்தார்கள்' எனப் பழந்தமிழ் நாட்டில் நிலவிய தீண்டாமையைச் சுட்டியுள்ளார் (தமிழ்வையை, பக்.94-95).

'கன்று சாகக் கறப்பார் உண்டோ?' என்பது பழமொழி. ஆயின் நடப்பியல் 'சென்னையில், கன்றைச் சாகடித்து அதன் தோலுக்குள் வைக்கோலை அடைத்துப் பசுவை ஏமாற்றிக் கறக்கும் காட்சியைக் காணலாம்' என அன்னார் குறிப்பிடுவது இலட்சியம் வேறு நடப்பியல் வேறாக வாழும் மாந்தரை நோக்கி வருந்துவதாக உள்ளது (த.நூ.ப.243).

கல்வி வணிகமானதை எண்ணிக் கலைமகளில் சாடியுள்ளார். 'குருதட்சிணை என்பது போய் ஆயிரக்கணக்கில் கல்விக் கூடங்கள் பிடுங்கும் அவலம். . . ஜூன், ஜூலை மாதம் வந்தால், மேல்நிலைப் பள்ளிகளில், கல்லூரிகளில் இடம் கிடைக்க அலைவதுடன், பணத்தையும் மூட்டை கட்டிக்கொண்டு போக வேண்டிய நிர்ப்பந்தத்தையும் அல்லவா பெற்றோர்கள் அனுபவிக்கிறார்கள். கல்வியை வியாபாரமாக்கும் போக்கை ஒரு நிலையில் தடுத்து நிறுத்துவது தான் நல்லது' என எழுதினார் (ஜூலை, 1988, ப.3). நாடு பொன்விழாக் கொண்டாடிய பின்னரும் இந்நிலை தொடர்வது கண்கூடு.

புரையோடிக் கிடக்கும் சமூக நடப்பியலை மாற்றவல்லது எழுத்தாளனின் எழுத்து என்பது அவரது நம்பிக்கை. அவர் கூற்றாவது:

> **கலைகளில் எல்லாம் சக்தி வாய்ந்தது எழுத்துக் கலை! 'வாளைவிடக் கூரியது பேனா' என்ற தொடர் இதை மெய்ப்பிக்கிறது. சமூகத்திலுள்ள குறைகளை, பல ஆண்டுகளாகப் புரையோடிப் போயிருக்கும் பழக்க வழக்கங்களை மாற்றி, புத்துணர்வையும், புதுமைச் சிந்தனைகளையும் மலரச் செய்தல் வேண்டும். எழுத்தாளனின் எழுத்துக்குச் சக்தி இருக்கிறது. மகாகவி சுப்பிரமணிய பாரதியார் முன்னோடி**
>
> (கலைமகள், ஆக., 1988, ப.5).

கி.வா.ஜ.வின் இக்கூற்று சமூகத்தை மாற்றி அமைக்கும் பெரும்பொறுப்பு எழுத்தாளரின் கைகளில் இருக்கிறது என்பதை உணர்த்துகிறது. அவ்வக்கால நடப்பியலைப் பரிவோடு நோக்கும் சமுதாய உணர்வு அன்னாருக்கு இருந்தமையும், சமூகக்குறைகளைத் திருத்த வேண்டும் என்ற சீர்திருத்தச் சிந்தனை அன்னாருக்கு இருந்தமையும் இவற்றிலிருந்து புலனாகின்றன.

## இறுவாய்

கி.வா. ஜகந்நாதன் தமிழ்ப் பணியோடு இதழ்ப்பணி, இதழ்ப் பணியோடு இறைப்பணி என முத்துறைப் பணிகளையும் தன் வாழ்வோடு பின்னிப் பிணைத்துக் கொண்டு, அம்மூன்றையும் தன் உயிர் மூச்சாகக் கொண்டு வாழ்ந்ததால், பல்வேறுபட்ட துறைகளிலும் தன் சிந்தை, மொழி, செயலைச் செலுத்தியுள்ளார். அதனால் அன்னாரது ஆளுமை பன்முகப்பட்ட பரிணாமம் உடைய தாயிற்று; அன்னாரது பார்வை பரந்துபட்ட வீச்சுடையதாயிற்று.

அன்னாரது பன்முகப்பட்ட ஆளுமைக்கும், பரந்துபட்ட பார்வை வீச்சுக்கும் அவர் எழுதிய எண்ணற்ற நூல்களே சான்று.

### பார்வை நூல்

நிர்மலா மோகன், கி.வா.ஜகந்நாதன், இந்திய இலக்கியச் சிற்பிகள், சாகித்திய அக்காதெமி, புதுதில்லி, 1988.

### மலர்கள்

1. கலைமகள் தீபாவளி மலர்கள், 1965, 1975, 1981, 1983, 1985.
2. திரு.கி.வா.ஜ. மணி விழா மலர், 1966.

### இதழ்கள்

1. கலைமகள், ஜூலை, ஆகஸ்ட், நவம்பர், டிசம்பர், 1988.
2. குங்குமம், 23-4-2004.

# சிறுகதையாசிரியர்

நா. புனிதப் பொற்கொடி

கி.வா.ஜ. சிறந்த சிறுகதையாசிரியர். அவருக்குச் சிறுகதை இலக்கியத்தில் ஈடுபாடு தோன்றக் காரணமாக இருந்த கதை வ.வே.சு. ஐயர் எழுதிய 'லைலா மஜ்னூன்' என்பதுதான். அவரது சிறுகதைகள் 'கலைமகள்', 'ஆனந்த விகடன்', 'தீபாவளி மலர்', 'தினமணி', 'பாரதமணி', 'லோகோபகாரி' போன்ற பல பத்திரிகைகளிலும் வெளிவந்தன. கி.வா.ஜ. எழுதிய சிறுகதைகள், 'அறுந்த தந்தி', 'கலைஞன் தியாகம்', 'பவழ மல்லிகை', 'நீலமணி', 'கலைச்செல்வி', 'வளைச்செட்டி', 'குமரியின் மூக்குத்தி', 'அசையா விளக்கு', 'பூக்காரி', 'சின்ன ராஜா' ஆகிய பத்துத் தொகுதிகளாக வெளிவந்துள்ளன. இவற்றுள் 'பூக்காரி' என்ற சிறுகதைத் தொகுப்பில் இடம் பெற்றுள்ள கதைகளின் மூலம் வெளிப்படும் பல்வேறு கருத்துக்களைக் காணலாம்.

### காலம் தவறாமை

கி.வா.ஜ. தமது சிறுகதைகளில் காலம் தவறாமையை வலியுறுத்துகின்றார். பூக்காரி என்ற சிறுகதையில் கதைத்தலைவி பூக்காரனைப் பற்றிக் கூறும்பொழுது,

> **"சரியாக ஐந்து மணிக்கே வந்துவிடுகிறவன், மணி ஆறாகியும் வரவில்லை** (பூக்காரி, ப.1)

என்றும்,

> **"அவன் என்றும் தவறியதே இல்லை. இந்த ஒரு வருஷமாகத்தான் பார்க்கிறேனே; ஏதோ ஒரு நாள் அவனுக்கு உடம்பு சரியில்லையென்று அவனுடைய தம்பி பூக்கொண்டு வந்து கொடுத்துவிட்டுப் போனான். அவ்வளவுதான்; மற்ற நாட்களில் தவறியதே இல்லை. டாண் என்று ஐந்து அடிக்கும்போது வாசலில் வந்து நிற்பான்"** (பூக்காரி, ப.2)

என்றும் கூறுவதிலிருந்து செய்கின்ற தொழில் எதுவாக இருந்தாலும் காலம் தவறக்கூடாது என்பதனைப் பூக்காரன் என்ற கதாப் பாத்திரத்தின் மூலம் புலப்படுத்துகின்றார்.

**வழக்கம்**

வெள்ளிக்கிழமைகளில் படங்களுக்கெல்லாம் பூ மாலை போட்டுத் தீபாராதனை செய்கின்ற வழக்கத்தினைக் கி.வா.ஜ.வின் பூக்காரி என்ற சிறுகதையின் மூலம் அறிந்து கொள்ளலாம். பூக்காரி என்ற சிறுகதையின் தலைவி,

> **அன்று வெள்ளிக்கிழமை படங்களுக்கெல்லாம் பூ மாலை போட்டுத் தீபாராதனை செய்வது வழக்கம். நான் பூவையெல்லாம் போட்டு அலங்காரம் செய்து வைப்பேன். அவர் வந்து தீபாராதனை செய்வார்.** (பூக்காரி, ப.1)

என்றும் கூறுவதிலிருந்து, பெண்கள் தீபாராதனைக்குரிய அலங்காரங்களைச் செய்தலையும், ஆண்கள் தீபாராதனை செய்தலையும் அறியலாம்.

**கணவனுக்காக மகளிர் தங்களை அலங்கரித்துக்கொள்ளல்**

மகளிர் கணவனுக்காகத் தங்களை அலங்கரித்துக்கொண்டமையைக் கி.வா.ஜ. வின் பூக்காரி என்ற சிறுகதையின் வாயிலாக அறியலாம். பூக்காரி என்ற சிறுகதையின் தலைவி,

> **என்றுமே பூ என்றால் எனக்கு அலாதிப் பிரியம். நான் பூ வைத்துக் கொண்டு பார்ப்பதில் அவருக்கு அதை விடப் பிரியம். ஆகவே தினந்தோறும் பூ வைத்துக் கொள்வேன். வெள்ளிக்கிழமையன்று அதிகமாகவே என் கூந்தலில் மலர்ப்பாரம் ஏறும்.** (பூக்காரி, ப.1)

என்று கூறுவதின் மூலம் பெண்டிர் பூவை அதிகமாக விரும்புவதும், வெள்ளிக்கிழமைகளில் அதிகமாக மலரைச் சூடுகின்ற வழக்கமும், மகளிர் கணவனுக்காகத் தங்களை அலங்கரித்துக் கொண்டமையும் புலப்படுகின்றன.

**வறுமைச் சித்திரிப்பு**

கி.வா.ஜ. தமது சிறுகதைகளில் வறுமையைப் படம் பிடித்துக் காட்டுவதில் வல்லவர். பூக்காரி என்ற சிறுகதையில் கதைத் தலைவி பூக்காரியைப் பற்றிக் கூறும் பொழுது,

> **கிழிந்த பாவாடை, கிழிந்த சட்டை, சாயம் போன தாவணி – இவற்றை அணிந்து கொண்டிருந்தாள்**

*அவள். சின்னப் பெண், வயசு பன்னிரண்டு, பதின்மூன்று இருக்கலாம்.* (பூக்காரி, ப.3)

என்பதின் மூலம் பூக்காரியின் வறுமை நிலை சுட்டிக்காட்டப் பட்டுள்ளது. மேலும், பூக்காரியின் வறுமையைக் கதைத் தலைவிக்கும் பூக்காரி செங்கமலத்திற்கும் இடையே நடைபெறும் உரையாடலில் பின்வருமாறு கி.வா.ஜ. புலப்படுத்துகிறார்.

*அவள் உடம்பில் ஏழைகளின் ஆடை இருந்தது; உடலில் இயற்கை அழகு பொலிந்தது. காது கழுத்து நிறைய நகைபூட்டி இடுப்பு நிறைய அழகிய ஆடைகளை உடுத்தினால் அவள் அழகு நன்றாகச் சோபிக்கும். ஏழைகளுக்கு அப்படிச் செய்கிறவர்கள் யார்? அவள் அத்தனை பூ விற்கிறாளே; ஒரு நாளாவது ஒரு சாண் பூவை அவள் வைத்துக்கொண்டிருப்பாளா? இந்த நினைவு வந்தவுடன் அவளையே கேட்டேன்; செங்கமலம், நீ பூ வைத்துக் கொள்வாயா?*

என்றேன்.

*அவள் முகம் சட்டென்று வாடியது, நானா? சின்னப் பெண்ணுக்குப் பூ எதுக்கு அம்மா? நாங்களெல்லாம் பூ வைத்துக் கொண்டால் கட்டுமா?*

என்றாள்.

*ஏன் அப்படிச் சொல்கிறாய்? நீ பூ வைத்துப் பின்னிக் கொண்டால் அழகாக இருக்குமே?*

என்றேன்.

*அழகு ஒன்றுதான் குறைச்சல்! சோற்றுக்கே தாளம் போடும்போது பூ வைக்கவில்லையென்று கொண்டை அழுமோ?* (பூக்காரி, பக்.5-6)

என்று பூக்காரி என்ற சிறுகதையின் கதைத் தலைவியும் செங்கமலம் என்ற பூக்காரியும் உரையாடுவதன் மூலம் பூ விற்பவளாக இருந்தாலும் ஒரு நாளாவது ஒரு சாண் பூவைக் கூட வைத்துக்கொள்ள முடியாத அவல நிலையும், பூ வைத்துக் கொண்டால் கட்டுமா? என்ற ஆதங்கமும், சோற்றுக்கே தாளம் போடுகின்ற வறுமை நிலையும் சித்திரிக்கப்படுகின்றன.

**மனிதநேயம்**

> **மனிதநேயம் என்பது தன்னல வேட்கை வேலியைத் தகர்த்தெறிந்து மற்ற மனிதரின் கண்ணீரை வழித்தெறியும் கைவிரலாகத் துணை புரியும் அன்புத் தழுவலே” என்பார் மறைமலையான்** (மனிதநேயம் வளரட்டும், ப.vi)

கி.வா.ஜ. தமது சிறுதைகளில் மனித நேயத்தை வலியுறுத்து கின்றார். பூக்காரி என்ற சிறுகதையில் பூக்காரனைப் பற்றிக் கதைத் தலைவி கூறும்பொழுது,

> **அன்றும் எங்கள் வாடிக்கைப் பூக்காரன் வரவில்லை. பன்னிரண்டு மாதங்கள் பழகின தோஷம், அவனைப் பற்றி மனசு கவலைப்பட ஆரம்பித்தது. உடம்புக்கு என்னவோ பாவம்! என்று நினைத்தேன்** (பூக்காரி, ப.3)

என்றும், மேலும்,

> **பாவம்! இந்தப் பூக்காரனுக்கு என்ன வந்திருக்கும்? உடம்பு சரியில்லையா? ஏழைகள் மருந்து வாங்க என்ன பண்ணுவார்கள்? உடம்புக்கு வந்தது ஒரு பக்கம் இருக்கட்டும். பூ விற்காமல் ஜீவனம் செய்வது எப்படி? அன்றன்று விற்பதில் கிடைப்பதைக் கொண்டுதானே வயிறு வளர்க்க வேண்டும்? இரண்டு மூன்று நாள் பூவே விற்காமல் நின்றுவிட்டால் சம்பாத்தியம் ஏது?** (பூக்காரி, ப.4)

என்றும் கதைத்தலைவி பூக்காரனைப் பற்றிக் கவலைப்படுவதன் மூலம் பிறர் துன்பம் கண்டு இரங்குகின்ற மனிதநேய உணர்வு வெளிப்படுகின்றது. மேலும் இக்கருத்திற்கு வலுவூட்டக்கூடிய வகையில் பூக்காரியின் கூற்றும் அமைகின்றது. பூக்காரி,

> **ஏழைகளுக்கு இரங்கும் உங்கள் தங்கமான மனசைப் பற்றி அவர் சொல்கிறதை நீங்கள் கேட்க வேணும் அம்மா** (பூக்காரி, ப.15)

என்று கதைத்தலைவியிடம் கூறுவதின் மூலம் ஏழைகளுக்கு இரங்குகின்ற உயர் பண்பினைக் கி.வா.ஜ. வலியுறுத்துகின்றார்.

கி.வா.ஜ. தமது ‘ஏழை வைத்த வாழை’ என்ற சிறுகதையின் மூலமும் மனிதநேயத்தை வலியுறுத்துகின்றார். ஏழை வைத்த

வாழை என்ற சிறுகதையின் கதைத்தலைவன் பிச்சைக்காரி காத்தாயியை வளர்க்க மன உறுதி பூண்டு செயல்படுத்துவதன் மூலம் மனிதநேயம் வெளிப்படுகின்றது. கதைத்தலைவன் தனது மன உறுதியைப் பற்றித் தன் நண்பனிடம்

> **எனக்குத்தான் காத்தாயியைப் பற்றிய கவலை பெரிதாகிவிட்டது. அவளை இந்தப் பிச்சைக் காரப் பிழைப்பிலிருந்தே விடுவித்தால்தான் விமோசனம் ஏற்படும் என்று தெளிந்தேன்.**
>
> **கடைசியில் எனக்குத் தெரிந்த ஒருவன் வீட்டில் அவளை விட்டேன். மாசம் பத்து ரூபாய் தருகிறேன் என்று சொல்லி அங்கே இருக்கும்படிச் செய்தேன். எப்படியாவது அவளை ஒருவனுக்கு மனைவியாக்கினால்தான் அவள் வாழ்வு நன்கு அமையும் என்று தெரிந்து கொண்டேன். எப்படி யாவது வாழைமரத்தை வளர்ப்பது என்று உறுதி பூண்டேன்** (ஏழை வைத்த வாழை, பக்.45-46)

என்று கூறுவதன் மூலம் சமுதாயத்தினரால் புறக்கணிக்கப்பட்ட பிச்சைக்காரச் சிறுமி காத்தாயிக்கு நல்வாழ்வு அமைத்துத் தர வேண்டும் என்ற உயரிய மனிதநேயம் புலப்படுகின்றது. இங்ஙனம் கி.வா.ஜ. தமது கதாப் பாத்திரங்களின் ஊடாக மனிதநேயத்தை வலியுறுத்துகின்றார்.

### சமுதாயக்கட்டுப்பாடு

கி.வா.ஜ. தமது பூக்காரி என்ற சிறுகதையில் சமுதாயக் கட்டுப்பாட்டினைச் சுட்டிக்காட்டுகின்றார். பூக்காரி செங்கமலம் தங்கள் சாதி வழக்கத்தினைக் குறிப்பிடும்பொழுது,

> **எங்கள் சாதி பொல்லாத சாதி அம்மா! வயசு வந்த பெண்கள் வெளியிலே வந்தால் பேச்சுக்கு இடம் அம்மா!** (பூக்காரி, ப7)

என்று கதைத்தலைவியிடம் கூறுவதன் மூலம் பருவமடைந்த பெண்கள் வீட்டை விட்டு வெயியே செல்லக் கூடாது என்ற சமுதாயக் கட்டுப்பாடு வெளிப்படுகின்றது.

### உறவில் திருமணம்

கி.வா.ஜ. தமது பூக்காரி என்ற சிறுகதையில் உறவு முறைத் திருமணத்தைச் சுட்டிக்காட்டுகின்றார்.

**என் மாமன் மகளுக்குக் கல்யாணம். அதைத் தடுக்கப் போயிருந்தேன் அம்மா** (பூக்காரி, ப.8)

என்று பூக்கார நாராயணன் கதைத்தலைவியிடம் தான் வராததிற்கான காரணத்தைக் கூறுகின்றான். மேலும்,

**கதையை அவன் விவரமாகச் சொன்னான். அவனுக்கு முறைப்பெண் அந்த மாமன் மகள். அவளை வேறே யாருக்கோ கல்யாணம் பண்ணு வதற்காக ஏற்பாடு ஆகியிருந்தது. அதை மாற்ற வேண்டுமென்று நாராயணனும் அவன் தாயும் போயிருக்கிறார்கள். உறவுமுறை விட்டுப் போகக் கூடாதென்றும், பணத்தைப் பெரிதாகப் பார்ப்பது தவறென்றும் அவன் தாய் வாதாடி அழுதாளாம். அவள் அண்ணனுக்குத் தெரியாமல் அவன் மனைவியின் சூழ்ச்சியால் கல்யாணம் திட்டமா யிற்றாம். தன் மனைவியை எதிர்க்க முடியாமல் அந்த அண்ணன் இருந்தான். தங்கையும் தங்கை பிள்ளையும் வரவே அவனுக்குத் தைரியம் வந்தது. காச்சு மூச்சென்று சத்தம் போட்டுத் தன் பெண்டாட்டியை சண்டை போட்டானாம். கடைசியில் கல்யாணம் நின்று போய்விட்டது. அதை நிறுத்திவிட்ட வெற்றியுடன் திரும்பி வந்திருக்கிறான் நாராயணன். அவனுக்கு இருபது வயசு இருக்கும்.** (பூக்காரி, பக்.8-9)

என்று பூக்கார நாராயணனைப் பற்றிக் கதைத் தலைவி கூறுவதிலிருந்தும், மேலும் அவளே அவனிடம்,

**அப்படியானால் அடுத்தபடி உனக்கும் மாமன் மகளுக்கும் கல்யாணம் நடக்கப் போகிறது. எப்போது முகூர்த்தம்?" என்று கேட்டேன்**
(பூக்காரி, ப9)

என்று கூறுவதிலிருந்தும் உறவில் திருமணம் செய்கின்ற வழக்கத்தினை உணரலாம்.

**சாதி அடிப்படையில் திருமணம்**

திருமணத்தின்போது சாதி பார்த்துத் திருமணம் செய்கின்ற வழக்கத்தினையும் கி.வா.ஜ. தமது சிறுகதையின் மூலம் கூறுகின்றார். ஏழை வைத்த வாழை என்ற சிறுகதையில் கண்ணன்

காத்தாயியைத் திருமணம் செய்துகொள்ளத் தன் இசைவினைத் தெரிவிக்கும்பொழுது நடைபெறும் உரையாடலில்,

> **சாமி, நான் (கண்ணன்) காத்தாயியைக் கட்டிக் கொள்ளலாமென்று நினைக்கிறேன். உங்கள் சம்மதம் வேணும்**

என்றான். நான் இதைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

> **அவள் சம்மதம் தெரிய வேண்டாமா?**

என்றுதான் முதலில் கேட்டேன்.

> **"அதுக்கும் இஷ்டந்தான்"**

> பிறகுதான் மற்ற வகையான சங்கடங்கள் நினைவுக்கு வந்தன.

> **அவள் என்ன ஜாதி என்று தெரியாது. உன் தாய் தகப்பன் சம்மதிப்பார்களா?**

என்று கேட்டேன்.

> **அவளும் செங்குந்த சாதிப் பிள்ளைதானாம் சாமி; ஊர், ஒட்டு, உறவுமுறையெல்லாம் சொன்னாள். எங்கள் அம்மாவுக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது. நீங்கள் ஆசீர்வாதம் செய்யவேண்டும்**

என்றான் (ஏழை வைத்த வாழை ப.47). என்று கதைத்தலைவன் தன் நண்பனிடம் கூறுவதிலிருந்து காதல் திருமணமாக இருந்தாலும் சாதி பார்த்த பின்னரே திருமணம் நிச்சயிக்கப்பட்டதை அறியலாம்.

## பழமொழி

கி.வா.ஜ. தமது சிறுகதைகளில் பழமொழிகளைக் கையாண்டுள்ளார்.

> **கிணற்றுத் தண்ணீரை ஆற்றுவெள்ளம் கொண்டு போகுமா** (பூக்காரி, ப.10)

என்ற பழமொழியின் மூலம் பூக்காரன் நாராயணன் தன் மாமன் மகளைத் தன்னைத் தவிர வேறு யாரும் திருமணம் செய்து கொண்டு அவளைப் பிரித்துவிட முடியாது என்ற கருத்தினை உணர்த்துகின்றான். இவ்வாறு பல பழமொழிகளைக் கையாண்டுத் தன் கருத்தினை வலியுறுத்துகின்றார் கி.வா.ஜ.

## வியாபாரிகளின் இயல்பு

கி.வா.ஜ. வியாபாரிகளின் இயல்பினை மிகத் தெளிவாகப் படம்பிடித்துக் காட்டுகின்றார்.

> "இரண்டு நாளாக இந்தப் பிள்ளை இங்கே பூப்போட்டது போலிருக்கிறது. . . . இன்று முதல் இங்கே உனக்கு வேலை இல்லை, போ" என்று கடுகடுப்போடு சொன்னான் நாராயணன். வியாபாரிக்கும் வியாபாரிக்கும் ஏன் எல்லா இனத்தினும் தங்களுக்குள் பொறாமை உடன் பிறந்தது போலும்! (பூக்காரி, ப.10)

என்ற கதைத் தலைவியின் கூற்றின் மூலம் வியாபாரிகளின் இயல்பு நன்கு புலப்படுகின்றது.

### பழக்க வழக்கம்

திருமணத்திற்கு வெற்றிலை, பாக்கு வைத்துப் பிறரை அழைக்கின்ற வழக்கத்தினைக் கி.வா.ஜ. தமது பூக்காரி என்ற சிறுகதையின் மூலம் கூறுகின்றார். பூக்கார நாராயணன் தன் திருமணத்திற்கு கதைத்தலைவியை அழைக்கும்பொழுது,

> இன்றைக்கு எட்டாவது நாள் எனக்குக் கல்யாணம். அதற்கு வெற்றிலை பாக்கு வைக்க வந்தேன் (பூக்காரி, ப.16)

என்று கூறுகின்றான்.

### உளவியல்

உள்ளத்தை அப்படியே படம் பிடித்துக் காட்டுவதில் கி.வா.ஜ. வல்லவர். அபராதம் என்ற சிறுகதையில்,

> "மணியார்டரை எடுத்துப் பார்த்தான். சாயங் காலம் உள்ளூர்த் தபால் பட்டுவாடாவுக்குள் வந்துவிட வேண்டும். மணியார்டர் இருபது ரூபாய்க்கு இருந்தது. மாசம் மாசம் பத்து ரூபாய் தானே அனுப்புவான்? இந்தத் தடவை இருபது ரூபாய் அனுப்பியிருக்கிறானே? ராமசாமி யோசித்தான். கீழே கூப்பனில், "தீபாவளிக்குக் கொஞ்சம் கூட அனுப்பியிருக்கிறேன்" என்று எழுதியிருந்தது. குப்பம்மாள் கிழவி. அவளுக்குத் தீபாவளிக்கு என்ன செலவு? ஒன்டிக்கட்டை.

ராமசாமிக்கு ஒரு புதிய எண்ணம் உண்டாயிற்று. குப்பம்மாள் இந்த அதிகப்படிப் பத்து ரூபாயை எதிர்பார்த்திருக்க மாட்டாள். வழக்கப்படிப் பத்து ரூபாய்தான் வரும் என்று எண்ணியிருப்பாள். நமக்கு வேண்டியது பத்து ரூபாய். குப்பம்மாளுக்கு வேண்டியதும் பத்து ரூபாய். ஆகவே. . . அவன் மனம் சூழ்ச்சி செய்தது; திட்டமிட்டது; அந்தத் திட்டத்தை நிறைவேற்றத் துணிந்துவிட்டது.

"இந்தத் தடவை கூப்பனில் ஒன்றும் எழுதவே இல்லை" என்று சொல்லிக்கொண்டே கிழவி தந்த மாமூல் இரண்டணாவைப் பையில் போட்டான் ராமசாமி. "சரி, நான் வருகிறேன்" என்று சொல்லி விட்டு மணியாரனிடத்திற்குப் போய் ஒரு கையெழுத்து வாங்கிக் கொண்டான். தன் குழந்தைக்கு நீலத் தாவணி வாங்கிவிடலாம் என்ற எண்ணத்தோடு வேகமாக நடந்து வந்தான். ஆனால் அவன் மனசுக்குள்ளே ஏதோ உறுத்திக் கொண்டே இருந்தது. அதுவரையில் அந்த மாதிரியான காரியங்களில் அவன் ஈடுபட்டதே இல்லை. அதைச் செய்வதற்கு முன் அவன் மனம் திடமாக இருந்தது, எல்லாவற்றையும் திட்டப்படி நிறைவேற்றினான். காரியத்தைச் செய்த பிற்பாடோ அவனுடைய இயற்கையான மனம் குத்தத் தொடங்கியது. 'கிழவியின் காசையா திருடுவது? அவள் பிள்ளை எவ்வளவு ஆசையாக அனுப்பி இருக்கிறான்! தீபாவளிக்கு அதிகப் பணம் கிடைத்தது பற்றித் தன் தாய் அதிகச் சந்தோஷம் கொண்டு தன்னை வாழ்த்துவாள் என்றல்லவா அந்தத் தொழிலாளி கற்பனை செய்துகொண்டி ருப்பான்? ஆனால், இங்கே நடந்ததை அவன் காண்பானா? குப்பம்மாளுக்குப் பின்னாலே தெரிய வந்தால். . .? ஏன், மணியாரனுக்குத் தெரிந்தால்? டிபார்ட்மெண்டுக்கே தெரிந்துவிட்டால்? ராம சாமியின் உடல் நடுங்கியது. கால் தடுமாறியது. உடம்பு வேர்த்தது. காலை வீசி நடக்க முயன் றாலும் முடியவில்லை. திரும்பிப் போய்ப் பத்து ரூபாயையும் கொடுத்துவிட்டு வந்துவிடலாமா? என்று எண்ணினான். குற்றம் அப்போது மாத்திரம் வெளிப்படாதா? 'இதை யார் கவனிக்கப் போகி றார்கள்? இவள் தன் மகனுக்குக் கடிதமா எழுதப்

போகிறாள்? அப்படி எழுதினாலும் நமக்குத் தெரியாமல் எப்படிப் போகும்? கடவுளாக இந்த வழியைக் காட்டிவிட்டார். இந்தா எடுத்துக்கொள் என்று சொல்லுவதுபோல் அந்தப் பத்து ரூபாய் அதிகமாக இருந்தது. பத்து ரூபாயாக இருப்பானேன்?அஞ்சு ரூபாய் இருக்கக் கூடாதா? கணக்காக நமக்கு வேண்டிய பத்து ரூபாய் நம் கையில் வந்து நிற்கும்போது நாம் வேண்டாம் என்பதா? குப்பம்மாள்தான் இந்தப் பத்து ரூபாய் இல்லாமல் செத்தா போய்விடுவாள்? அவள் மகனுக்கு ஏதோ போனஸ் கிடைத்திருக்கும்; அனுப்பியிருக்கிறான். இவளுக்கு எதற்கு அதிகப் பணம்! இப்படி ஒரு குரல் பேசியது. இவ்வாறு இரண்டு விதமான எண்ண அலைகளால் உந்தப் பட்ட ராமசாமி எப்படியோ வீடு வந்து சேர்ந்தான் (அபராதம், பக்.21-23)

என்று ராமசாமியின் உள்ளத்தில் நடைபெற்ற இரண்டு விதமான எண்ண அலைகளைப் படம்பிடித்துக் காட்டுகின்றார் கி.வா.ஜ. உள்ளத்தில் உள்ளதை உள்ளபடியே காட்ட வல்லவர் கி.வா.ஜ. மனிதனால் மனிதனை மட்டும் தான் ஏமாற்ற முடியும் மனச்சாட்சியை ஏமாற்ற முடியாது என்ற அரிய உண்மையைப் புலப்படுத்துகின்றார்.

### பிறர்பொருள்விழையாமை

பிறர் பொருளுக்கு ஆசைப்படக் கூடாது என்ற கருத்தினையும் கி.வா.ஜ. தமது சிறுகதைகளில் வலியுறுத்துகின்றார். ராமசாமி, வீட்டுக்குள் புகுந்தபோது கூடத்தில் பெண்களின் பேச்சுக் கேட்டது. அவன் மனைவி செல்லம்மாள் பக்கத்து வீட்டுப் பார்வதியோடு பேசிக்கொண்டிருந்தாள். பக்கத்தில் அவன் பெண் சுந்தரியும் இருந்தாள். "ஆமாம், இரண்டணாக் கொடுத்தனுப்பினேன். ஒன்றரையணாவுக்குக் கத்திரிக்காய் வாங்கினாளாம். பாக்கி அரையணாவுக்குப் பதிலாக அவசரத்தில் இரண்டரையணாக் கொடுத்துவிட்டாள் கத்தரிக்காய்க்காரி. நடு வழியிலே குழந்தை அதைத் தெரிந்து கொண்டாளாம். உடனே ஓடிப் போய் அவளிடம் அந்த அதிகப்படி இரண்டணாவைக் கொடுத்தாளாம் என்றாள் செல்லம்மாள்.

கொடுக்காமலே வந்திருக்கலாமே

என்று பக்கத்து வீட்டுக்காரி கேட்டாள்.

*அதெப்படி? ஊரார் காசுக்கு நாம் ஆசைப்பட லாமா? சுந்தரி வந்து இதை என்னிடம் சொன்ன போது எனக்கு எத்தனை சந்தோஷமாக இருந்தது தெரியுமா? அந்தக் கத்திரிக்காய்க்காரி கூடச் சந்தோஷப்பட்டாளாம். இந்தா அம்மா என்று இரண்டு கத்தரிக்காய்க் கூடக் கொடுத்தாளாம்*

என்று பெருமிதத்தோடு பேசினாள் செல்லம்மாள்.

*அவள் அடிக்கிற கொள்ளையிலே இந்த இரண்டணாக் குறைந்தால் அவள் குடி முழுகிப் போய்விடுமா?*

என்றாள் பார்வதி.

*குழந்தை சுந்தரியே பதில் சொன்னாள். அவ கொள்ளையடிக்கிறாள்னு நமக்குத் தெரியுமா? அப்படி அடிச்சாலும் நாமும் அந்தத் திருட்டிலே பங்கு சேர்கிறதா? இன்னிக்கு ரெண்டணா வந்ததுன்னு எடுத்துக்கிட்டால் நாளைக்குச் சாமி ரெண்டு ரூபாய் அபராதம் போட்டுடுவார்; எங்கே யாவது ரெண்டுரூபாய் தொலைஞ்சு போகும். நான் ரெண்டணா ஏமாத்திப்பிட்டேன்னு தெரிஞ்சா, எங்க அப்பா எப்படிக் கோவிச்சுப்பாங்க தெரியுமா?* (அபராதம் ப.24)

என்ற உரையாடலின் மூலம் பிறர் பொருளை விரும்பக்கூடாது; விரும்பினால் பன் மடங்கு நட்டம் ஏற்படும் என்ற கருத்தினை வலியுறுத்துகின்றார்.

*சம்பாஷணை முழுவதையும் கேட்டபடியே ரேழியில் நின்றான் ராமசாமி. நடந்த சமாசாரம் அவனுக்கு விளக்காகிவிட்டது. சுந்தரியின் தூய மனசை அவன் கண்டான். அவள் செய்ததை ஆதரித்துப் பாராட்டும் தன் மனைவியின் உத்தம குணத்தை உணர்ந்தான். குழந்தை அவனை எவ்வளவு உயர்வாக எண்ணியிருக்கிறாள்! அப்பா வுக்குத் தெரிந்தால் கோபித்துக் கொள்வார் என்றல்லவா சொல்கிறாள்? எத்தனை உயர்ந்த நம்பிக்கை! அந்த அப்பா இப்போது திருடனாகி விட்டானே! ஏழையின் பணத்தில் கை வைத்து விட்டானே! இரண்டணாவைத் தவறிக் கொடுத்து விட்டவள் கணக்கா பார்க்கப்போகிறாள்? ஆனாலும் கடவுள் கணக்குப் பார்த்து இரண்டு*

ரூபாய் அபராதம் போடுவார் என்றல்லவா குழந்தை சொல்கிறாள்?

அவனுக்குத் தலை இடித்தது; நெஞ்சு படபடத்தது; தலையைப் பிடித்துக்கொண்டான் மெல்ல உள்ளே புகுந்தான். பக்கத்து வீட்டுக்காரி போய் விட்டாள். செல்லம்மாள் தன் மகள் கத்தரிக்காய்க் காரியின் பணத்தைத் திருப்பிக் கொடுத்த கதையைச் சொல்லிச் சொல்லிச் சந்தோஷப் பட்டாள். ராமசாமி குழந்தையை வருவித்துத் தழுவினான். உச்சி மோந்தான். ஏனோ அவன் கண்களில் நீர் துளித்தது. பெருமூச்சு விட்டான். 'சிரமமாக இருக்கிறது சிறிது படுத்துக்கொள்கிறேன்' என்று அப்படியே கீழே படுத்தான். சிரமம் என்ன? அவன் உள்ளம் அவனைச் சம்மட்டி கொண்டு அடித்தது. அவனுடைய மகளுக்கும் மனைவிக்கும் முன்னே, அவன் செய்த காரியம் விசுவரூபம் எடுத்து அவன் உள்ளத்தைச் சித்திரவதை செய்தது" (அபராதம், பக்.24-25)

என்பதன்மூலம் தன்னெஞ்சே தன்னைச் சுடும் என்ற கருத்து புலப்படும்.

## முகம் மனதின் கண்ணாடி

கி.வா.ஜ. தமது சிறுகதைகளில் முகம் மனதின் கண்ணாடி என்ற கருத்தினையும் வெளிப்படுத்துகின்றார். பூக்காரி என்ற சிறுகதையில்

எத்தனை பளிச்சென்று கண்ணாடி போல அவள் (செங்கமலம்) மனசில் உள்ள ஏமாற்றத்தை அந்த முகம் காட்டியது (பூக்காரி, ப9)

என்றும், ஏழை வைத்த வாழை என்ற சிறுகதையில்,

அந்தச் சிறு பெண்ணின் முகமும் கண்களும் அவள் வார்த்தை உண்மையென்று பறைசாற்றின (ஏழை வைத்த வாழை ப.41)

என்றும் மனத்தில் உள்ள கருத்தினை முகம் காட்டிவிடும் என்பதனை வலியுறுத்துகின்றார்.

## பெண்மை

கி.வா.ஜ. தமது ஏழை வைத்த வாழை என்ற சிறுகதையில் பெண்மையைப் பின்வருமாறு சித்திரிக்கின்றார்.

"அவள் (காத்தாயி) பிச்சைக்காரி; ஆனாலும் பெண். இன்னும் சில வருஷங்களில் பெண்மையின் எழில் அவளிடம் பொலிவு பெற்று நிற்கும். அப்போது இந்த உலகம் அவளைச் சும்மா விடாது. நாலுபேர் போகும் வழியில் மாங்காய்க் காய்த்துத் தொங்கினால் அது அப்படியே இருக்குமா? எனக்கு நீங்கள் இப்போது சொன்ன கருத்து அன்று உதயமாயிற்று. 'கட்டுக் காவல் இல்லாத பொருளைத் திருடுவதற்கு உலகம் முழுவதுமே காத்திருக்கிறது" என்று தெரிந்து கொண்டேன்.

பத்து வயசுப் பெண்ணிடம் உலகத்திலுள்ள அசுரப் பிரதிநிதி விஷமம் செய்யத் தொடங்கிவிட்டான். அவளுக்கு அவள் பெண்பிறவியே சத்துரு. நாளைக்கு வரப்போகும் பெண்மை யமன்.

அவள் முகத்தில் ஒளி இருந்தது. அவள் உடம்பில் ஒழுங்கான அமைதி இருந்தது. நன்றாக வளர்ந்தால் அவள் அந்த வாழையைப்போல் தளதளவென்று வளர்வாள். அவள் அறிவும் வளரும். ஆனால் எத்தனை எருமைமாடுகள் அவள் பெண்மையைக் குலைக்கக் காத்திருக்கின்றன! அவளுக்குத் துணையாக வருவது போல வந்து அவள் உருவையும் உள்ளத்தையும் குலைத்துக் கலைத்துக் குதறி விட்டுப் போகும் கழுகுகள் எத்தனை காத்து நிற்கின்றன!

பெண்மையைப் பெண்டிரால் பேண ஒண்ணாதபடி இயற்கை சதி செய்திருக்கிறது. பெண்மையோடு மென்மையை இணைத்துவிட்டுப் பெண் குலத்தையே ஆண் குலத்தின் அடிமை யாக்கிவிட்டது. ஆண் குலத்தின் இரையாக, ஆண் குலத்தின் பேய்ப் பசிக்குத் தீவனமாகப் பெண்குலத்தை ஆக்கிய தெய்வம் எத்தனை கொடுமையுடையது!

> **இல்லை இல்லை; அப்படிச் சொல்வது தவறு. பெண் குலம் வாழைத் தோட்டம். அதற்கு வேலி ஆண் குலம். கட்டிக் காத்து இன்பம் தந்து தானும் இன்பம் பெற நிற்பது ஆண் குலம். பெண் குலத்தின் பெண்மைக்கு ஆண்மை வேண்டாமா? பெண்மையின் பயன் ஆண்மையின் அரவணைப் பிலே ஒன்றுபடுவது தானே! அறத்துக்கும் அன்புக்கும் இணங்கிப் பெண்மையும் ஆண்மையும் ஒன்றுபடுவதனால் தான் உலகம் வாழ்கிறது; வளர்கிறது; அழியாமல் வாழையடி வாழையாகப் பொலிவு பெற்று விளங்குகிறது. வேலி குலைந்த தோட்டத்தில் இரண்டு வாழை மரங்களை எருது அழித்ததென்றால், வாழையே பயிர் செய்யக்**

> ***கூடாதென்று கொள்வதா? வாழை பயிராக வேண்டும்; வேலிக்குள்ளே பயிராக வேண்டும்.*** *(ஏழை வைத்த வாழை, ப.42-44).*

மேற்கூறியவற்றிலிருந்து பெண்மையின் பயன் ஆண்மையின் அரவணைப்பிலே ஒன்றுபடுதல்; அறத்துக்கும் அன்புக்கும் இணங்கிப் பெண்மையும் ஆண்மையும் ஒன்று படுவதனால்தான் உலகம் வாழ்கிறது என்ற கொள்கையை வற்புறுத்துகின்றார். மேலும் பெண்ணுக்கு ஆண் வேலி என்ற கருத்தினையும் நிலை நாட்டுகின்றார்.

**பெண்டிர்க்குச் சமுதாயப் பாதுகாப்பின்மை**

கி.வா.ஜ. தமது சிறுகதைகளில் பெண்டிர்க்குச் சமுதாயப் பாதுகாப்பின்மையைச் சுட்டிக்காட்டுகின்றார். ஏழை வைத்த வாழை என்ற சிறுகதையில் பிச்சைக்காரச் சிறுமி காத்தாயியைப் பற்றி,

> ***சிறு பையன், கட்டிளங்காளை, பெண்பிள்ளை, கிழவி – யாராக இருந்தாலும், 'இந்தப் பிஞ்சை இப்படியே வைத்திருக்கக் கூடாது. இதைப் பிஞ்சிலே பழுக்கச் செய்ய வேண்டும்" என்று கங்கணம் கட்டிக் கொண்டிருப்பவர்களைப் போல் தோன்றினார்கள். அட பாழும் உலகமே! ஒரு பொருளைத் தூயதாக வளரும்படி விட உன் அழுக்குக் கை இடம் கொடுப்பதில்லையே! நீச்ச மனித குலமே! நீ தொட்ட தெல்லாம் அழுக்குப் படியும்படி விடுவதுதானா உன் பெருமை*** *(ஏழை வைத்த வாழை, ப.45).*

என்று குறிப்பிடுவதிலிருந்து தனித்து விடப்பட்ட பெண்டிர்க்குச் சமுதாயத்தில் இழைக்கப்படுகின்ற தீங்கினை அறியலாம்.

**கணவனே எல்லாம்**

கி.வா.ஜ. தமது தீபாவளிப் பரிசு என்ற சிறுகதையில் பெண்ணுக்குக் கணவனே எல்லாம் என்ற கருத்தினை வலியுறுத்துகின்றார்.

> ***ஐயோ, தெய்வமே! எனக்குப் பட்டுப் புடவையையும் பீதாம்பரத்தையும் நகைகளையும் விட ஏன்? உலகில் உள்ள எல்லாவற்றையும் விட அவர்தாமே எனக்கு அருமையான பண்டம்?*** *(தீபாவளிப் பரிசு, ப.74)*

என்றும், மேலும், "வந்தது வரட்டும்" என்று தந்தியை வாங்கிப் பிரித்தேன். 'நாளைக் காலை வருகிறேன் - உன் கண்ணன்' என்று இருந்தது. அவரா அடித்திருக்கிறார்! கண்ணைத் துடைத்துக் கொண்டு பார்த்தேன். "உன் கண்ணன்" - தந்தியில் இப்படி அருமைப்பாட்டுடன் அடித்திருக்கிறாரே! அவருடைய பிரிவால் நாம் துக்கப்படுவோமென்று தெரிந்து கொண்டுதான் அதைச் சேர்த்திருக்கிறார். ஆம்! அந்த "உன்" என்ற வார்த்தை மாணிக்கம் போல, அமிர்தம் போல, உயிரையே போல இருந்தது. அவர் எனக்குத்தானே சொந்தம்? அவர் என் கண்ணன்தானே? எனக்கு அவரை விட்டால் வேறு என்ன இருக்கிறது? நானே எனக்குச் சொந்தம் இல்லையே! அவர் இல்லாவிட்டால் இந்த 'நான்' ஏது? அவர் இருந்தாலும் நான் இல்லை; நான் அவருக்குள் ஐக்கியம். நான், என் எல்லாம் அவரே. ஆம் அவரே, அவரே." (தீபாவளி பரிசு. ப.80) என்றிவ்வாறு அம்புஜம் நினைப்பதன் மூலம் கணவனே எல்லாம் என்ற கருத்தினைப் புலப்படுத்துகின்றார்.

## ஆண்-பெண் இயல்பு

கி.வா.ஜ. தமது பொழுது புலர்ந்தது என்ற சிறுகதையில் ஆண் - பெண் இயல்பினைச் சுட்டிக் காட்டுகின்றார்.

> **என்ன இருந்தாலும் ஆண்களுக்குத் தம்முடைய அதிகாரம் நடக்க வேண்டுமென்பது அவர்களை அறியாமலே ரத்தத்துடன் ஊறிக் கிடக்கும் குணம். பெண்களுக்கோ எதையாவது செய்துவிடுவது; அப்புறம் ஏன் அப்படிச் செய்தோம்? ஏன் இப்படிச் செய்யவில்லை என்று எண்ணி ஏங்குவது - இதுதான் குணம்** (பொழுது புலர்ந்தது, ப.137-138)

மேற்கூறிய கோமளவல்லியின் எண்ண ஓட்டத்தின் மூலம் ஆடவர் அடக்கியாளக் கூடியவர்கள் என்ற கருத்து வெளிப்படுகின்றது.

## இலக்கிய மேற்கோள்

கி.வா.ஜ. தமது 'பொழுது புலர்ந்தது' என்ற சிறுகதையில்

> **இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண**
> **நன்னயம் செய்து விடல்** (பொழுது புலர்ந்தது, ப.141)

என்ற திருக்குறள் மூலம் தம்முடைய கருத்தினை வற்புறுத்துகின்றார்.

**நம்பிக்கை**

கி.வா.ஜ. தமது 'குற்றமுள்ள நெஞ்சு' என்ற சிறுகதையில் கண் திருஷ்டியினால் குழந்தைக்கு உடல்நலமின்மை ஏற்படும் என்ற நம்பிக்கையினைச் சுட்டிக்காட்டுகின்றார்.

> **"எந்தப் பாவி கண் போட்டாளோ என் குழந்தைக்கு இப்படி வந்துவிட்டது" என்று மறுகினாள் சரோஜா.**
>
> **"ஊரிலே எல்லாருந்தான் சொன்னார்கள். இந்த ஊரிலேயும் குழந்தையைப் பார்த்தவர்கள் ஆளுக்கு ஒன்று சொன்னார்கள் யார் கண்பட்டதோ"**
> (குற்றமுள்ள நெஞ்சு, ப.154)

என்ற வரிகள் ஊரார் கண்பட்டால் குழந்தைக்கு உடல் நலமின்மை ஏற்படும் என்பதனை விளக்குகின்றன.

**வார்த்தை விளையாட்டு**

கி.வா.ஜ. 'மாயவரம்' என்ற ஒரு சொல்லை அடிப்படையாகக் கொண்டு ஒரு கதையே எழுதக் கூடிய புலமை வாய்ந்தவர்.

"மாயவரத்துக்கா போகிறீர்கள்?" என்று ஒருவர் கேட்டார்.

"மாயவரமாவது! மாயூரம் என்று சொல். இப்போது அதன் பேர் மாறிவிட்டது. மாய வரம் - என்ன அமங்கலமான பெயர்? மாய யாராவது வரம் கேட்பார்களா? என்றார் மற்றவர்.

இந்தச் சம்பாஷணை அரைகுறையாகக் காதில் பட்டுக் கொண்டிருக்கும்போதே நித்திரா தேவி என்னைத் தன் அணைப்பில் இறுக்கிக் கொண்டாள்.

இப்போதுதான் விழித்தேன். நான் கண்டது சொப்பனம் என்று தெரிந்தது. ஆம்! மாயா வரம் கேட்ட மார்க்கண்டேயரைப் புராணத்திலே கண்டிருக்கிறோம். மாயவரம் கேட்ட மார்க்கண்டேயரை நான் கனவிலே கண்டேன்". (மாயவரம், ப.64)

'மாய வரம்' என்ற கதையில் மார்க்கண்டேயர் என்றும் 16 வயதுடன் இருந்தால் என்னென்ன பிரச்சினைகளைச் சந்திக்க நேரிடும் என்பதனை மிகத் தெளிவாக எடுத்துக்கூறி மாயவரம் வேண்டுகின்ற நவீன மார்க்கண்டேயரை அறிமுகம் செய்கின்றார்.

## தீமைக்கு நன்மை செய்தல்

கி.வா.ஜ. தமது 'தந்தை பட்ட கடன்' என்ற சிறுகதையின் மூலம் தீமைக்கு நன்மை செய்தல் என்ற கருத்தினை வலியுறுத்துகின்றார்.

> கணக்குப் பரிசோதகர் ஒருவரை வைத்து எல்லா வற்றையும் சரிபார்க்கச் சொன்னார் டாக்டர். அவரால் கண்டு பிடிக்கும் எல்லைக்குள் இரண்டாயிர ரூபாய்க்குக் கணக்கு வரவில்லை என்று தெரிந்தது. டாக்டர் தனியே நாராயணனை அழைத்தார். "இந்தா நாராயணன் உன்னிடத்தில் எனக்கு எத்தனை அபிமானம் இருந்ததென்பது உனக்கே தெரியும். நீ தவறான செலவுகள் செய் கிறாய் என்று முன்பே சந்தேகித்தேன். கணக்குத் தப்பு நடக்கிறது என்று கூட ஊகித்தேன். ஆனாலும் நீ திருந்துவாய் என்ற நம்பிக்கையில் இருந்துவிட்டேன். உன் குற்றங்களை நான் மறைத்துவிடலாம், உலகம் மறைக்காதே. என்னுடைய நண்பர்களுக்கு உன்னுடைய தவறுகள் தெரிந்துவிட்டன. அவர்கள் என்னிடம் சொன்னவற்றையெல்லாம் உன்னிடம் சொல்லிப் பயனில்லை. இரண்டாயிர ரூபாய் கணக்கிற்கு வர வில்லை. அது போனால் போகிறது. இனியாவது நீ திருந்தினால் நான் சந்தோஷப்படுவேன். உன்னைக் கண்டிப்பாக இங்கே வைத்துக் கொள்ளக் கூடாது என்று என் நண்பர்கள் வற்புறுத்திச் சொல்கிறார்கள். 'அவன் இருந்தால் உங்கள் முகத்தில் விழிக்க மாட்டோம்' என்று சொல் கிறார்கள். நீ சௌக்கியமாக வாழ வேண்டும் என்பது தான் என் ஆசை. ஆனால் இனிமேல் உன்னை என்னிடம் வைத்துக் கொண்டால் என்னிடம் வைத்தியத்துக்கு வருகிறவர்களே இருக்க மாட்டார்கள். அவ்வளவு தூரம் உன்னால் என் பெயர் கெட்டுவிட்டது. ஆகையால் என் நண்பர்களை உத்தேசித்து உன்னை விலக்கி விடுவதுதான் நல்லது என்று தோன்றுகிறது. ஆனாலும் உன்னிடத்தில் எனக்குள்ள அபிமானம் குறையாது. உனக்கு ஏற்ற வேலை ஏதாவது காலி இருந்தால் பார்த்துக் கொண்டு வந்து சொல்; நான் சிபாரிசு செய்கிறேன். நானும் பார்க்கிறேன். உன்னால் எனக்கு ஏற்பட்ட நஷ்டம் இரண்டாயிரம் இதில் ஓர் ஆயிரத்தைத் தள்ளிவிடுகிறேன். மற்ற

*ஆயிரத்துக்கு நீ ஒரு பாண்டு எழுதிக் கொடு. என் நன்பர்களுக்குக் காட்டிச் சமாதானம் செய்வதற் காகத்தான் அதைக் கேட்கிறேன். உன்னைத் துன்புறுத்த வேண்டு மென்பது என் நோக்கம் அல்ல. இனியாவது நீ புத்தியுடன் இருந்து வர வேண்டுமென்று நான் ஆசைப்படுகிறேன்" என்று அவர் சொல்லச் சொல்ல நாராயணனுக்குத் தான் செய்த தவறு நன்றாக மனசில் உரைத்தது; உறுத்தியது. (தந்தை பட்ட கடன், பக்.121-122)*

மேற்கூறியவற்றிலிருந்து தீமையை நன்மையால் வெல்ல வேண்டும் என்ற கருத்துப் புலப்படும். தீமைக்குத் தீமை செய்தலை விட நன்மை செய்தலே சிறந்தது என்பது விளங்கும்.

## மனிதர்களில் மூன்று சாதி

கி.வா.ஜ. தமது 'மூன்று சாதிகள்' என்ற சிறுகதையில்,

*மனிதர்களில் மூன்று சாதி இருப்பதை ஒரு பக்தனுக்குக் காட்ட வேண்டுமென்று கடவுள் திருவுளம் கொண்டார். . .*

*கடவுள் சொல்லத் தொடங்கினார். பக்தா மூவரையும் நீ நன்றாகத் தெரிந்து கொள்ள வில்லை. முதலில் பார்த்தவன் ஜனங்கள் பேரைச் சொல்லிக் கொண்டாலும் தனக்கு ஆகாதவன் ஒழிந்து போகவேண்டும் என்று விரும்பினான். இது மிருக சுபாவம். ஆகையால் அவனுக்கு மிருகப் பிறவியே ஏற்றது. இரண்டாம் மந்திரியோ சங்கடந் தாங்காமல் கொடுமைக்குப் பயந்து ஒதுங்கி வாழ எண்ணுகிறான். இது மனிதன் இயல்பு. மூன்றாமவன் கொடுமை நன்மையாக வேண்டுமென்று விரும்புகிறான். கொடுமை எந்த இடத்திலும் இருக்கக் கூடாதென்ற எண்ணம் உடையவன் அவன். அவனுடைய வேண்டுகோள் நிறைவேறினால் மூன்று பேரும் நன்மையை அடைவார்கள். அரசன் எப்படிப் போனாலென்ன என்று அவன் எண்ணவில்லை. பகைவன் சாக வேண்டும் என்பவன் அதமன்; பகைவனிடத்தி லிருந்து விடுபட வேண்டுமென்பவன் மத்திமன்;*

**பகைவன் திருந்த வேண்டுமென்று ஆசைப்படுபவன் உத்தமன்".** (மூன்று சாதிகள், ப.164-168)

என்ற வரிகளின் மூலம் மனிதர்களை இனம் பிரித்துக் காட்டுகின்றார். அதமன், மத்திமன், உத்தமன் என்ற மூன்று சாதி மனிதர்களில் இருப்பதைக் காட்டுகின்றார்.

## அறிவியல் செய்தி

கி.வா.ஜ. தமது அழைப்பு என்ற சிறுகதையில்,

**காக்கை குயில் முட்டைகளை அடைகாத்துக் குஞ்சு பொரித்தது** (அழைப்பு, பக்.169-172)

என்ற அறிவியல் செய்தியைக் குறிப்பிடுகின்றார்.

## முடிவுரை

கி.வா.ஜ.வின் சிறுகதையில் ஆழ்ந்த மனித நேய உணர்வு - தன்னல வேட்கை வேலியைத் தகர்த்தெறிந்து மற்ற மனிதரின் கண்ணீரை வழித் தெறியும் கைவிரலாகத் துணை புரியும் அன்புத் தழுவல் - சிறப்பிடம் பெறுவதை உணர முடிகிறது. கி.வா.ஜ.வின் சிறுகதைகளில் பூ விற்பவன், பூக்காரி, பிச்சைக்காரச் சிறுமி, தபால்காரன், வேலைக்காரர்கள், ஏழை எளியவர்கள் முதலியோரே முக்கியமான கதாபாத்திரங்கள். ஏற்றத் தாழ்வற்ற சமுதாயத்தைக் கி.வா.ஜ. தமது சிறுகதைகளில் காண விழைகின்றார்.

# உரையும் பதிப்பும்

*ச. சிவகாமி*

**பாடம் கருத்தே சொல்வகை சொற்பொருள்**
**தொகுத்துரை உதாரணம் வினாவிடை விசேடம்**
**விரிவு அதிகாரம் துணிவு பயனோடு**
**ஆசிரிய வசனம் என்று ஈரேழ் உரையே** (பொதுப்பாயிரம்21)

என்று, மூலநூலுக்கு எழுதப்படும் உரை அமைய வேண்டிய முறைமைகளை நன்னூல் விளக்குகின்றது. இவ்விலக்கணத்திற்கு இலக்கியமாக எடுத்துக்காட்டாகக் கி.வா.ஜ. உரைகள் அமைந்து சிறக்கின்றன. இருபதாம் நூற்றாண்டு உரையாசிரியரிடையே, முத்திரை பதித்த மூதறிஞராக, இணையற்றவராக, உரை வரைவில் தம் ஆசிரியர் உ.வே. சாமிநாதையரையும் விஞ்சிய வராக, புதுநெறி படைத்தவராகச் சிறப்புறும் கி.வா.ஜ. உரைகள் இக்கட்டுரையின் ஆய்வுத் தளமாகின்றன.

அபிராமி அந்தாதி விளக்கவுரையின் நான்காம் தொகுதியான திருக்கோலம் முன்னுரையில் கி.வா.ஜ, 'பழைய பாடல்களைக் கட்டுரை வடிவில் விளக்கும் முறையைப் பல காலமாக ஆண்டு வருகிறேன். சங்க நூற்பாடல்கள் சிலவற்றை விளக்கிச் சங்கநூற் காட்சிகள் என்னும் வரிசையில் எட்டு நூல் களையும், காவியமும் ஓவியமும் என்ற நூலையும் எழுதினேன். பிறகு பன்னிருதிருமுறைகளில் உள்ள பாடல்கள் சிலவற்றைத் தேர்ந்தெடுத்து விளக்கித் திருமுறை மலர்கள் என்ற வரிசையில் பன்னிரண்டு நூல்களை எழுதினேன். கந்தர் அலங்காரம், கந்தர் அநுபூதிப் பாடல்களுக்கும் விளக்கம் எழுதினேன். அதே முறையில் அபிராமி அந்தாதிக்கும் விளக்கக் கட்டுரைகள் எழுதி நிறைவேற்றும்படி முருகன் திருவருள் பாலித்தான்' எனத் தாம் எழுதிய உரைகளைப் பட்டியலிட்டுள்ளார். இவற்றின் பின் திருப்பாவை, பெரியபுராணம் (முழுமை?) ஆகியவற்றிற்கும் உரை வரைந்துள்ளார். இவற்றுள் கந்தரநுபூதிக்கு அமைந்த அநுபூதி விளக்கம், அபிராமி அந்தாதியை விளக்கும் எழில் உதயம், மாலை பூண்ட மலர், சரணம் சரணம், திருக்கோலம்

ஆகிய நான்கு தொகுதிகள், திருநாவுக்கரசர் புராணத்தின் விளக்கமாக அமையும் பெரியபுராண உரையின் 6, 7, 8ஆம் தொகுதிகள் என்பன இக்கட்டுரையின் ஆய்வுப் பொருளாகின்றன. காவியமும் ஓவியமும், வழிகாட்டி, திருமுருகாற்றுப்படை விளக்கம் என்பனவும் துணையாகின்றன.

பதிப்பும் உரையும் நெருங்கிய தொடர்புடையதாத லாலும், கி.வா.ஜ. வின் திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு மிக்க பெருமை யுடையதுடன் அவரின் தமிழ்ப்பணியில் ஓர் மைல் கல்லாகச் சிறப்புறுவதாலும் இக்கட்டுரையுள் அந்நூலும் அடிப்படைத் தரவாக மேற்கொள்ளப்பட்டுள்ளது. உரைக் கொள்கை, உரை உத்தி, உரைத் திறன், கருத்துரைகள், பதிப்புக் கொள்கை, பதிப்புத் திறன், உரையாளர் - பதிப்பாளராகக் கி.வா.ஜ, நிறைவுரை என்பதாக இக்கட்டுரை அமைகிறது. இக்கூறுகளை விளக்குமுன் உரையாசிரியர் யார் என்பது பற்றி கி.வா.ஜ. வின் மொழியை உணர்ந்து செல்லுதல் நலம் பயக்குமாதலின் முதற்கண் அது இங்கு எடுத்துரைக்கப்படுகிறது.

**உரையாசிரியர் - கி.வா.ஜ. விளக்கம்**

மு.வை. அரவிந்தனின் உரையாசிரியர்கள் நூலுக்குச் சிறப்புரை வழங்கியுள்ள கி.வா.ஜ. அதனுள், இலக்கண நூல் களுக்கு உரைகள் இல்லாவிடின் அவற்றின் பொருளை அறிவது எளிதன்று. தொல்காப்பியத்தில் இலக்கணத்துக்கு உரை இவ்வாறு அமைய வேண்டும் என்ற வரையறை இருக்கிறது. இலக்கணமும் இலக்கியமும் சமய நூல்களும் சுருங்கிய சூத்திர வடிவில் அமைந்திருப்பதால், அவற்றின் பொருளை அறிந்து கொள்ள உரைகள் இன்றியமையாதவை. இலக்கிய நூல்களின் பொருளையும் மரபறிந்து, இலக்கண அமைதி தெரிந்து விளக்க வேண்டும். உரையாசிரியர்கள் அவ்வாறு செய்கிறார்கள். நூல் களின் பொருள்களை விளக்குவது மாத்திரம் உரையாசிரியர்களின் இயல்பு என்று எண்ணக்கூடாது. நூல்களின் கருத்தை விளக்கும் போது நூலைக் கற்பார் உள்ளம் கொள்ளும்படிப் பலவிதமான உத்திகளை மேற்கொண்டு விளக்க வேண்டும். நூலாசிரியரின் உள்ளக்கிடக்கையை நன்கு தெரிந்துகொண்டு கருத்தை விளக்கு வதோடு, உவமை மேற்கோள் முதலியவற்றையும் காட்டித் தெளிவிக்க வேண்டும். இதுவோ அதுவோ என்று ஐயுறுவதற் குரிய இடங்களில் தக்க காரணங்களைக் காட்டி இன்னதுதான் என்று தெளிவுபடுத்த வேண்டும். செய்யுள் வழக்கு, உலக வழக்கு இரண்டிலிருந்தும் மேற்கோள்களும் ஒப்புமைகளும் காட்ட

வேண்டும். இலக்கியங்களில் உள்ள நுட்பங்களையும் நயங்களையும் எடுத்துக்காட்டும் உரையாசிரியர்களை மக்கள் பெரிதும் விரும்புவார்கள் தமிழ் இலக்கிய இலக்கணங்களுக்கு உரை எழுதிய ஆசிரியர்கள் பலர் அவர்கள் புலமையிலும் விளக்கத் திறமையிலும் நடையிலும் வெவ்வேறு வகையானவர்களாக இருக்கிறார்கள். இலக்கண நூல்களுக்கும் சமய நூல்களுக்கும் உரை எழுதிய ஆசிரியர்களின் விளக்கங்களில் பொருள் தெளிவை எதிர்பார்க்கிறோம். இலக்கியங்களின் உரைகளிலோ பொருள் தெளிவோடு நயங்களையும் எதிர்பார்க்கிறோம். (பக். 24-25) எனக் கூறுகிறார். அவரின் 'உரை' பற்றிய இக் கருத்துரை அவரது உரைகளுக்கும் முழுமையாகப் பொருந்துவதைத் தொடரும் பகுதிகள் புலப்படுத்தக் காணலாம். இதனை அவரின் உரை பற்றிய கொள்கையாகவும் கொள்ளலாம்.

இனி அவரது உரைகள் வழி வாசகர் இனங்காணும் உரைக் கொள்கைகளைக் காணலாம்.

### உரைக் கொள்கைகள்

ஒரு உரையானது எப்படி அமையவேண்டும் என்று உரையாசிரியர் கருதுகிறாரோ அவ்வாறே தமது உரையைப் பெரும்பாலும் எழுதுகிறார். எனவே அவ்வுரையினின்றும் உரை பற்றிய அவரது எண்ணங்களைத் தொகுத்துக் காண, வெளிப் படுத்த முடிகின்றது. அவ்வகையில் புலனாகும். கி.வா.ஜ.வின் உரைக் கொள்கைகள் இங்கு வரிசைப்படுத்தப்படுகின்றன.

1. உரையானது மாணாக்கர், ஆய்வாளர், சுவைஞர், என எத்திறத்தாருக்கும் பயனுடையதாக அமைதல் வேண்டும். உரையின் எளிமை, உரையின் போக்கு, உள்ளடக்கிய செய்திகள் என்பன இதனை உணர்த்துகின்றன. இவற்றிற்கான சான்றுகளைத் தொடரும் பகுதிகளில் பெறலாம். கி.வா.ஜ.வைப் பிற உரையாசிரியரிடமிருந்து உயர்த்தியும், தனித்துச் சிறப்பித்தும் காட்டும் பண்பாக இது அமைதலும் சுட்டத்தக்கது.

2. நூலின் இயல்புக்குத் தக உரைவரைதலும் இன்றியமை யாதது. இதனைச் சங்க இலக்கியம், பக்தி இலக்கியம் முதலான வற்றிற்கும் எழுதியுள்ள உரைகள் வெளிப்படுத்துகின்றன. சங்கப் பாடலுக்கு உரை தரும் 'காவியமும் ஓவியமும்' கட்டுரை வடிவம் பெற்றுள்ளதாயினும் கதையமைப்பும் உரையாடல்பான்மையும் கொண்டிலங்குகிறது. "சங்க நூலை நேரே பயின்று இன்புறும் தகுதி யாவருக்கும் இராது. ஆயினும் சங்க நூற் பொருளை

உணர்ந்தால் இன்புறுவதற்கு ஒவ்வொரு தமிழனுக்கும் தகுதி உண்டு. ஆகவே சங்க நூலில் உள்ள சில செய்யுட்களைப் புது முறையில் தமிழன்பர்களுக்கு அறிமுகப்படுத்தலாம் என்ற எண்ணத்தினால் 'காவியமும் ஓவியமும்' என்ற பெயரோடு ஒரு கட்டுரை வரிசையைக் கலைமகளில் தொடர்ந்து எழுதிவரலானேன்' (முன்னுரை. ப. XV) எனும் ஆசிரியர் கூற்று இவண் கருதத்தக்கது' எனவே இந்நூலில் 'அறிமுகம்' என்பதற்கேற்ப, மேற்கோள்களோ, ஒப்பிடலோ காண்பதற்கில்லை.

'அனுபூதி விளக்க'த்துள் அதனோடு தொடர்புடைய கந்தரலங்காரம் புராணக்கதைகள் மிகுந்து காணப்படுகின்றன. 'அபிராமி அந்தாதி' விளக்கத்துள் 'சௌந்தர்ய லகரி'யும், 'லலிதா சகசிர நாமமும்' சிறப்பிடம் கொள்கின்றன. "அம்பிகையின் இயல்புகளை அபிராமிபட்டர் எடுத்துச் சொல்லும்போது லலிதா சகசிர நாமத்திலுள்ள பல திருநாமங்கள் நினைவுக்கு வருகின்றன. அபிராமிபட்டர் பல காலும் அந்தச் சகசிர நாமத்தைச் சொல்லி அன்னையை அருச்சித்தவர். ஆதலின் அவருடைய உள்ளத்தில் அந்தத் தெய்வீகத் திருநூல் நன்றாகப் பதிந்திருந்தது. அவர் பாடிய பாடல்களிலெல்லாம் அந்த நூலில் வரும் அம்பிகையின் திருநாமங்களும் அவற்றால் தெளிவாகும் பண்புகளும் அமைந்திருத்தல் இயல்பே. எனவே, இந்த விளக்கக் கட்டுரைகளில் பல இடங்களில் லலிதாசகசிர நாமத்தை எடுத்துக் காட்டியிருக்கிறேன்" எனக் கி.வா.ஜ. நவில்வது நோக்கற்பாலது.

பெரியபுராண விளக்கத்துள் தலவரலாறு, நாயன்மார் அத் தலத்திற்குப் பாடியுள்ள பாடல், பிறர் பாடியுள்ள பாடல்கள், சேக்கிழார் சுட்டிச் செல்லும் பாடல்களை முழுமையாகத்தரல், இடம்பெறும் கோயில்களின் சிறப்பு, வழிபட்டோர் திறம் எனப் பலவும் உரைக்கப் பெற்றுள்ளமையும் இக்கருத்தை வலியுறுத்தும்.

3. உரை விளக்கத்திற்கு, தெளிவிற்கு மேற்கோள்கள் மிகு பயனளிக்கும். எனவே கட்டாயமாக இடம்பெறல் தேவை. மேற் கோளாகப் பிற நூற்கருத்துகள் இடம்பெறாத பாடல்களே இல்லை எனுமளவிற்கு இவரது விளக்கவுரை நூல்கள் அமைந்துள்ளமை இதனை உணர்த்தும்.

4. மேற்கோள்களுள்ளும் நூலாசிரியரின் பிறநூற் கருத்து களையும் இணைத்துத் தரல் கூடுதல் விளக்கத்திற்கு, நூலாசிரியர் பற்றிய அறிவிற்கு இடனாகும் என்ற கருத்தும் புலப்படுகிறது. "அருணகிரி நாதருக்கு இந்த ஆசை உண்டாயிற்று. இந்த

உடம்பை, மற்றவர்கள் சாகும்பொழுது அல்லற்படுவது போல விடக் கூடாது. இந்த உடம்பு வீழ்வதன் முன் முருகனிடம் அருள் பெற்று, இது மறைந்த பூதங்களோடு ஒன்றுபடுவதற்குரிய ஆற்றலைப் பெறவேண்டும்' என்று விரும்பினார். . . அந்த வேண்டுகோள் கந்தர் அலங்காரத்தில் இருக்கிறது. அது வருமாறு;

**தெய்வத் திருமலைச் செங்கோட்டில் வாழும் செழுஞ்சுடரே**
**வைவைத்த வேற்படை வானவனே மறவேன் உனை நான்;**
**ஐவர்க்கிடம் பெறக் காலிரண்டோட்டி அதில் இரண்டு**
**கைவைத்த வீடு குலையுமுன்னே வந்து காத்தருளே**

இந்தத் திருப்பாட்டில் அருணகிரியார் முருகனிடம் விண்ணப்பம் செய்து கொள்வதோடு, 'அங்ஙனம் செய்தால் அடியேன் உன்னை மறக்க மாட்டேன்' என்றும் சொல்கிறார். இந்த உடம்பினால் உண்டாகும் வேதனைகளை நன்கு அறிந்த வராதலினாலும், இதனைப் போற்றிப் பாதுகாத்தாலும் ஒரு நாள் குலைந்துவிடும் என்ற உண்மையை உணர்ந்தவராதலி னாலும் எடுத்த தேகம் விழுவதன்முன் இதனால் வரும். அல்லலைப் போக்கி இதை உதறிவிட வேண்டும் என்ற ஆர்வம் உந்த, இந்த விண்ணப்பத்தைச் செய்து கொண்டார்" என்பதைச் (அநுபூதி விளக்கம், பக். 175-176) சான்றாக்கலாம்.

5. உலகியல் சுட்டி விளக்கமளித்தல் கற்பார் புரிந்து கொள்வதற்கு எளிதான வழிமுறையாகும். இதனை "ஓர் ஊருக்குப் போகின்றோம். அங்கே வானளாவிய கோபுரம் ஒன்று இருக்கிறது. மண் குடிசைகளும் இருக்கின்றன. வேறு மாட மாளிகைகளும் இருக்கின்றன. அந்த ஊருக்குப் போனவன், தன்னுடைய ஊருக்கு வந்து அங்குள்ள ஆச்சரியத்தையெல்லாம் நினைத்துப் பார்க்கிறான்; அல்லது சொல்கிறான். 'அங்கே வீடுகள் இருந்தன. மனிதர்கள் எல்லாம் காலாலே நடந்தார்கள். வீதிகள் இருக்கின்றன' என்றா சொல்வான்? அந்த ஊரிலே எவ்வளவு பெரிய கோபுரம்! எவ்வளவு பெரிய கோயில்!' என்று மற்ற இடங்களிலே காணாத பொருளைத் தான் சொல்லுவான். அவ்வாறே, நாம் எத்தனையோ நூல்களைப் படித்தாலும் கந்தர் அநுபூதியைப் படிக்கும் பொழுது ஏனைய நூல்களில் உள்ள சில செய்திகள் இருந்தாலும் அவற்றைப் பெரியனவாகப் பாராட்டாமல், இதில் மாத்திரம் காணப்படுகின்ற அநுபவத் துளிகளாகிய பாடல்களை நினைந்து,'இத்தகைய உயர்ந்த பாடல்களைக் கொண்ட நூல் வேறு எங்கு உண்டு'? என்று விம்மிதம் அடைவோம்" எனும் பகுதி காட்டும்.

6. மறுபதிப்புகளில், சோம்பல் கொள்ளாது மேலும் தேவையானவற்றை இணைத்து அல்லது மாற்றம் செய்து தர வேண்டும் என்பது இவரது உரை பற்றிய உயரிய கொள்கை யாகும். திருமுருகாற்றுப்படையை 'வழிகாட்டி' எனும் தலைப்பில் 1947இல் முதலில் வெளியிட்டவர் பின் 'திருமுருகாற்றுப்படை விளக்கம்' என 1968இல் மறுவெளியீடாகத் தந்துள்ளார். "இந்த விளக்கவுரையில் 'வழிகாட்டி'யில் இல்லாத பல்வேறு செய்தி களைக் காணலாம். முக்கியமாகச் சமய சம்பந்தமான கருத்துக்களின் விளக்கங்கள் விரிவாக இந்த நூலில் உள்ளன. சில செய்திகளை விளக்கும் உவமைகள் இந்த நூலில் புதியனவாக இருக்கும். நச்சினார்க்கினியர் உரை, வேறு ஒரு பழைய உரை ஆகியவற்றில் உள்ள பல பகுதிகளை இடையிடையே காட்டியிருக்கிறேன்" (முன்னுரை) எனக் கூறியுள்ளதைக் காட்டாக்கலாம். இரு பதிப்பு களுக்கும் இடையுள்ள காலகட்டத்தில் நூலாசிரியர் பெற்ற அறிவு வளர்ச்சியைக் கற்பாரும் பெறவேண்டும் எனும் நன்னோக்கமே இதற்கு அடிப்படை.

7. குறிப்பிட்ட நூல் பற்றிய உரையாசிரியரின் கருத்துகளும் முழுமையாக இடம்பெற வேண்டும் என்ற நோக்கில் பலவாறாகப் பரந்து விரிந்த உரையையே கி.வா.ஜ. பெரிதும் போற்றுகிறார் என்பதனை அவரது உரைப்படைப்புகள் வெளிப்படையாய் அறிவிக்கின்றன.

8. தேவையான பின்னிணைப்புகளை அளித்தல் கற்பாருக்குப் பேருதவியாகவும், உரையை மேலும் எளிமைப் படுத்துவதாகவும் அமையும் கோட்பாட்டினர் என்பதையும் உணர முடிகிறது. அபிராமி அந்தாதியின் இரண்டாம் பகுதியான 'மாலை பூண்ட மலரி'ன் பின்னிணைப்பாக, செய்யுட்களில் வந்துள்ள அம்பிகையின் திருநாமங்கள், விளக்கத்தில் மேற்கோள் காட்டிய லலிதா சகசிர நாமத்தில் வரும் திருநாமங்கள், மேற் கோளாகக் காட்டிய நூல்கள் என்பனவற்றின் பட்டியல் அமை வதையும், திருமுருகாற்றுப்படை விளக்கத்தில் அருஞ்சொற்பொருள் இடம்பெறுவதையும், அநுபூதி விளக்கத்தில் அந்நூலுள் காணப்படும் முருகன் திருநாமத் தொகுப்பிருப்பதையும் இவண் எண்ணலாம்.

### உரை உத்திகள்

தமது உரைக் கொள்கைகளைச் செயல்படுத்த கி.வா.ஜ. பயன்படுத்தும் முறைகளை, உத்திகளாக இங்கு நோக்கலாம்.

*1. நேரிடை மொழிதல்:* ஓரிடத்தைக் காண விரும்புவோரை நேரே அழைத்துச் சென்று அதன் ஒவ்வொரு பகுதியையும் விளக்கிச் சிறப்பித்துரைப்பதுபோல இவர் நூலைச் சுவைக்கப்புகும் சுவைஞரை விளித்து உரையாடுவது போல உரை கூறிச் செல்கிறார். ''அன்னையின் அழகையும் அருளையும் ஆற்றலையும் திருவிளையாடல்களையும் வீரச் செயல்களையும் திருநாமங்களையும் எண்ணி எண்ணி இன்புற்று, நம்மையும் எண்ணி எண்ணி வழிபாடு பண்ணி நலம் பெறச் செய்கிறார். எழில் உதயமானால் அதனைக் கண்டு இதயமலர் மலரும் அல்லவா?" என்பது போன்று (எழில் உதயம் - ப. 1) இது அமைகிறது. இதனால் சுவைஞரும் நூலோடு ஒன்றி நிற்றல் இயல்பாகிறது.

*2. உரையாடல்:* எளிமையும் தெளிவும் கிடைக்கவும், உரைக்குச் சுவை கூட்டவும் இவ்வுத்தியைக் கிவாஜ. பயன்படுத்துகிறார்.

> **''என்ன விண்ணப்பம்''? என்று கணபதி தும்பிக்கையை அசைத்துக் கேட்கிறார்.**
>
> **"உம்முடைய அன்னையைப் பாடவேண்டும்"**
>
> **"என் அன்னையை நீ பாடுவது ஏன்?"**
>
> **"அந்தப் பிராட்டி எனக்கும் அன்னை"**
>
> **"உனக்கா?"**
>
> **"ஆம்; எனக்கு மட்டும் அல்ல; உலகம் ஏழுக்கும் அவளே தாய். சொல்லமுடியாத சீரைப்பெற்ற அபிராமி உலகேழும் பெற்ற பெருமாட்டி"**
>
> **"நீ என்ன செய்யப் போகிறாய்?"**
>
> **"அந்த அன்னையைப் பற்றி ஓர் அந்தாதி பாட வேண்டும்"**
>
> **"அதற்கு என்னை என்ன செய்யச் சொல்கிறாய்?"**
>
> **"தேவரீரே அதை நான் பாடும் வகையைக் கற்பித்தருள வேண்டும். இன்ன இன்னபடி பாடு என்று கட்டுரைத்தருள வேண்டும்."**

எனும் பகுதியை (மேற்படி, பக். 10-11) எடுத்துக்காட்டலாம்.

*3. வினா-விடையமைப்பு:* பொருளை மேலும் மேலும் விளக்கிச் செல்வதற்கு வாய்ப்பாக முதற்கண் அது தொடர்பாக எழும் ஐயங்களை வினாக்களாக்கிப் பின் அவற்றிற்கு விடை தருவதன் மூலம் பாடற் பொருளை விளக்கி நிற்கும் நயமும்

பாராட்டத்தக்கது. அநுபூதி விளக்கத்துள், 'காட்டு மயிலையும் வேடன் வேலையும் குப்பைக் கோழியையுமா பாடப் போகிறோம்? முருகன் ஏறும் மயிலைப் பாட வேண்டுமானால் முருகனைப் பாடாமல் இருக்க முடியுமா? அந்த மயிலுக்குப் பெருமை வந்ததே முருகனால் தானே? அப்படியே வேலைப் பாடினால் அதைப் பிடித்த முருகனையும் பாடத்தான் வேண்டும். சேவலின் புகழும் முருகன் புகழோடு இணைந்ததே. ஆகையால் மயிலையும் வேலையும் சேவலையும் பாடிக் கொண்டே இருப்பது என்றால் அந்த மூன்றோடும் சேர்த்து முருகனைப் பாடுவதாகவே முடியும்" என வரும் பகுதி (ப. 47) இதற்குச் சான்றாகும்.

4. **கதை கூறல்:** உரைப்போக்கு தொய்வுபடாமல் சுவையுடன் தொடரவும், சுவைஞரை உரைவயப்படுத்தவும் இவ் வுத்தி மேற்கொளப்படுகிறது எனலாம். இதற்குச் சான்றாகப் பின்வரும் அநுபூதி விளக்கப்பகுதியைக் (பக். 58-59) காட்டலாம்.

### எப்படிச் சொல்வது

ஒரு தாய் தன் குழந்தைக்கு ஒரு தின்பண்டத்தைத் தந்தாள். அது மிக்க இனிமையாக இருந்தது. குழந்தை அதைச் சுவைத்துச் சுவைத்துத் தின்றது. தின்ற ஆனந்தத்தில் அது கூத்தாடியது. அப்போது அதைக் கண்ட வேறு ஒரு குழந்தை, "நீ என்ன தின்றாய்?" என்று கேட்டது.

"அம்மா தந்த தின்பண்டத்தைத் தின்றேன்!" என்றது ஆனந்தம் பெற்ற குழந்தை.

"அதன் பேர் என்ன? அது எப்படி இருந்தது?" என்று பக்கத்துவீட்டுக் குழந்தை கேட்டது.

"அதன் பேர் எனக்குத் தெரியாதே! எப்படி இருந்த தென்று சொல்லவும் தெரியாதே!" என்று குழந்தை தடுமாறியது. பிறகு, "இதோ அம்மாவிடமே கேட்டுச் சொல்கிறேன்" என்று சொல்லி அன்னையிடம் ஓடியது.

"அம்மா! நீ எனக்குத் தந்த தின்பண்டத்தின் பேர் என்ன? நன்றாக இருந்ததே! அது என்ன? ஏன் அப்படி இருந்தது? அதை எப்படிச் சொல்வது? நீ சொல் அம்மா!" என்று குழந்தை கேட்டது.

அந்தக் குழந்தையின் நிலையில் நின்று பேசுகிறார் அருணகிரியார். "முருகா, நான் பெற்ற இன்பத்தைப் பற்றிச்

சொல்ல எனக்கு ஆற்றல் இல்லை. நீ சொல் அப்பா. நீ சொல்ல, அதனைக் கேட்டு நான் மற்றவர்களுக்குச் சொல்கிறேன்" என்று வேண்டுகிறார். இந்த வேண்டுகோளே அநுபூதியின் இரண்டாவது பாட்டு.

இவ்வாறு கதை கூறும் போக்குடன் பொருள் விளக்கம் பெறும் பாடற் கருத்துடன் தொடர்புடைய புனைக் கதைகளைத் தரும் பாங்கையும் இணைத்து நோக்கலாம். பெரியபுராண விளக்கத்துள் இடம்பெறும் தலவரலாறு, கோயில் வரலாறுகளில் இவை மிக்குக் காணப்படுகின்றன.

*5. உலகியல் உணர்த்தல்:* அறிந்தது கொண்டு அறியாததை உணர்த்துதல் என்ற நிலையில் யாவரும் அறிந்த உலகியலை உலக இயற்கையை நடப்பியலைச் சுட்டிப் பொருள் விளக்கம் தரும் பாங்கையும் கி.வா.ஜ.வின் உத்தியாக அறிய முடிகிறது. இவர் உரை பெற்ற வெற்றிக்கு இத்தகு உத்திகளே காரணம் எனில் மிகையன்று. உலகியல் வழி பொருள் விளக்கும் பண்பிற்குச் சான்றாகத் திருமுருகாற்றுப்படை விளக்கப் பகுதியைச் சுட்டலாம். "போலீஸ்காரர்களுக்கும் டாக்டர் களுக்கும் இன்ன நேரந்தான் வருவார்கள் என்ற வரையறை யிருந்தால் அவர்களால் மக்களுக்கு மிகுதியான பயன் உண்டாகாது. எப்போது அழைத்தாலும் அவர்கள் சென்று உதவ வேண்டும். அதனால் மற்றவர்களுக்கு வாகனம் இருந்தாலும் இல்லாவிட் டாலும் அவர்களுக்கு அவசியம் வேண்டும். மிக விரைவில் சென்று தங்கள் கடமையை ஆற்றம்படி அவர்களுக்கு வசதி இருக்க வேண்டும்.

முருகன் அமராவதி காவலன். உலகத்தையே காப்பவன் அசுரர்களால் வரும் இடர்களைப் போக்க அவன் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறான். அவனைப் போன்ற பெரிய போலீஸ் காரன் யாரும் இல்லை. போலீஸ்காரனைப் போலவே அவன் 'சதுக்கமும் சந்தியும்' நிற்பவன். பெரிய சேனாபதியல்லவா? 'சேனைத் தலைவர்களுள் நான் முருகனாக இருக்கிறேன்' என்று கண்ணன் கீதையில் அருளியிருக்கிறான். ஆகவே, அவன் விரைவிலே சென்று மக்களுக்கு அருள்புரிவதற்கு ஏற்ற வாகனங்களைக் கொண்டிருக்கிறான்.

முருகன் சிறந்த மருத்துவன்; 'பவரோக வயித்தியநாதப் பெருமாள், அவன். வேறு எந்த மருந்தாலும் தீராத பிறவிப் பிணி அவனுடைய திருவருளால் போய்விடும். எந்தச் சமயத்தில் நோயாளிக்கு அபாயநிலை ஏற்பட்டாலும் உடனே சென்று

ஆவன புரிவது டாக்டரின் கடமை. மிகவும் விரைவிலே சென்று நோயாளியைக் கவனிக்க வேண்டும். அதனால்தான் சிறிய டாக்டராக இருந்தாலும் கார் வைத்துக் கொண்டிருக்கிறார் புகழ் பெற்று வாழ்ந்த டாக்டர் ரங்காச்சாரியார். அந்தக் காலத்தில் விமானத்தில் பறந்து சென்று நோயாளிகளுக்கு நலம் செய்தார். முருகனாகிய வைத்தியனும் தன் அன்பர்களைப் பாதுகாக்க விரையும் கருணைக் கடவுள். அவன் விரைவுக்கு ஏற்றபடி வாகனங்களை வைத்திருக்கிறான்." (பக். 128-129).

**6. மேற்கோள்களை அடுக்கிக் கூறுதல்:** ஒரு கருத்து விளக்கத்திற்கு ஓரிரு மேற்கோள்களைச் சான்றாகக் கொள்ளுதல் உரையியல்பு. ஆயின் ஒரே கூறுக்கு எண்ணற்ற மேற்கோள்களை அடுக்கியுரைத்தல் கி.வா.ஜ.வின் தனிப்பண்பாக, உத்தியாகச் சிறக்கிறது. பெரியபுராண உரை இப்பண்பிற்கு மிகுந்த இடமளித்துள்ளதும் சுட்டத்தக்கது. மேனி முழுமையும் நீறு பூசிக் கொள்ளும் இயல்பிற்கு, 'மேனி நீறு பூசி', 'நீறடைந்த மேனியின் கண்', 'நீறார் திரு மேனியர்'. . . 'பொடி கொள் உருவர்', 'பவளமேனி ஒளி நீறணிந்து' என்று **திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும்**, 'நீறுமெய்பூசவல்லானும்', 'மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான். . .', 'பொன்னொத்த மேனி மேற்பொடியும் கண்டேன்' என்று **திருநாவுக்கரசு நாயனாரும்**, 'முத்து நீற்றுப் பவளமேனிச் செஞ்சடையான்'.... 'வெண்பொடி மேனியினான்' என்று **சுந்தரமூர்த்தி நாயனாரும்**, 'நீறுபட்டே ஒளிகாட்டும் பொன்மேனி நெடுந்தகையே'. . . 'பொடிப் பூசிற்றோர் வேடம்' என்று **மாணிக்கவாசகரும்** . . .எனத் தொடரக் காணலாம் (பெரியபுராண விளக்கம், பகுதி6, பக். 112-115). இதில் நூற்றுப்பத்துக்கும் மேற்பட்ட சான்றுகள் அமைந்துள்ளதும் கூறற்பாலது.

திருவைப் பெண்ணுக்குச் சுட்டுதல் (மேற்படி பக். 34-37), வீரர்க்குச் சிங்கம் உவமையாதல் (மேற்படி பக். 45-48) என்பன பிற சான்றுகள்.

**7. தொகுத்துக் கூறுதல்:** உரை, விரிவுரையாக நீண்டமைவதால் அதன் நிறைவில் இதுவரை நவின்றனவற்றின் திரண்ட கருத்துகளை எடுத்துரைத்தல் சிறப்பாகும். இது, இதுவரை கண்டனவற்றை மீண்டும் நினைவூட்டுவதாகவும் அமைகிறது. . . "முற்பிறவியில் புண்ணியம் செய்தார்க்கு இந்தப் பிறவியிலே தொண்டர் கூட்டத்தில் கலந்து கொள்ளும்பேறு கிட்டுமென்றும் அதனால் இறைவியின் பாதார விந்தத்தைப் பக்தியுடன் பணியும் பழக்கம் உண்டாகுமென்றும் அதன் பயனாக அவளுடைய

திருநாமத்தை உணர்ந்து ஓதும் பயிற்சி அமையும் என்றும், அதன் பின்பு அவள் புகழையே எண்ணி அநுபவிக்கும் நிலை உண்டாகும் என்றும் இந்தப் பாடலால் தெரிந்து கொள் கிறோம்" (அபிராமி அந்தாதி - தொகுதி 1, எழில் உதயம் - ப. 124) என்பதனைச் சான்றாக்கலாம்.

திருமுருகாற்றுப்படை விளக்கம், அநுபூதி விளக்கம் போன்ற நூல்களில், அவற்றின் நிறைவில் முறையே தொகுப்பு, நிறைவு என முழுநூலுக்குமான தொகுப்புரை அமைவதும் சுட்டத்தக்கது. இது கற்பாருக்கு மிகுந்த பயனுடையதாய் நிற்பதும் குறித்தற்பாலது.

**8. கட்டுரை வடிவம்:** உரை கூறும் பொது மரபினின்றும் மாறி, விளக்கவுரையை விரிவுரையாக எழுதுங்கால் அதற்குக் கட்டுரை வடிவம் நல்குதல் எனும் புதுமைக்கு வளம் சேர்த்த வராகக் கி.வா.ஜ. அமைகிறார். இம்முயற்சியே மாணாக்கர், ஆய்வாளர், சுவைஞர் என எத்திறத்தவரும் பயன்கொளத் துணையாயிற்று என்பது உண்மையாகும். உரை வரையும் பொழுது வடிவநிலையிலும் புதுமையைப் புகுத்தி வெற்றிபெற முடியும் என்பதைக் கி.வா.ஜ. இதனால் நிறுவியுள்ளார். அவரின் இவ்வெற்றி இமாலய சாதனையாகும். ஒவ்வொரு பாடலும் ஒரு கட்டுரை வடிவம் பெற்று அதற்குத் தக்க தலைப்புப் பெறுகிறது. இது பாடலின் உட்பொருளை உணர்த்துவதாக அமைந்து சிறப்புறுகின்றது.

**உரைத்திறன்**

உரை கூறிச் செல்லும் முறையில் அமையும் சிறப்புக் கூறுகள் இங்கு உரையாசிரியர் கி.வா.ஜ. வின் உரைத்திறனாக மதிப்பிடப்பட்டுள்ளது.

**1. எளிமை, தெளிவு, விரிவு:** கி.வா.ஜ. என்ற மூன்றெழுத்தின் பெருமையை உணர்த்தும் முப்பொருளாக இம்மூன்றும் அமைதல் வெளிப்படை. நூலைப் படிக்கும் எத்தரப்பினரும் புரிந்துகொள்ளும் முறையில் எளிய சொற்களால் எளிமையான நடையில் தொடரமைப்பைக் க்கயாள்வது எளிமையாகும். கற்பாருக்கு எவ்வகையிலும் குழப்பம் ஏற்படாதவாறு முன்பின் தொடர்புகாட்டி, தேவையான எடுத்துக்காட்டுகளுடன் விளக்கி, எதிலும் ஐயம் தோன்றாத்வாறு கூறிச் செல்வது தெளிவைத் தரும். கூறவரும் செய்திக்கு மேற்கோள் குறிப்புகள், விளக்கும் உவமைகள், பழமொழிகள், கதைகள், தொடர்புடைய பிற செய்திகள் போன்றவற்றை இணைத்துக் கவிநயத்தை மிகுவித்

துரைத்தல் விரிவின்பாற்படும். இவற்றிற்கு முன்சுட்டியுள்ள சான்றுகளே போதுமானதாகும்.

2. **பொதுப்பண்பு:** எவ்வகை இலக்கியத்திற்கும், பாடலுக்கும் பொருள் கூறப்புகுமுன் அதன் பின்புலத்தை விளக்கும் வகையில் முதற்கண் தேவைக்கேற்பதொரு முன்னுரை வழங்குகிறோம். இது கற்பாரிடையே ஓர் எதிர்பார்ப்பினை உருவாக்குகிறது. பாடலை ஒவ்வொரு அலகாக, இயல்பிற்கேற்ப ஒரு சொல் அல்லது தொடராகப் பிரித்துக் கொண்டு, ஒவ்வொன்றிற்காகப் பொருள் கூறுகிறார். அங்ஙனம் பொருள் கூறி வருகையில் முன் கூறியதற்கும் பின் கூற வருவதற்கும் உள்ள தொடர்பினையும் எடுத்துக் காட்டுகிறார். ஒரு கூறுக்குப் பொருள் தருகையில் அதனோடு தொடர்புடைய, அறிந்த பிற செய்திகள் அனைத்தையும் இணைக்கிறார். இதனால் பொருள் விளக்கம் பெறல் எளிதாவதோடு ஒப்பியல் பார்வையும் அமைகிறது. முன் சுட்டியுள்ள உத்திகளைத் தேவைக்கேற்பக் கையாண்டு, எளிய சிறுசிறு தொடர்களால் விளக்கமளிப்பது. கற்பார் அனைவரும் தெளிவுபெற இடனாகிறது. பாடலின் அனைத்துக் கூறுகளும் இவ்வாறு விளக்கம் பெற்றபின் முடிவில் முழுப்பாடலைத் தந்து அதன் பொழிப்புரையினையும், தேவையான அருஞ்சொற்களுக்கான பதவுரையையும் தருகிறார். பின் இது அந்நூலின் எத்தனையாவது, பாடல் என்ற குறிப்பைச் சுட்டுகிறார். எனவே பாடலுக்கு விளக்கம் பெற்றோம் என்ற உணர்வைவிட, ஒரு தகவல் களஞ்சியத்துள் நுழைந்து திரும்பிய உணர்வே முன்னிற்கிறது என்பதும் நவிலத்தக்கதாகும். ஆதலின் ஆய்வாளருக்கு இவரது உரைகள் ஒரு கருத்துப் பெட்டகம் என்பதில் மாற்றுக் கருத்து இல்லை.

இவரின் இம்முறை, வகுப்பறையில் மாணாக்கருக்கு ஒவ்வொரு சொல்லாகச் சொல்லிச் சொல்லி விளக்கமளித்து அவர்தம் நினைவில் நிறுத்துவது போல் உள்ளது. இவ்வமைப்பினால் இவர்தம் உரை கற்பார் யாவருக்கும் மூலநூலை மனனம் செய்தல் என்பது எளிதாவதும் அறியத்தக்கதாம்.

3. **இலக்கண விளக்கம்:** பாடலின் முழுமையான கருத்து விளக்கத்திற்கு இலக்கணச் சார்புடை சிந்தனைகளையும் அளித்தல் பொது மரபு. கி.வா.ஜ. இம்மரபினைப் புறக்கணிக்காது தமது இயல்பிற்கேற்பத் தேவைப்படுமிடங்களில் விளக்கிச் செல்கிறார். திருநாவுக்கரசு நாயனார் புராணத்தின் 32ஆம் பாடலாகிய 'எந்தையும் அனையும்' எனும் பாடலுக்கு,

எந்தையும் - அடியேனுடைய தந்தையாகிய புகழனாரும், அனையும் - அடியேனுடைய தாயாகிய மாதினியாரும், அனை, இடைக்குறை. அவர்க்கு அந்தக் கலிப்பகையாருக்கு எனை - அடியேனை; இடைக்குறைச் சந்தி கொடுக்க - திருமணம் புரிந்து கொடுக்க இசைந்தார்கள் - சம்மதித்தார்கள். அடியேன் - ஆதலினால் - ஆகையால், இந்த உயிர் - அடியேனுடைய இந்த உயிர். அவர் உயிரோடு - அந்தக் கலிப்பகையாருடைய உயிருடன் இசைவிப்பேன் - சேரும் வண்ணம் அடியேன் புரிவேன். என - என்று; இடைக்குறை த் : சந்தி. துணிய - தீர்மானம் செய்துகொண்டு இறந்துபோக. வந்தவர் தம் - வந்தவராகிய திலகவதியாருடைய தம்: அசைநிலை, அடியிணை மேல் - இரண்டு திருவடிகளின்மேலும். அடி; ஒருமை பன்மை மயக்கம். மருணீக்கியார் - அந்தத் திலகவதியாருடைய தம்பி யாராகிய மருணீக்கியார். விழுந்தார் - விழுந்து வணங்கினார்.

என்பது போன்று பதவுரை கூறிவருகையிலேயே இலக்கணக் குறிப்பு வழங்குதல் ஒருநிலை. 'உரிதா - உரித்தாக; செய்யுள் விகாரம். அவன் தந்த அநுபவத்தில் கரைந்து செயலற்ற மையின், தம்மை உரித்தாக என்று அஃறிணை வாய்பாட்டிலே வைத்துச் சொன்னார். அநுபவ நிலையில் நிற்கும்போது திணை கடந்த நிலையில் இருப்பது ஆன்மா. ஆன்மா உயர்திணையில் சொல்வது வழக்கம் அன்று. ஆதலின், ஆன்மாவில் இயைந்த அநுபவத்தைச் சொல்ல வந்தவர், உரிதா என்று அஃறிணை யாகச் சொன்னார்" எனத் தனித்து எடுத்துரைத்தலும் உண்டு (அநுபதி விளக்கம், ப. 270).

பாடல்களில் பொதிந்துள்ள உட்பொருளையும் குறிப்பினையும் மறவாது காட்டுகிறார். 'மந்திரம் என் மனத்தில் மன்னியது' என்று சொல்ல வந்தவர், 'வெறும் மந்திரம் மட்டும் அன்று; உன்னுடைய உருவத் தியானமும் உடன் செய்கிறேன்' என்பதைக் குறிப்பாகப் புலப்படுவதற்கு, **'சிந்தையுள்ளே மன்னியது உன் திருமந்திரம் சிந்துர வண்ணப் பெண்ணே'** என்று சேர்த்துச் சொன்னார் எனும் பகுதியை இதற்குச் சான்று காட்டலாம் (அபிராமி அந்தாதி - தொகுதி 1, ப. 68).

**4. உட்தலைப்பு இடல் :** உட்தலைப்பிட்டுப் பொருள் விளக்கம் செய்யும் பொழுது கூடுதல் எளிமையும், தெளிவும் கிடைக்கின்றன. உரை விரிந்து பரந்து அமையும் பொழுது இவ் உட்தலைப்பிடல் இன்றியமையாததாகிறது. கந்தரனுபூதியின் எட்டாவது பாடலுக்கு 'மெய்ப்பொருள்' என்று தலைப்புத் தரும் கி.வா.ஜ. அதற்கு 'வீடு, வீதி, ஊர்', பற்றும் அன்பும்,

ஆண்டவன் செய்யும் அற்புதம், உய்த்துணர வைத்தல், முருகன் இயல்பு எனும் உட்தலைப்புகளைத் தந்து விளக்கிச் செல்கிறார். இது கற்பாருக்குக் கற்கும் ஆவலைத் தூண்டக்கூடியதாகவும் சிறப்புறுகிறது. பாடற் பொருளை நன்கு நினைவில் வைத்துக் கொள்வதற்குரிய உத்தியாகவும் இது பயன்படுகிறது.

5. **நேர்முக வருணனை:** கூற வரும் செய்தியை மனதில் பதிய வைத்தற்கு உதவும் உத்தியாக, உரையில் 'நேர்முக வருணனைப்' பாங்கனைப் புதிதாகப் புகுத்தித் தம் திறம் காட்டுகிறார் கி.வா.ஜ. "இதோ கோயிலுக்குள் புகுந்து விட்டோம். இறைவன் திருச் சந்நிதானத்தின் எதிரிலே நம் கண்ணுக்குத் தெரிகிறது. மயில் வாகனம். எல்லாக் கோயில்களிலும் முதலில் நாம் பார்ப்பது வாகனந்தான் சிவபெருமான் திருக்கோயிலில் முதலில் நந்தியைத் தரிசித்துக் கொண்டே உள்ளே செல்ல வேண்டும். திருக் கைலாயத்திலும் திருவாசலில் காவல் பூணும் அதிகார நந்தியை வணங்கிய பிறகே உள்ளே போக இயலுமாம். இங்கே முருகன் திருக்கோயிலில் அவனுடைய வாகனமாகிய மயில், ஆடும் பரி இருக்கிறது (அநுபூதி விளக்கம், ப. 46) எனும் பகுதியைச் சான்றாக்கலாம். இங்ஙனம் வாசகரை உடனழைத்துக் கொண்டு, உரையாடிய படியே பல செய்திகளை விளக்கிச் செல்லும் திறம் இவரிடம் மிக இயல்பாகப் பொருத்தியுள்ளது. இதனை இவரின் தனிப்பெரும் சிறப்பாகவும் கொள்ளலாம். உரை முதற்கண் சொற்பொழிவாக அமைந்து பின் நூலாக்கம் கண்டமையின் இவ்வுரைப்பாங்கு அமைகிறது.

6. **சிறப்புச் சிந்தனைகள்:** ஒரு பொருள் குறித்து விளக்கிச் செல்லும்பொழுது அது பற்றிய தமது சிந்தனைகளையும் உள்ளடக்கிச் செல்லுதல் கி.வா.ஜ.வின் இயல்பாகக் காணப்படு கிறது. இவரது பன்னூற்புலமை, பல மொழியறிவு, பல்துறைக் கல்வி என்பனவற்றைப் புலப்படுத்துவதாக இத்திறன் அமைகிறது. கந்தர் அநுபூதியில் 'சும்மா இரு' என்பதற்கான விளக்கத்தைச் சான்று காட்டலாம்

சும்மா இரு

'சும்மா இருக்கச் சுகம் சுகம்' என்று சுருதியெல்லாம் சொல்லுகின்றன. ஆனால் நாட்டின் நலம் காணுபவர்கள் "சும்மா இராதே; உழை, உழை" என்று சொல்கிறார்கள். சும்மா இருப்பதா? சும்மா இராமல் உழைப்பதா?

சும்மா இருப்பது மூன்று வகைப்படும். சோம்பலால் ஒரு வேலையும் செய்யாமல் சும்மா இருத்தல் ஒரு வகை. நன்றாக

வேலை செய்தவர்கள் இளைப்பாறிச் சும்மா இருத்தல் மற்றொரு வகை. ஞானநெறியிலே சென்று தவம் புரிபவர்கள் சும்மா இருப்பது பின்னும் ஒரு வகை உலகம் வள வாழ்வு பெற வேண்டும் என்ற எண்ணமுடைய பெருமக்கள், "சும்மா இருக்க வேண்டாம்" என்று இந்த மூன்று வகையினரையும் ஒருங்கே எண்ணிச் சொல்லவில்லை. தமக்கு அறிவும் ஆற்றலும் இருந்து அவற்றைப் பயன்படுத்தாமல் வீணே கழிக்கின்ற மக்களைப் பார்த்தே அவர்கள் சொல்கிறார்கள். அத்தகைய வர்கள் சோம்பேறிகள். அவர்கள் தாம் கெடுவதோடு தம்மைச் சார்ந்தவர்களையும் உழைக்காமல் செய்துவிடுவார்கள். அவர்கள் சமுதாயத்திற்கு நோய் போன்றவர்கள்.

நன்றாக உழைத்தவர்கள் சும்மா இருப்பது இயல்பு. அவர்கள் சும்மா இருக்கும் உரிமையையும் உடையவர்கள். வாழ் நாள் முழுவதும் நன்கு உழைத்தவர்கள் முதுமையில் சும்மா இருக்கத் தான் வேண்டும். அது போலவே நன்கு உழைப்பவர்களும் இடையிடையே சில காலம் சும்மா இருக்க வேண்டும். ஓய்வு கொள்ள வேண்டும். அப்போதுதான் அவர்கள் மேலும் தம்முடைய நல்லுழைப்பை நாட்டுக்கு நல்கி நலம்புரிய முடியும்.

மூன்றாவது வகையாகிய 'சும்மா' இருப்பதை ஆன்ம நெறியிலே ஈடுபடுபவர்கள் விரும்புவார்கள். செயலொழிந்து நிற்கும் திறம் என்று ஞான நூல்கள் பேசுவதையே 'சும்மா இருத்தல்' என்று குறிப்பார்கள். மௌனநிலை என்பதும் அதுதான்.

பொதுவாக மோனம் என்றால் பேசாமல் இருப்பதையே சொல்வது வழக்கம். ஆனால் மூன்று கரணங்களும் செய லொழிந்து நிற்பதையே முழுமோனம் என்று சொல்ல வேண்டும். உடம்பு செயலொழிந்தால் அதைக் காஷ்ட மௌனம் என்பார்கள். காஷ்டம் - கட்டை, இங்கே உடம்பைக் குறித்தது. 'கட்டையைச் சும்மா கிடத்துகிறேன்' என்று சொல்வதைக் கேட்டிருக்கிறோம் அல்லவா? வாய் பேசாத மோனத்தை வாங் மௌனம் என்பார்கள். வாய்மூடி மௌனியாகச் சும்மா இருப்பதற் கெண்ணினேன்' என்று தாயுமானவர் குறிக்கிறார். அடுத்தது மனம் அலைவுற்றிருத்தல், அதை மனோமௌனம் என்பார்கள். இந்த மூன்றும் ஒன்றைவிட ஒன்று சிறந்தது; காஷ்ட மௌனத்தை விட வாங்மௌனம் சிறந்தது. அதை விட மனோ மௌனம் சிறந்தது. . ." (அநுபூதி விளக்கம் 189-191). அறிவுப் பசியில் அலையும் ஆர்வலர்க்கு இது போல்வன நல்விருந்தாவது குறிப்பிடத்தக்கது.

**7. இந்துமத அடிப்படைகளை, பெருமைகளைக் காட்டுதல்:** சமய நூல்களுக்கு உரை வரைவதில் பெருவிருப்

புடையவராகத் திகழும் கி.வா.ஜ. வாய்ப்பு மற்றும் தேவை ஏற்படும் இடந்தோறும் இந்துமத அடிப்படை உண்மைகளை, அதன் பெருமையினைப் புலப்படுத்தத் தவறுவதில்லை. உரை யெழுதப் புகுந்ததன் நோக்க நிறைவேற்றத்திற்கும் இத்திறன் பெருந்துணையாதல் வெளிப்படை.

"சிவபெருமானுடைய வெளிப்படையான முகங்கள் ஐந்து அவை நான்கு திசைகளில் நான்கும், மேல் நோக்கி ஒன்றும் உள்ளவை இவற்றையன்றி மறைவாகக் கீழ்நோக்கிய அதோ முகம் ஒன்று உண்டு. மற்ற முகங்களே வெளிப்படையாக இருப்பதனால் சிவபெருமானுக்கு ஐம்முகன் என்ற திருநாமம் உண்டாயிற்று முருகன் திருவவதாரம் உலகுக்கு இன்றியமை யாதது என்பதை அறிந்த சிவபெருமான் அதோ முகத்தையும் வெளிப்படுத்தி ஆறுமுக நாதனாக இருந்து ஒவ்வொரு முகத்திலும் உள்ள நடுக்கண்ணாகிய ஞானக் கண்ணிலிருந்து ஒவ்வொரு பொறியை விட்டான். அந்தப் பொறிகளை உலகம் தாங்காது என்று அஞ்சித் தேவர் நடுங்க, இறைவன் ஏவலால் அக்கினி, பொறிகளை ஏற்று வாயுவிடம் கொடுக்க, அவன் போய்க் கங்கையிடம் சேர்த்தான். கங்கை, ஆறுப்பொறிகளையும் சுமந்து சென்று சரவணப் பொய்கையில் உள்ள திட்டில் சேர்த்தது. அங்கே முருகன் திருவவதாரம் செய்தான்" (திருமுருகாற்றுப்படை விளக்கம், பக். 228-229).

"சுப்பிரமணிய சுவாமி மயில் வாகனத்தில் இருக்கிற மாதிரி" என்ற ஒரு பழமொழி உண்டு. அதற்குத் தவறாகப் பொருள் கூறுவர் சிலர். அது முருகனுடைய கருணைச் சிறப்பைப் புலப்படுத்துவது முருகன் தன்னை எந்தப் பக்தன் எப்போது கூப்பிடுவானோ என்று எண்ணி எப்போதும் மயில் வாகனத்தில் வீற்றிருக்கிறான். மயிலை அழைத்து வரச் செய்து அதற்குக் கடிவாளம் முதலியவை பூட்டச் செய்து பிறகு ஆரோகணித்துச் செல்வதற்கு நேரமாகும் அல்லவா? ஆகவே அவன் எப்போதும் அடியார்களுக்கு அருள் செய்வதற்குச் சித்தனாக மயிலின் மேல் எழுந்தருளிய கோலத்தில் இருக்கிறான். இதுவே அந்தப் பழமொழியினால் அறிவதற்குரியது" (மேற்படி ப. 129) என்பன சான்றுகளாகும்.

**8. பயனுரைத்தல்:** நூலுக்கு உரை வரைதலுடன் நின்றுவிடாது அதனால் கற்போருக்கு என்ன பயன் என்று நவின்றிருப்பதும் எண்ணத்தக்கதாகும். "கந்தர் அநுபூதி என்னும் இந்நூல் அற்புதமான பாராயண நூல்; இதை ஓதி நலம்

பெற்றவர்கள் பலர். ஒவ்வொரு பாட்டுக்கும் ஒவ்வொரு யந்திரமும் அதைப் பூசிக்கும் முறையும் பிற்காலத்தில் யாரோ ஒரு பக்தனால் வரையப்பட்டுள்ளன. அன்றியும் பல மெய்ப் பொருளைக் கூறும் சாத்திர நூலாகவும் இது நிற்கிறது. கலி விருத்தத்தால் அமைந்து எளிதில் மனனம் செய்வதற்குரியது. பாடல்கள் உருவிற் சிறியவையாயினும் பொருள் ஆழ்ந்து நுட்பமும் திட்பமும் உடைய கருத்துகளைப் புலப்படுத்து கின்றன" என்று கந்தர் அநுபூதி நூற்பயனைத் (அநுபூதி விளக்கம், ப. 545) தருகிறார். அபிராமி அந்தாதி விளக்கத்துள் தனித்தனியே பாடற்பயன் அளித்திருப்பதும் குறிப்பிடற்குரியது.

"எல்லாவற்றையும் இயக்கும் மூல சக்தியாகிய அன்னை நம் கண் காணச் சிவகாமசுந்தரியாக எழுந்தருளியிருக்கிறாள்." அவள் திருவடியை வழிபடுகிறவர்களுக்கு எல்லாச் செல்வங்களும் உண்டாகும் என்பதை, இந்தப் பாடலால் (68) தெளிய வைக்கிறார் ஆசிரியர் (சரணம் சரணம், ப. 147) என்பது போன்று அவை அமைகின்றன.

### கருத்துரைகள்

உரையெழுதுதல் என்பது நூலாசிரியரின் படைப்புக்குப் பொருள் தருவதாக மட்டும் அமைந்துவிடாது தேவைப்படும் இடங்களில் தமது கருத்துகளையும் இணைத்துக் கற்பாருக்கு கூடுதல் பயனுடையதாக்கும். கி.வா.ஜ. இயன்றவிடந்தோறும் தம் கருத்துரைகளை வழங்கித் தம் சிறப்பை உணர்த்துகிறார். அவற்றுள் சிலவற்றை இங்குக் காணலாம்.

திருமுருகாற்றுப்படை பத்துப்பாட்டில் சேர்ந்திருப் பதால் அது சங்க காலத்து நக்கீரனால் இயற்றப் பெற்றதென்றே கொள்ள வேண்டும். அதைப் பதினோராந் திருமுறையிலும் சேர்த்திருக்கிறார்கள் சைவர்கள். இலக்கிய வகையில் பத்துப் பாட்டிலும், தோத்திர வகையில் பதினோராந் திருமுறையிலும் சேர்ந்துள்ளமையால் இந்த நூல் இரட்டிப்பு மதிப்புடையது. முருகாற்றுப்படையாக இருந்த இது, திருமுறையிலே சேர்ந்து பாராயண நூலான பிறகு திருமுருகாற்றுப்படை ஆகிவிட்டது. இதனைப் பாராயணம் செய்த முருகம்மையார் என்பவருக்கு முருகன் தரிசனம் தந்தருளினான் என்று ஒரு கதை வழங்கி வருகிறது. இன்றும் முருகனடியார் பலர் இதனை மந்திரம் போல் ஓதிப் பயன் பெறுகின்றனர் (வழிகாட்டி xiii).

'முருகன் பற்றுக்கோடாக இருப்பவன். பஞ்சபூதங்களின் சம்பந்தம் பெற்ற கருணையினாலே உலகத்துக்கு அருள் செய்ய

வந்தவன். சிவனும் சக்தியும் இணைந்த பரம்பொருள்' என்ற கருத்துக்களைக் கந்தன் என்ற திருநாமம் புலப்படுத்துகிறது. கந்தர் அநுபூதி என்பது அவனைப் பற்றிய அநுபூதி என்று சிலர் சொல்லுவார்கள். அப்படிச் சொல்வதைக் காட்டிலும் கந்தனையே அநுபவித்த அநுபவத்தை அருணகிரிநாதர் இந்தப் பாட்டினால் சொன்னார் என்று கொள்வது பொருத்தம். கந்தர் அநுபூதி - கந்தருடைய திருவருளினாலே பெற்ற அநுபூதி அல்லது கந்தராகிய அநுபவம். இறைவனிடத்திலே ஈடுபட்டு உலகத்தை இறைவன் மயமாகக் கண்டு கருவி கரணங்களெல்லாம் இறைவன் என்னும் பெருங்கடலிலே ஆழ்ந்து போய், வேறு ஒன்றும் தெரியாமல் எல்லாம் கந்தன் மயமாக இருந்த அநுபவத்தைச் சொல்வது எதுவோ அது கந்தர் அநுபூதி என்பது அநுபவம் (அநுபூதி விளக்கம், ப. 20).

சிவபெருமானும் அம்பிகையும் ஒருவருள் ஒருவராக மறைந்திருக்கும் சமயமும் உண்டு. பாதிபாதியாக இணைந் திருக்கும் செவ்வியும் உண்டு; தனித்தனியாக இருந்து கணவன் மனைவியாக வீற்றிருக்கும் திருக்கோலமும் உண்டு. வாமபாகத்தை வவ்வியது அர்த்தநாரீசுவரத் திருகோலம். உலகம் தோற்றுவதற்கு முன் இந்தக் கோலத்தில் இறைவன் வெளிப்படுகிறானாம். பிறகே தத்துவங்கள் தோன்றுகின்றன என்று பெரியவர்கள் சொல்வார்கள் (அபிராமி அந்தாதி - பாகம் 1, ப. 164).

முதலில் புறத்தே விக்கிரக வடிவத்தில் கண்டு, பிறகு உள்ளே நிறுத்தித் தியானம் செய்தால் அந்த விக்கிரகம் உயிர் பெற்று நிலவும். கண்பார்க்கும்; வாய் பேசும்; உடம்பு அசையும்; கால் நடக்கும்;ஆனந்தக் கூத்தாடும். இதற்கு அடுத்த நிலை, அவ்வாறு கண்ட கோலத்தைப் புறத்திலும் காணுதல். குழந்தையை இழந்த தாய் அந்தச் சோகத்தால் பைத்தியம் பிடித்து, எதைக் கண்டாலும் அதைத் தன் குழந்தையென்று கட்டிக் கொள்வாள். குழந்தைப் பாசத்தால் விளைந்த உன்மத்த நிலை அது. பக்தர்களும் ஞானிகளும் ஒரு வகையில் உன்மத்த நிலையில் உள்ளவர்களே. ஆகையால் அவர்களுக்கு உள்ளே கண்ட தெய்வத்தைப் புறத்திலும் காணும் அநுபவம் ஏற்படும் (திருக்கோலம், ப. 82).

### பதிப்புக் கொள்கை

சிறந்த உரையாசிரியராக, உரையாசிரியர் வரிசையுள் போற்றத்தக்க இடம்பெற்றுள்ள கி.வா.ஜ. தம்மைச் சிறந்த பதிப்பாசிரியராகவும் நிலைநிறுத்தியுள்ளார். அவரது பதிப்புத்

திறனுக்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாக அவரின் 'திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு' விளங்குகிறது.

"சில ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீ தி.சு. அவிநாசிலிங்கம் அவர்கள் திருக்குறள் சம்பந்தமாகப் பெரிய வேலை ஏதாவது செய்ய வேண்டுமென்று தோன்றுகிறது; என்ன செய்யலாம்?" என்று கேட்டார். "மகாமகோபாத்தியாய டாக்டர் ஐயரவர்கள் திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு ஒன்றைக் கொண்டுவர வேண்டும் என்ற எண்ணத்துடன் இருந்தார்கள். திருக்குறளுக்குக் கிடைக்கும் பழைய நூல்களையெல்லாம் தொகுத்து ஒவ்வொரு குறளின் பின்னும் கொடுத்து, இலக்கண இலக்கிய உரைகளில் குறளை மேற்கோளாகக் காட்டும் இடங்களை ஆங்காங்கே காட்டி, தொல்காப்பியம் முதல் இக்கால இலக்கியம் வரையில் குறளின் சொற்பொருள்களை எடுத்தாண்ட ஒப்புமைப் பகுதிகளையும் இணைத்து, வேண்டிய அடிக்குறிப்புக்களும்... ஆராய்ச்சியுரையும் சேர்த்து வெளியிட வேண்டும் என்பது அவர்களுடைய எண்ணம். அந்த எண்ணம் அவர்கள் காலத்தில் நிறைவேறவில்லை. அதைச் செய்யலாம்" என்றேன். 'அப்படியே செய்யலாம்' என்று ஸ்ரீ அவிநாசி லிங்கம் அவர்கள் ஒப்புக்கொண்டு உடனே செயலாற்றப் புகுந்தார். பலர் சேர்ந்த ஒரு குழுவை அமைத்துச் சில கூட்டங்கள் போட்டு அன்பர்களின் யோசனையைக் கேட்டார். பதிப்புப் பற்றிய வேண்டுகோள் ஒன்று உருவாயிற்று. 1950ஆம் ஆண்டு இவ்வாராய்ச்சிப் பதிப்பு.... அப்போது ராஷ்டிரபதியாக இருந்த அமரர் டாக்டர் ராசேந்திரப் பிரசாத் அவர்கள் தொடங்கி வைத்தார்கள்.

இடையே தருமபுர ஆதீனத்தின் ஆதரவில் திரு. வித்துவான் தண்டபாணி தேசிகரவர்கள் மேலே சொன்ன முறையைப் பின் பற்றித் திருக்குறள் உரைவளம் என்ற பதிப்பை வெளியிட்டார். அதன்பின் இந்தப் பதிப்பில் பரிமேலழகர் உரையை மட்டும் வெளியிடுவதென்றும், ஒப்புமைப் பகுதியில் கம்பர் வரையில் உள்ளவற்றை மட்டும் இணைப்பதென்றும் முடிவாயிற்று" (பதிப்புரை, ப. 1) என்று நூல் தோன்றிய வரலாற்றையும், நோக்கத்தையும் குறித்துள்ளார். 1963இல் நிறைவு செய்யப்பட்ட இந்நூல் டாக்டர் ராதாகிருஷ்ணனால் வெளியிடப்பட்டுள்ளது. நூலாக்கம் பல்லாண்டு நீண்டமையினும் நூலின் பெருமை அதனைப் புறந்தள்ளுகிறது. கி.வா.ஜ.வின் கடின உழைப்பும், செய் நேர்த்தியும், அறிவு முதிர்ச்சியும் இதனுள் ஈண்டு வெளிப்படுகின்றன.

108 பக்கங்களுக்குப் பரந்து விரிந்து செல்லும் ஆராய்ச்சி முன்னுரை வள்ளுவத்தின் வேறு பெயர்கள், அதன் பல்வகைச்

சிறப்பு, குறளைப் பதித்து வைத்துள்ள நூல்கள் (சோமேசர் முதுமொழி வெண்பா போல்வன), மொழிபெயர்ப்புகள், குறள் அதிகார வைப்பு முறைப் பொருத்தம், பொருள்வளம், பிறரின் புகழாரங்கள் என்பனவற்றை உள்ளடக்கியுள்ளது. அகநானூறு முதல் வீரசோழியம் வரை சுமார் 84 நூல்கள் மேற்கோளாக அமைந்துள்ளன. திருவள்ளுவ மாலை (திருத்தணிகை சரவணப் பெருமாள் ஐயர் உரையுடன்), திருக்குறள் செய்யுள் முதற்குறிப்பு அகராதி, திருவள்ளுவ மாலை செய்யுள் முதற்குறிப்பகராதி, திருக்குறள் சொற்பொருள் அகராதி, பொது அகராதி ஆகியன பின்னிணைப்பாக உள்ளன.

திருக்குறள் வாழ்க்கைத் தத்துவம் (தி.சு. அவினாசி லிங்கம்) வள்ளுவரின் உளநூல் தத்துவம் (க.ச. அருள்நந்தி - இலங்கை உளநூல் பேராசிரியர்), திருக்குறளின் தத்துவம் (டி.எம்.பி. மகாதேவன்), திருவள்ளுவர் நீதி (டி.எஸ். கந்தசாமி முதலியார்), கவிதைப் பண்பு (அ.ச. ஞானசம்பந்தன்), திருக்குறளில் காதல் (மு. வரதராசனார்), திருவள்ளுவர் காலம் (மா. இராசமாணிக்கனார்), திருவள்ளுவர், பரிமேலழகர் உரையின் சிறப்பு எனும் கட்டுரைகள் ஆராய்ச்சி முன்னுரையைத் தொடர்ந்தமைவது சுட்டத்தக்கது.

குறட்பா, பரிமேலழகர் உரை, உரை வேறுபாடு, மேற்கோள் விளக்கம் (பழைய உரையாசிரியர்கள் திருக்குறளை மேற்கோளாகக் காட்டும் இடங்களில், குறள் விளக்கத்திற்கு உதவும் பகுதிகள் மட்டும் அமைகின்றன), ஒப்புமை, (சொல் நிலை, முழுமையான பாடற்பொருள்) என்பனவாக நூற்பகுதி அமைகிறது. இவை அனைத்திற்கும் தேவையான விளக்கங்கள் அடிக்குறிப்பில் உள்ளன. இவற்றுடன் தாம் இணைக்க விரும்பும் கருத்துகளை, குறிப்பு எனக் குறட்பாவின் முன்னும் பின்னுமாகத் தேவைப் படும் இடங்களில் மட்டும் குறித்துள்ளார். 'கற்றலால் வருவது நூலறிவு; இறைவனைத் தொழுதலால் வருவது வாலறிவு' (ப.6); யாண்டும் என்பதற்கு இப்பொழுது வாழும் நிலத்திலும் மறுமையில் அடையும் இடத்திலும் என்று பொருள் கொள் வதும் பொருந்தும்; 'நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம் (அப்பர்) என்பது காண்க. முன்பாட்டும் இப்பாட்டும் இறைவனை மனத்தால் தியானிப்பதனால் வரும் பயனைக் கூறின (ப. 9) என்பன சான்றுகளாம்.

பின்னிணைப்பின் இறுதியாக அமையும் பொது அகராதி, பரிமேலழகர் உரை, உரைவேறுபாடு, மேற்கோள் விளக்கம்,

ஒப்புமைப் பகுதி, அடிக்குறிப்பு, திருவள்ளுவமாலை - மூலமும் உரையும் ஆகியவற்றிலுள்ள சொல்லும் பொருளுமாக அமைவது கூறத்தக்கது.

இவற்றையெல்லாம் இணைத்து நோக்கும்பொழுது கீழ்க்கண்டன இவரின் பதிப்புக் கொள்கையாக உய்த்துணரப் படுகின்றன.

1. நூலோடு தொடர்புடையன அனைத்தையும் முழுமையாக உணர்த்த வேண்டும்.
2. பிறநூல்களிலிருந்து எடுத்தாளப்படும் மேற்கோள்கள் தவறாது இடம் சுட்டப்பட வேண்டும்.
3. பதிப்பு என்பது அந்நூலின் ஆய்வினையும் உள்ளடக்கி யதாக அமையவேண்டும் (ஆய்வு முன்னுரை சான்று).
4. மேலாய்விற்குத் துணை செய்யும் வகையில் பதிப்பு சிறக்க வேண்டும் (சான்று: பின்னிணைப்பில் உள்ள அகராதிகள்)
5. பதிப்பாயினும் உரையாயினும் நூல் முழுமையும் ஒரே அமைப்பினைக் கொண்டிலங்க வேண்டும்.
6. நூலைப் பதிப்பிக்கும்பொழுது தேவையான இடங் களில் பதிப்பாசிரியர் தம் கருத்துரைத்தல் இன்றியமை யாதது. இது வாசகருக்குத் தெளிவையும், கூடுதல் தகவல்களையும் அளிக்கும் குறிப்பு என அமைவன இதனை உணர்த்தும்.
7. ஏற்கெனவே பல பதிப்புகள் வெளியிடப்பட்டிருக்கும் பொழுது புதிதாக ஒன்று உருவாக்குகையில் அவற்றினின்றும் மேம்பட்டதாக விளங்க வேண்டும்.

தமிழ்த்தாத்தா உ.வே.சாமிநாதையரிடம் மாணாக்கராக உறவாடிய நிலை, பெற்ற பயிற்சி கி.வா.ஜ.வின் இப்பதிப்பில் எதிரொலித்து அவருக்கு மட்டுமின்றி அவர்தம் ஆசிரியருக்கும் பெருமையளிப்பதாய் உள்ளது.

## பதிப்புத் திறன்

ஒரு பதிப்பாசிரியருக்குத் தேவையான நேர்மை, முயற்சி, பல்துறையறிவு, பரந்துபட்ட தமிழறிவு, எடுத்துக்கொண்ட பொருளில் ஆழமான நுண்ணறிவு என்பன கி.வா.ஜ.விடம் நிறைந்திருப்பதை இப்பதிப்பு உள்ளங்கை நெல்லிக்கனியாய்க் காட்டுகிறது. ஓர் உரையாசிரியராக இவர் கொண்டிருந்த

பன்னூற்பயிற்சி, திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பின் வெற்றிக்குத் துணையாயிற்று என்பதில் மிகையில்லை. இவர் தமது ஆராய்ச்சியுரையில் 'சொல்லாட்சி' எனும் பகுதியை இவண் சான்று காட்டலாம்.

"நால்வகைச் சொற்களையும் பொருளறிந்து ஆளும் திருவள்ளுவர் பிற இடங்களில் காணற்கரியனவும் மிக அருகி வழங்குவனவுமாகிய சில சொற்களையும் தொடர்களையும் ஆண்டிருக்கிறார்.

அவ்வது - அவ்வாறு, அவ்வித்தல் - பொறாமையுடைய ராதல், அறிந்த கடைத்தும் - அறிந்த இடத்தும், இவக்காண் - இங்கே பார், உறை - ஆயுள், எவ்வது - எவ்வாறு, கற்றக் கடைத்தும் - கற்ற இடத்தும், நுதுத்தல் - அவித்தல், முயற்று - முயற்சி (426, 167, 637, 1185, 564, 823, 1148, 616) என்பனவற்றைக் காண்க.

வடமொழியிலுள்ள சில மரபுகளை இவர் ஆளுகிறார். கேடு இல்லாதவனை அருங்கேடன் என்பதும், கேடின்மையை அருங்கேடு என்பதும் செவ்வி இன்மையை அருஞ்செல்வி என்பதும் இதற்கு எடுத்துக்காட்டுக்கள் (210, 732, 565). நாண் என்னும் நல்லாள், நிலம் என்னும் நல்லாள் (924, 1040) என்பன லஜ்ஜா, தரா என்று பெண்பாலால் அவற்றைக் கூறும் வடமொழி வழக்கைத் தழுவியவை என்பாரும் உளர்.

வடசொல்லும் தமிழ்ச் சொல்லும் இணைந்த தொடர் இரண்டை இவர் அமைத்துள்ளார். அதிநுட்பம், ஒருவந்தம் என்பன அவை (636, 563, 593). இவற்றில் முறையே அதி என்னும் முன் மொழியும், அந்தம் என்னும் பின்மொழியும் வடசொற்கள்.

பின்வருவன திருக்குறளில் திரிந்தும் திரியாதும் வரும் வடசொற்கள்: அமர், அமரர், அமிழ்தம், அமிழ்து, அமைச்சன், அமைச்சு, அரங்கு, அரசன், அரசு, அவம், அவி, அவை, அவையம், ஆசாரம், ஆசை, ஆதி, ஆயம், இந்திரன், இலக்கம், உரு, உருவம், உருவு, உலகம், உலகு, உவமை, ஏமம், கணம், கந்து, கருமம், கனம், காமம், காமன், காரணம், காரிகை, கா்லம், கானம், குடங்கர், குணம், குலம், குவளை, கோட்டி, கோடி, சமன், சலம், சாகாடு, சுதை, சூதர், சூது, சோகாத்தல், தண்டம், தவம், தானம், துலை, தூது, தெய்வம், தேயம், தேவர், நாகம், நாகரிகம், நாமம், நாவாய், நிச்சம், பக்கம், பகவன், படாம், பண்டம், பயன், பருவம், பாக்கியம், பாகம், பாவம், பாவி, பீழிக்கும், பீழை, புருவம், பூசனை, பூதம், மங்கலம்,

மணி, மதி, மந்திரி, மனம், மாத்திரையர், மாயம், மானம், முகம், முத்தம், யாமம், வஞ்சம், வரன், வள்ளி, வாணிகம், வித்தகர், வேலை."

கி.வா.ஜ. வின் பதிப்புப் பெருமையையும், திருக்குறளில் அவர் கொண்டுள்ள ஆழ்கல்வியையும் இது நன்கு காட்டுகின்றது. திருக்குறளில் ஆய்வு செய்வோருக்குத் தகுந்த பதிப்பாக இந்நூல் அமைதல் அவரின் பதிப்புத் திறனுக்குக் கிடைத்த வெற்றியாகும்.

**உரையாசிரியர், பதிப்பாசிரியராகக் கி.வா.ஜ.**

ஈதல் இயல்பே இயம்பும் காலை
காலமும் இடனும் வாலிதின் நோக்கி
சிறந்துழி இருந்து, தன் தெய்வம் வாழ்த்தி
உரைக்கப் படும்பொருள் உள்ளத்து அமைத்து
விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து
கொள்வோன் கொள்வகை அறிந்து, அவன் உளங் கொளக்
கோட்டமில் மனத்தின் நூல் கொடுத்தல் என்ப

என நன்னூல் பாடம் சொல்லும் முறையைப் பாயிரத்துள் காட்டுகிறது. இவ் இலக்கணத்திற்குரியதோர் எடுத்துக்காட்டாகக் கி.வா.ஜ. அமைகிறார்.

வாக்கிற்குத் தலைவர் என்று பொருள்படும் 'வாகீச கலாநிதி' என்ற பட்டம் இவருக்கு முழுமையாகப் பொருந்துவதாகும்.

இவரது வடமொழிப் புலமை அனைத்து நூல்களிலும் இடங்கொண்டுள்ளது.

இயன்றவிடந் தோறும் கதை அல்லது பழமொழி கூறி உரை செய்வதை வழக்கமாகக் கொண்டுள்ளார். கதை கூறுவதில் பெருவிருப்புடையவராகத் தென்படுகிறார். இவரது உரைச் சிறப்பிற்கு, ஈர்ப்பிற்கு இவையும் காரணங்களாகின்றன.

பரந்துபட்ட இலக்கிய, இலக்கணத் தேர்ச்சியும் புலமையும் கொண்டவர் என்பதை அனைத்து நூல்களும் உணர்த்துகின்றன.

சைவ சமயப் பற்றாளரானபோதும் பிற சமய அறிவு கொண்டவராகவும் அமைகிறார் (அநுபூதி விளக்கம், ப. 122).

உ.வே. சாமிநாதையரிடம் பயின்றவர் என்பதை இவர் தம் நூல்களும் வெளிப்படுத்துகின்றன. அவ்வகையில் தம் ஆசானுக்கும் பெருமை சேர்த்துள்ளார்.

விரிவுரை, விளக்கவுரையின் பாற்படுகின்றன இவரது உரைகள். முதற்கண் சொற்பொழிவாக, அவையோரைக்

கவர்ந்திழுக்கும் பான்மையில் பலவித உத்திகளுடன் அமைந்த உரைப்பொழிவு அவ்வாறே நூலாக்கத்திலும் அமைந்துள்ளமையே இவ்விரிவிற்கும் காரணமாகும்.

### நிறைவுரை

பன்முகத் திறமையாளராகத் (சொற்பொழிவாளர், உரையாளர், திறனாய்வாளர், இதழாளர், கதையாளர்...) திகழும் கி.வா.ஜ. சென்ற நூற்றாண்டுத் தமிழறிஞர் வரிசையுள் சிறப்பிடம் கொண்டுள்ளார்.

தமது ஆசிரியர்(உ.வே.சா.) தம் பதிப்புகளால் புலவர் பெருமக்களிடம் தந்ததை இவர் பொதுமக்களிடம் எடுத்துச் சென்றுள்ளார். செவ்வியல் இலக்கியத்தைப் பொதுமக்களுக்கு விருந்தாக்கிய முன்னவராகவும் பெருமையுறுகிறார்.

பொதுமக்களுக்கான இலக்கிய உரை எப்படி அமைய வேண்டும் என்பதற்குரிய வழிகாட்டியும் இவரே. ஒரு நூல் தமிழாய்வாளருக்குத் துணையாகப் பயனாக வேண்டுமானால் எப்படி அமைய வேண்டும் என்பதற்கும் இவர்தம் நூல்கள் எடுத்துக்காட்டாகின்றன.

இந்தக் காலக்கட்டத்திற்கு இன்றியமையாத தேவையாக இவரது உரையும் பதிப்பும் அமைகின்றன என்பதில் மாற்றுக் கருத்து இல்லை. கிடைப்பதற்கரிய இவை விரைவில் மறு பதிப்புகள் பெற வேண்டும் என்பது ஆய்வாளரின் உணர்வாகும்.

### பயன் கொண்ட நூல்கள் (நூலாசிரியர், கி.வா.ஜ.)

1. அநுபூதி விளக்கம், அமுத நிலையம், சென்னை, மு.ப. நவ. 1959, இரண்டாம் பதிப்பு, 1978
2. அபிராமி அந்தாதி (நான்கு தொகுதிகள்), அமுத நிலையம், சென்னை, மு.ப. நவ. 1977, நான்காம் பதிப்பு, மே, 1983
3. காவியமும் ஓவியமும், கலைமகள் காரியாலயம், சென்னை, டிச. 1944.
4. திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு, ஶ்ரீராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம், கோவை, மு.ப., மார்ச், 1963.
5. திருமுருகாற்றுப்படை விளக்கம், அமுத நிலையம், சென்னை, மு.ப. 1968, இரண்டாம் பதிப்பு 1981, மறு. ப. 2001.
6. பெரியபுராண விளக்கம் (தொகுதி 6, 7, 8) அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை, 1989, 1990.
7. வழிகாட்டி, 1947.

# சங்க இலக்கிய ஆய்வு

*அன்னிதாமசு*

கி.வா. ஜகந்நாதன் (1906-1988) பன்முகம் காட்டும் படைப்பாளர், ஆய்வாளர், தொகுப்பாளர், திறனாய்வாளர், உரையாளர், இதழியலாளர், பேச்சாளர், எழுத்தாளர், கவிஞர், சிறுகதையாசிரியர், இலக்கண வல்லுநர், சமயவியலாளர், கலையியல் விருப்பினர், குழந்தை இலக்கியம் படைத்தவர், வரலாற்றாசிரியர், பயண இலக்கியம் எழுதியவர், பதிப்பாசிரியர், வாய்மொழி இலக்கியச் சுவைஞர், நகைச்சுவை உணர்வினர், சிலேடை நயம்படப் பேச வல்லவர்.

பழந்தமிழ் இலக்கிய ஈடுபாடு காரணமாகவும், அவ் இலக்கியங்களைப் பலரும் புரிந்து உணர்ந்துகொள்ளும் வண்ணம் தர வேண்டும் என்னும் எண்ணம் காரணமாகவும், அதன் ஆழ அகலங்களையும் அழகுகளையும் சுவைத்து இன்புற்றமை பிறரையும் சென்றடைய வேண்டும் எனும் சிந்தனை காரணமாகவும், தேர்ந்தெடுத்த பாடல்கள் பற்றிச் சொற்பொழிவாற்றியும் கட்டுரையாக்கியும் பழந்தமிழிலக்கியத் துக்குத் தொண்டு செய்தாரென்றே கூறலாம்.

டாக்டர் உ.வே.சா. அவர்கள் சங்க இலக்கியங்களில் பெரும்பாலானவற்றைப் பதிப்பித்ததைத் தொடர்ந்து, தமிழ்க் கல்வியில் சங்க இலக்கியம் இடம்பெறத் தொடங்கியது. ஆசிரியப் பெருமக்களால் மாணவர்க்கு இவை ஓரளவு எளிதாகப் பகரப்பட்டன. எனினும் அனைத்து வாசகர்க்கும், அறிதல் விருப்புடையோருக்கும் இவை சென்று சேருதல் என்பதற்கு, உடன்கால எழுத்தாளர் - சொற்பொழிவாளர் பணிப் பங்கு தேவைப்பட்டது. இப்பணியில் பல அறிஞர் ஈடுபட்டனர். அவர்களை இருபெரும் பிரிவில் உட்படுத்தலாம். ஒரு பகுதியினர் மறைமலையடிகள் போல ஆராய்ச்சி நிலையில் அமைந்தவர். மற்றொரு பகுதியினர் மு.வ. போல மக்கள் நோக்கில் வழங்கியவர். கி.வா.ஜ. அவர்கள் பின்வகையைச் சார்ந்தவர்.

சங்க இலக்கியம் தொடர்பாகச் சுமார் 25 நூல்கள் கி.வா.ஜ. எழுதியுள்ளார். அவற்றுள், கலைமகள் காரியாலயம், அல்லயன்ஸ் கம்பெனி என்பன ஒவ்வொரு நூலை வெளியிட, பெரும்பான்மையான பிற நூல்கள் அமுத நிலைய (முதற்பதிப்பு) வெளியீடாகும். 1944 முதல் 1985 வரையிலான காலப் பகுதியில் இவை வெளிப்போந்தன (சு. அமிர்தலிங்கம், **சங்க இலக்கியக் களஞ்சியம்**, மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம், 2000, முன்னுரை; பக். 126-129). எட்டுத் தொகை பற்றிய எட்டு நூல் களையும் எட்டுத் திங்களில் எழுதத் திட்டமிட்டும், நிறைவுறப் பதினாறு திங்களாயிற்று என ஆசிரியர் குறிப்பிடுகின்றார் (**தமிழ் வையை**, முகவுரை, பக். 14-15). எட்டுத் தொகை பற்றிய எட்டு நூல்களும், இரு தொகுதிகளாக, சங்க நூற் காட்சிகள் எனத் தொகுக்கப்பட்டும் வெளியிடப்பட்டன.

கி.வா.ஜ.வின் சங்க இலக்கியம் தொடர்பான நூல்களை ஐந்து வகைகளாகப் பகுத்துச் சுட்டலாம். (1) சங்க நூல்கள் அறிமுகம் என்ற நிலை. (2) பாட்டுடைத்தலைவன் அல்லது பாவலனைப் பற்றி அமைவன. (3) எட்டுத்தொகையுள் ஒவ்வொரு நூலுக்கும் ஒரு சில பாடல்களைக் களனாக்கிய கட்டுரைகளால் ஆனவை. (4) பத்துப்பாட்டின் இரு நூல்களுக்கு இவ்வாறமைந்தவை. (5) உரைநடைக் கட்டுரைத் தொகுப்புகளில், சங்கக் காட்சியைக் கருவாக்கிய கட்டுரை இடம்பெறுதல் என்பன அவை.

இவற்றுள் சில, தனிக் கட்டுரையாக இதழ்களில் வெளியிடப் பெற்றுப் பின் நூலாக்கம் பெற்றனவாகும். சொற் பொழிவாக வழங்கப்பட்டு, பின்பு கட்டுரை - நூல் வடிவம் பெற்றனவும் உள. நூலாகவே எழுதப்பட்டனவும் உண்டு. இதனை அவ்வந்நூல் முன்னுரையில் ஆசிரியர் உணர்த்துகின்றார்.

ஒவ்வொரு நூலும், முகவுரை, உட்பகுதி என்பனவற்றை இன்றியமையா இரு பகுதியாகக் கொள்கின்றன. சில நூல்களில் இவற்றுடன் பிற்பகுதியும் உண்டு. இதில், அரும்பதக் குறிப்பு/ அருஞ்சொற்பொருள் - அகராதி, நூற்பெயர்கள், புலவர் பெயர்கள், இலக்கிய ஆதாரங்கள், பின்னுரை போன்றன அமைகின்றன. ஓவியத்திற்கு முக்கியத்துவம் அளித்தல் அட்டைப் படங்களிலும், 'காவியமும் ஓவியமும்' என்ற நூலுள்ளும் உண்டு. கவிதை பற்றிய கோட்பாடு இவர் ஆய்வுப் போக்கை உணரக் களம் வழங்கும்.

### கவிதை விளக்கம்

கவிதையைக் குறிக்கக் 'காவியம்' என்ற சொல் வடமொழியில் கையாளப் பெற்றதை அவ்வாறே தமிழுக்குக்

கொண்டுள்ளார் கி.வா.ஜ. அதாவது, காவியம், காப்பியத்தை மட்டும் குறிக்காமல், இலக்கியம் - செய்யுள் - கவிதை என்ற பொருளில் ஆளப்படுகின்றது.

> **ஆயுந்தொறும் இன்பம் தருவது கவிதை; மனிதவாழ்வில் அவனுடைய குறைகளையெல்லாம் மறக்க வைப்பது கவிதை; உலகத்துப் பொருட்களின் குறைகளையெல்லாம் அழகுபடுத்திக் காட்டுவது கவிதை. துன்ப நிகழ்ச்சி களிலுள்ள துன்பத்தை மாற்றி ரஸாநுபவத்துக்கு உரிய பொருளாக அவற்றை ஆக்கிவிடுவது காவியம்**
>
> (முன்னுரை ப. vi)

எனக் 'காவியமும் ஓவியமும்' (1944) என்ற சங்க இலக்கியம் பற்றிய முதல் ஆய்வு நூலில் சுட்டுகின்றார். கொடுமையையும் துன்பத்தையும் பாடினாலும், கவிதை இன்பம் தருவதை வாழ்வியல் உண்மையோடு முரணிக் காட்டுவது இலக்கியத்தின் கலைத் தன்மையை உணர்த்துகிறது.

> **உலகில் உள்ள பாலைவனம் சுடுகிறது. . .**
> **உலகத்துப் பாலைவனம் கவிஞனது நாவிலே புகுந்து வரும்போது இனிமையைப் பெற்றுவிடுகிறது.**
>
> (மேற்படி, பக். vi-vii)

> **மெய்யான அழுகையை நாம் மீட்டும் கேட்க விரும்புவதில்லை. அது துன்பத்தை உண்டாக்குவது. காவியத்தில் உள்ள அழுகை மேலும் மேலும் நம்மைக் கவர்கிறது.**
>
> (மேற்படி, பக். viii)

மேலும், கவிதை உள்ளத்தில் - மனக் கண்களில் ஓவியமாகப் பதிந்து நீங்காது நிலைப்பதும், இலக்கியச் சுவைக்கு ஈடுகொடுப்பதும், சங்க இலக்கியங்களைக் காட்சிப்படுத்தித் தர உதவுகிறது என்பது புலப்படுகின்றது.

> **காவியம் சொல்லோவியம். அதைப் படிக்கும்பொழுதே உள்ளத்தில் ஓவியக் காட்சி தானே அமைகின்றது. உருவம் இல்லாத பொருட்களையும் உணர்ச்சிகளையும் உள்ளம் உணரும்படி செய்துவிடுகின்றது. காவியத்துக்கு உள்ள பல இயல்புகள் ஓவியத்துக்கும் உண்டு.......**
> **சங்க காலக் காவிய உலகத்தின் காட்சி ஒவ்வொன்றும் ஒவ்வொரு சித்திரம். கலைத்திறம் கைவந்த ஓவியர்களுக்குச் சங்கநூல் ஒரு பெரிய களஞ்சியம்** (மேற்படி, பக். xv)

கவிதையின் பாலுள்ள ஈடுபாடே ஒருவரைச் சுவைஞராகவும், திறனாய்வாளராகவும் ஆக்குகின்றது எனலாம். தெவிட்டி விடும் இன்பங்களுக்கிடையே தெவிட்டாததாகக் கவிச்சுவை அமைகின்றது என்பது கி.வா.ஜ.வில் வெளிப்படுகிறது.

புலன்களால் நுகரும் இன்பத்தை உதவும் ஏனைய பொருள்களைக் காட்டிலும் நேரே உள்ளத்தால் நுகர்ந்து இன்புறும் கவிதை, போகப் பொருள்களி லெல்லாம் தலைசிறந்தது..... கவிதை தான் இன்ப வாழ்க்கைக்கு உயிர் (மேற்படி, பக். V)

என்பார்.

## ஆசிரியப்பற்று

சங்கக்கவிதையின்பால் கி.வா.ஜ.வுக்கு ஏற்பட்ட ஈடுபாட்டிற்கு அவர் ஆசிரியரும் அவர் வழியாகப் பெற்ற இலக்கியக் கல்வியும், அவரோடு இணைந்து பதிப்புப் பணியில் - பயிற்சியில் ஈடுபட்டதும் காரணம். இதனை அவரது முன்னுரையில் சுட்டுகின்றார்.

என்னுடைய ஆசிரியப் பெருந்தகையாகிய டாக்டர் உ.வே.சாமிநாதையரவர்கள் சங்க நூல்களை வெளிக் கொணர்ந்து துப்புத் துலக்கி மெருகிட்டுத் தமிழர் களுக்கு உதவினார்கள். இன்று தமிழ்நாட்டில் பண்டைத் தமிழர் சரிதமும், பண்டைக் கவிதையின்பமும் தமிழர் உள்ளத்திலே விளையாடுவதற்கு அவர்களுடைய முயற்சியே விதையாகும்.

அப்பெரியாருடைய திருவடிக்கீழ்ப் பல வருஷங்கள் பணி புரிந்து தமிழ் கற்கும் பேறு பெற்றமையால் சங்ககாலக் கவிதையின்பத்தின் சில துளிகளை என் சிறுமதியால் அறிந்து இன்புறும் வாய்ப்பு உண்டாயிற்று (மேற்படி, பக். XV)

அன்றியும், காவியமும் ஓவியமும் நூலில் மட்டுமன்றிப் பிற சில நூல்களிலும் இதனைச் சுட்டுவார். இறை - ஆசிரியர் என்ற இணை நிலையில் இக்கருத்து வெளிப்படுதலையும் காணலாம்.

முருகன் திருவருளும், என் ஆசிரியப் பிரானுடைய ஆசியுமே இந்தச் செயலில் யான் புகுவதற்கு மூலகாரணமாக நிற்பவை (சங்கநூற் காட்சிகள், தொகுதி 1, முகவுரை)

என்பது சான்று. மேலும், கவிதை வடிவில், தன் ஆசானுக்குச் சமர்ப்பணம் எழுதும் போதும் இதனை அறிய இயலும்.

பெற்றாள் இல்லை அன்னையென
பிறந்தேன் இல்லை மகவென்ன
மற்றொ அன்பின் வகை எல்லாம்
மாணக் காட்டித் தமிழ்பயிற்றிக்
கற்றோர் அவைக்கண் எனை நிறுவும்
கருணையாளன் அமரநிலை
உற்றான் சாமிநாதன் அடி
மலர்க்கீழ் இந்நூல் ஒளிருகவே
(காவியமும் ஓவியமும், ப. iii)

சங்க இலக்கியக் கல்விக்கு அமைந்த ஆசிரியர் தோய்வு, ஆராய்ச்சிக்கும் அமைந்ததையும் கி.வா.ஜ. விளக்குகின்றார். இலக்கியச் சுவைப்பாகச் சங்கக் கவிதை பற்றிய நூல்கள் அமைந்துள்ளதுடன், ஆய்வுப் போக்கும் பெற்றமையே இங்கு அடித்தளம் அமைகின்றது.

> **என்னுடைய ஆராய்ச்சிக்கு நெறி வகுத்துதவி அவ்வப் போது நான் நூல்களை ஆராய்ந்து செய்திகளைத் தொகுக்க வேண்டிய முறையை உரைத்து நான் எழுதுவனவற்றைக் கண்காணித்துத் திருத்தங்கள் செய்து இக்கட்டுரை நிறைவேறிய காலத்துப் பார்வையிட்டு ஆசீர்வதித்தருளிய என் ஆசிரியப் பெருமானாகிய பிரம்மஸ்ரீ மகா மகோபாத்தியாய டாக்டர் உ.வே.சாமி நாத ஐயரவர்களுக்கு நன்றி கூற என் உள்ளம் முந்துகிறது. ஆயினும் உள்ளத்தை வெளிப்படுத்த வார்த்தைகள் இல்லை. இக்கட்டுரையில் அறிவின் கூறுபாடு எங்கெங்கே இருப்பதாகத் தோன்றுகிறதோ அவையாவும் அவர்கள் அளித்த பிச்சை ஏனையவை என் பேதைமையின் விளைவுகள்** (தமிழ்க் காப்பியங்கள், முகவுரை, ப. vii)

என்கின்றார்.

### அவையடக்கம்

ஆசிரியப் பற்றும் இறைப் பற்றும் சங்க இலக்கியப் பற்றும் முப்புரியாகி உறுதி பெற்று, நூல்பல இயற்றும் பாங்கைக் கி.வா.ஜ. அவர்களுக்கு அளித்துள்ளமை வெளிப் படுகிறது. எனினும் பல திறமுடைய பன்னூலாசிரியர் (300 நூல்கள்) என மேன்மை கருதா அவையடக்கம் அவரை இனம் கண்டு கொள்ளச் செய்கிறது. 'கற்றது கை மண் அளவு, கல்லாதது உலகளவு' எனக் கற்றறிந்த அறிஞர், கல்வியாளர் ஒவ்வொருவரும் உணர்வர் என்பது, இவரது பணிவுமொழியைக் காணும்போது ஏற்படுகிறது.

> **சங்க நூற் கடல் எங்கே? நான் எங்கே? பரந்த பெருங் கடற்கரையில் கிளிஞ்சல் பொறுக்கும் குழந்தையைப் போல இவற்றை எழுதினேன்** (தமிழ் வையை, முகவுரை, ப. 13)

எனத் தன்னைக் காட்டுகின்றார். மேலும், தன் முனைப்பு வெளிப்படுத்தாமல், சங்க இலக்கிய ஆய்வுப் புலப்பாடுகளுக்குப் பதிப்பகத்தாரின் ஊக்கத்தைக் கருத்துள் வைத்து மொழி கின்றார்.

இவை புத்தக உருவத்தில் வருவதற்குரிய ஏற்பாடுகளைச் செய்து என்னைத் தூண்டி நிற்பவர் என் உழுவலன்பினரும் அமுத நிலையத்தின் தலைவரும் ஆகிய ஸ்ரீ.ரா.ஸ்ரீகண்டன் அவர்கள். இயல்பிலேயே சோம்பலை அணியாகப் பூண்ட நான், அவர்களுடைய ஊக்கம் இல்லையானால் இதை எழுத முற்பட்டிருக்க மாட்டேன் (சங்க நூற் காட்சிகள், தொகுதி 1, முகவுரை, ப. 22)

## நன்றியுணர்வு

'நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம்' என்பது வள்ளுவம் (குறள். 138). 'அச்சில் வெளிப்படு அல்லது அழி' (publish or perish) என்பது பழமொழி. சங்க ஆய்வு நூல்கள் உட்படப் பல நல்ல நூல்கள் எழுதிய புகழ்பெற்ற கி.வா.ஜ. ஆண்டவர், ஆசிரியர் என்பவருடன், தன் நூல் வெளியீட்டாளர், நூலுக்கு ஓவியம் வரைந்தவர் ஆகியோருக்கும் 'காலத்தினால் செய்த உதவிக்கு' (குறள். 102) நன்றி பாராட்டுவார்.

முருகன் திருவருளும் என் ஆசிரியப்பிரானுடைய ஆசியுமே இந்தச் செயலில் யான் புகுவதற்கு மூலகாரணமாக நிற்பவை. முருகன் திருவருள் இந்த முயற்சியை நிறைவேறச் செய்யும் என்று நம்புகிறேன் (சங்கநூற் காட்சிகள், தொகுதி 1, முகவுரை, ப. 22)

என இறைவனுக்கு, ஆசிரியருக்கு நன்றியுணர்வைப் புலப்படுத்து வார். முன்சுட்டியபடி அமுத நிலையத்தினைப் பாராட்டியது போல, 'வழிகாட்டி' நூலில், அல்லயன்ஸ் நிறுவன வெளியீட்டாளரைப் பாராட்டுவார்.

இந்நூல் வெளியாவதில் மிக்க ஆர்வம் காட்டிய அல்லயன்ஸ் கம்பெனி உரிமையாளரான ஸ்ரீ குப்புசாமி ஐயரவர்களுடைய அன்பை நான் பாராட்டுகிறேன் (வழிகாட்டி, முன்னுரை, ப. vi)

ஓவியங்கள் வரைந்த சூழலை எடுத்து மொழிந்ததுடன், ஓவியர் ராஜம் அவர்களையும் நன்றியுடன் சிறப்பிக்கின்றார்.

காவியத்துக்குப் பெற்ற ஓவியங்களை வரைந்து உதவிய ஸ்ரீ ராஜத்துக்கு வெறும் நன்றியுரை சொன்னால் மட்டும் போதாது. தமிழ்நாட்டின் இந்திய ஓவியத்தின் சிறப்பை நன்கு உணரும் காலம் வரும். அப்போது ராஜத்தின் ஓவியங்கள் வாடாமலராக இருந்து மணம் வீசும் என்பதில் சந்தேகம் இல்லை. இனி வரும் தமிழுலகத்தினர் நான் இப்போது அவர்பாற் காட்டும்

**நன்றியுணர்வைக் காட்டிலும் பல மடங்கு விரிந்த நன்றியைக் காட்டுவார்கள். அந்தப் புகழ் அவருடைய முயற்சிக்கு ஏற்ற பயனாக இருக்குமென்ற நம்பிக்கை யினால் அவரை நான் வாழ்த்துகிறேன்** (காவியமும் ஓவியமும், முன்னுரை, ப. xviii)

நூல்வெளியீடு என்பது ஒரு தனி முயற்சியாக அன்றி ஒரு கூட்டுமுயற்சியாக, ஒருங்கிணைந்த இனிய அனுபவமாக அமைவதன் சிறப்பு இவர் எழுத்தில் வெளிப்படுகிறது. சங்க இலக்கிய ஆய்வு பன்முகம் காட்டிப் பல நூல்களாகப் பரிணமிக்க இத்தகு பல உறுதுணைகளும் ஆசிரியருக்கு அமைந்தது குறிப்பிடத்தக்கது. ஆசிரியப்பற்று, இறையீடுபாடு, அவையடக்கம், நன்றியுணர்வு என்பன இவரது ஆளுமையை வெளிப்படுத்துகின்றன.

## பொழிவும் எழுத்தும்

சொற்பொழிவாளர் ஒருவர் எழுத்தாளராக அமைய வேண்டும் என்ற கட்டாயமில்லை. அதுபோல, எழுத்தாளர் ஒருவர் சிறந்த பேச்சாளராக வெற்றி பெறுவார் என்ற நிர்ப்பந்தமும் அமைந்திலது. ஆயின் கி.வா.ஜ. அவர்களின் எழுத்து, சொற்பொழிவின் நிறைவடிவமாக உருவாகியுள்ளது குறிப்பிடத்தக்கது. அருணகிரி நாதரின் பாடல்களை அடிப்படையாக்கி எழுந்த பொழிவுகளே பின்பு 'குறிஞ்சிக் கிழவன்' என்ற நூலாயின. இதனை,

> **தேனாம் பேட்டையில் உள்ள பாலசுப்பிரமணியர் திருக்கோயிலில் வாரந்தோறும் வியாழக்கிழமையன்று இரவு ஏழு மணி முதல் எட்டரை மணி வரையில் இந்தச் சொற்பொழிவுகளை நிகழ்த்தி வருகிறேன் (முன்னுரை)**

என்ற அதன் முன்னுரை வெளிப்படுத்துகிறது. பேச்சு, கேட்க இன்பமாக அமைய, எழுத்து மீண்டும் மீண்டும் படிக்க இன்பம் தரும் என்ற சுவைக்கோட்பாட்டையும் இந்நூலில் முன்வைப்பார்.

> **எழுதும் கட்டுரையில் உள்ள செறிவு இதில் (பேச்சில்) இல்லாமல் இருக்கலாம். ஆனால் விளங்காத பகுதி ஒன்றும் இதில் இராதென்றே எண்ணுகிறேன். பேச்சைக் கேட்கும்போது உண்டாகும் அனுபவம் வேறு, பேச்சில் தொனி வேறுபாடுகளும் பேசுபவனுக்கு நேரே கேட்பவர்கள் இருந்து ஒரு முகமாகக் கவனிக்கும் வாய்ப்பும் உண்டு. அதனால் பேச்சில் ஓரளவு சுவை பிறக்கிறது. அந்த வாய்ப்பு கட்டுரைகளுக்கு இல்லை. ஆனாலும் பன்முறை படித்துப் படித்து இன்புற இயலும். (குறிஞ்சிக்கிழவன், முன்னுரை)**

இதைப்போல, சங்க இலக்கிய ஆய்வும் பொழிவாக இருந்து எழுத்தில் வந்துள்ளது. திருமுருகாற்றுப்படையை அடிப்படையாகக் கொண்டெழுந்த விளக்க நூலான வழிகாட்டி, சொற்பொழிவாக அமைந்து புத்தக வடிவு பெற்றதாகும் என்பது சுட்டத்தக்கது.

> பத்துப்பாட்டில் முதலாவதாகிய திருமுருகாற்றுப் படையைப் புதுமுறையில் விளக்கலாமென்று எண்ணினேன். ஒருமுறை சென்னைக் கோகலே ஹாலில் இந்நூலின் விரிவுரையைத் தொடர்ச்சியாக நிகழ்த்தினேன். அது முதலே புத்தகத்தை உருவாக்கி எழுத வேண்டுமென்ற ஆர்வம் இருந்தது. . . இந்நூல் விளங்குமென்பதே என் கருத்து. (வழிகாட்டி, முன்னுரை)

என்பார். கருத்தாடலாக அமையும் பேச்சு, நடையியல் உத்திகளுடன் எழுத்தில் வெளிப்படும் போதுள்ள புலப்பாட்டைக் கி.வா.ஜ. உணர்ந்தமையை அவரது இத்தகு சொற்கள் வெளிப்படுத்தும். நேரில் பேசுவது போல் எழுதுவது, தகவல் பரிமாற்றத்தை எளிமையும் தெளிவுமுடையதாக்குவதோடு படைப்பாளரையும் சுவைஞரையும் நெருக்கமான தொடர்புக்குள் கொண்டுவரும் பாங்கு வேண்டப்படுவது தெரிகின்றது. ஆய்வு தற்சார்பின்றி அமைவது தேவையெனினும், தற்சார்புடனான இத்தகு வெளியீட்டுத் திறன், உணர்வொன்றிப்பைத் தருவதால், சங்க இலக்கியச் சிறப்பைப் பரப்ப - பரவலாக்க உகந்த உத்தியாகின்றது எனக் கருதலாம்.

## ஆராய்ச்சியாளர்

கி.வா.ஜ.வின் 'தமிழ்க் காப்பியங்கள்' (1940) என்ற நூல் அவரை ஒரு ஆராய்ச்சியாளராக நிலைப்படுத்தியது. 1934-37 ஆண்டுக் காலகட்டத்தில் நிகழ்த்திய ஆய்வின் வெளிப்பாடாகும் இது. சங்க இலக்கிய ஆய்வுக்கு வருமுன்னான அடித்தளம் அவருக்கு இங்கே கிடைத்துவிடுகிறது. ஆய்வுக்குள் நுழைதல், அதன் பரப்பு, பரிமாணம், அணுகுதல்கள், பகுப்பும் வகைப்பாடும் எனக் கவனிக்கப்பட வேண்டிய கூறுகள் புலப்படுகின்றன. நேரடியாகப் பொருளுக்குள் நுழையாமல், பிரகாரங்கள் சுற்றி உட்புகுதலாக அமையும் முந்தைய காலநிலை அதில் உண்டு. மொழி வரலாறு, இலக்கணம் எனத் தொடக்கம் அமைய, வடமொழி அலங்கார சாஸ்திரங்கள், ஆங்கில நூல்களைக் களனாக்கி ஆய்வுப் பொருண்மையை அணுகுதல் தொடர்கின்றது. பின்பு, தொல்காப்பியம் முதல், பல யாப்பு, அணி, பாட்டியல் நூல்கள் வழிக் காப்பியக் கோட்பாடு உணர்த்தப்படுகின்றது.

நாடகம், காப்பியம் பற்றிய அடிப்படைகளை விளக்குவது அடுத்து அமைகின்றது. தொடர்வது காப்பிய இலக்கியங்கள் பற்றிய பகுதியாகும். ஆய்வாளருக்குரிய எதிர்கால நோக்குடன், புதுக்காப்பியம், வருங்காலக் காப்பியம் பற்றிய தொலைவுப் பார்வையும் தொடர்ந்து அமைவது குறிப்பிடற்குரியது.

ஆய்வாளரை, அவரது அணுகுமுறையும், பொருள் தெளிவும் நூல் முன்னுரையும் தெற்றென அறிமுகம் செய்துவிடும். ஆய்வு நோக்கு, ஆய்வின் தேவை பற்றிய அறிவு, நூலமைப்பு என்பன மேலும் புலப்பாடு வழங்கும் களங்களாகும். ஆய்வு நோக்கம், நூலாக்கத் தேவை பற்றிய தெளிவை வழிகாட்டியின் முன்னுரை வழி அறியலாம்.

> பழைய சங்க நூல்களைப் படித்துப் பொருள் உணர்தல் எளிதன்று. அந்த நூல்களில் உள்ள கருத்தை விளக்கினால் யாவரும் உணரலாம். அக்காலத்து நடைதான் இதற்குக் காரணம். ஆனாலும் அந்த நடையிலே இன்ன சொல்லுக்கு இன்னதுதான் பொருள் என்ற வரையறை உண்டு; ஒழுங்கு உண்டு. ஆகையால் சில நூல்களை நன்றாகப் படித்துவிட்டால் சங்க காலத்துச் சொற்றொடர்ப் போக்கு உள்ளத்துக்குத் தெளிவாகிவிடும். பிறகு சங்க நூல்கள் எல்லாவற்றையும் உணர்ந்து கொள்ளலாம். (வழிகாட்டி, முன்னுரை)

இந்த அடிப்படைதான் சங்க இலக்கியம் குறித்துப் பல நூல்கள் எழுத இவருக்கு அடித்தளம் அமைக்கின்றது. அதன் அணுகுமுறையைச் சுட்டுகின்றார். வாசகரின் ஆர்வமும் ஊக்கச் சொற்களும் ஆய்வுப் பணித் தொடர்ச்சிக்கு வழி வகுத்துள்ளன.

> சங்க நூல்களிலுள்ள அழகை அனுபவிக்க, அதில் உள்ள கருத்தை முதலில் எடுத்துக்காட்டி, சொற்களை யும் இடையிடையே புகுத்தி எழுதினால் ஒருவாறு கவிகளை உணரலாமென்றெண்ணியே சில சங்கநூற் பாடல்களைக் 'காவியமும் ஓவியமும்' என்ற புத்தகத்தில் விளக்கியிருக்கிறேன். (மேற்படி)

> இப்புத்தகத்தில் ('வழிகாட்டி') நூலைப் பகுதி பகுதியாகப் பிரித்துக்கொண்டு முதலில் அப்பகுதியிலுள்ள கருத்தை விரிவாகச் சொல்லியிருக்கிறேன். அப்படிச் சொல்லும் போது, நூலில் வரும் சொற்களில் பலவற்றை இடை யிடையே விரவச் செய்திருக்கிறேன் (மேற்படி)

சங்க இலக்கியம் கடினமாகத் தோன்றக் காரணம் அதன் மொழிநடைதான் எனச் சிக்கலை உணர்ந்தமையும், அதை மேற்

கொள்ள, தெளிவுக்கு வழிமுறை கண்டமையும் இதில் புலப்படும். அம்முறை வரவேற்புக்குரியதாக அமைவதும் சுட்டப்படுகிறது. இன்றைய ஆய்வாளருக்கும் இது நல்ல வழிகாட்டுதலாகும்.

> அந்த முறை நன்றாக இருக்கிறதென்று அன்பர்கள் சொன்னார்கள், அந்த முறையில் பின்னும் பல பாடல்களுக்கு விளக்கம் எழுத வேண்டுமென்று பலர் வற்புறுத்தினார்கள் (மேற்படி)

ஆய்வு நூலின் முன்னுரை, ஆய்வுப் பிழிவாக அமைய வேண்டும் என்ற போக்கையும் கி.வா.ஜ. சுட்டுவது குறிப்பிடற் குரியது.

> நூலோடு தொடர்ந்து செல்லும் இந்த விளக்கத்தை யல்லாமல் 'அறிமுகம்' என்ற ஒன்றை முன்பு காணலாம். அதில் நூல் முழுதும் பரவியுள்ள செய்திகளை வகைப் படுத்திப் பிழம்பாகக் காட்டியிருக்கிறேன் (மேற்படி)

ஆய்வாளர்க்குரிய அரிய பண்புகளுள் ஒன்று, வளர்ச்சி காட்டுவது. வழிகாட்டி என்ற சிறுநூலைத் (180 பக்கம்), திருமுருகாற்றுப்படை விளக்கமாகப் (350 பக்கம்) பரிமாணம் கொள்ளச் செய்ததில் இது வெளிப்படுகின்றது. ஆசிரியரே இது பற்றிக் கூறுகிறார்.

> இந்த விளக்கவுரையில் 'வழிகாட்டி'யில் இல்லாத பல்வேறு செய்திகளைக் காணலாம். முக்கியமாகச் சமய சம்பந்தமான கருத்துக்களின் விளக்கங்கள் விரிவாக இந்த நூலில் உள்ளன. சில செய்திகளை விளக்கும் உவமைகள் இந்த நூலில் புதியனவாக இருக்கும். நச்சினார்க்கினியர் உரை, வேறு ஒரு பழைய உரை ஆகிய வற்றில் உள்ள பல பகுதிகளை இடையிடையே காட்டி யிருக்கிறேன். (திருமுருகாற்றுப்படை விளக்கம், முன்னுரை)

தொடக்க ஆய்வுகள் இலக்கிய நோக்குடன் அமைய, தொடர் ஆய்வுகள் சமயப் பரிமாணத்தையும் உட்கொண்டமைவது இதில் புலப்படுகின்றது. இலக்கியத்தை இலக்கியமாகப் பார்த்த ஒரு கால கட்டமும், குறிப்பாகச் சில இலக்கியங்களைச் சமய நூலாகப் பார்த்த மற்றொரு கால கட்டமும் இதில் புலப்படுகின்றன.

## கட்டுரையும் நூலும்

அறிஞர் கி.வா.ஜ., தம் நூலாக்கத்திற்கு ஒரு முன் படியாகக் கட்டுரை அமைப்பைக் கருதச் செய்கிறார். பல போதும், கட்டுரைத் தொகுப்புகள் நூலாகியுள்ளன. அக்கட்டுரைகள் சொற்பொழிவின் மறுவடிவமாக அமைவன என்பதும் உண்டு.

'காவியமும் ஓவியமும்' எனும் ஆக்கம், கலைமகள் இதழில் வந்த கட்டுரைகளின் தொகுப்பு வடிவமாகும்.

> **சங்க நூலில் உள்ள சில செய்யுட்களைப் புதுமுறையில் தமிழன்பர்களுக்கு அறிமுகப்படுத்தலாம் என்ற எண்ணத்தினால் 'காவியமும் ஓவியமும்' என்ற பெயரோடு ஒரு கட்டுரை வரிசையைக் கலைமகளில் தொடர்ந்து எழுதி வரலானேன்....**
>
> **கலைமகளில் இக்கட்டுரைகள் வெளியானபோது பல அன்பர்கள் இவற்றைப் பாராட்டினார்கள். அந்தப் பாராட்டே இவற்றைத் தொகுத்துப் புத்தக உருவத்தில் வெளியிடத் தூண்டியது** (முன்னுரை, பக். xv, xvii).

இதழியலாளராக அமைந்தமையும், கட்டுரைகள் முதலில் வெளிவர இதழ்கள் களம் வழங்கியமையும் ஆய்வு முன்னேற்றத்திற்கு உதவியுள்ளன. 'வழிகாட்டி' நூல் வெளிவந்த பின்பும், திருமுருகாற்றுப்படை விளக்கச் சொற்பொழிவுகள் இதழில் தொடர்ந்து கட்டுரையாக வெளிவந்ததே, நூல் வளர்ச்சியடையக் காரணமாகியது என்பதும் சுட்டற்குரியது. அந்நூல் முன்னுரை,

> **(அதன் பின்பும்) பல இடங்களில் திருமுருகாற்றுப் படையின் விளக்கத்தைத் தொடர் சொற்பொழிவுகளாக ஆற்றி வந்தேன். . . பிறகு அந்தச் சொற்பொழிவுகளை அடியொற்றிய விளக்கவுரையைத் திருமுருக கிருபானந்த வாரியாரவர்கள் நடத்திய 'திருப்புகழ் அமிர்தம்' என்ற பத்திரிகையில் தொடர்ச்சியாக எழுதி வெளியிட்டு வந்தேன்.. அவை யாவும் நிறைவெய்தியவுடன், "திருமுருகாற்றுப்படை விளக்கம்" என்ற பெயருடன் அந்தக் கட்டுரைகளை வெளியிட்டேன்**

என இதனைப் பதிவு செய்கிறது. இதுபோல, மஞ்சரியிலும் எழுதி வெளியிட்டவை பின்பு நூலாயின.

### தமிழ்நூல் அறிமுகம்

இன்றைய 'தமிழிலக்கிய வரலாறு' நூல்கள் ஆற்றும் பணியின் ஒரு முன்னோடியாகக் கி.வா.ஜ. அவர்களின் இத் 'தமிழ் நூல் அறிமுகம்' (1977) அமைகின்றது. சங்க இலக்கியம் மட்டுமன்றி, தொல்காப்பியமும் கீழ்க்கணக்கு நூல்களும் பற்றிய பன்முகத் தகவல்கள் இங்குத் திரட்டியளிக்கப்படுகின்றன. 'மஞ்சரி'யில் இவை தொடராக வந்து செப்பம் செய்யப்பட்டு நூலாக்கம் பெற்றனவாகும் (முன்னுரை, பக். vii - viii).

சங்க இலக்கியம் பற்றிப் பொதுவாகவும், ஒவ்வொரு தொகை நூல், ஒவ்வொரு பத்துப்பாட்டுப் பற்றித் தனித்தனி யாகவும் (2 முதல் 20 பகுதிகளில்) அறிமுகம் செய்கின்றன. நூலாசிரியர் கூறுவது போல,

> **இந்தக் கட்டுரைகள் நூல்களைப் பற்றி ஓரளவு அறிந்துகொள்ள உதவியாக இருக்கும்... ஆழமான ஆராய்ச்சி நூலாகவோ, விரிவான திறனாய்வாகவோ, எல்லாப் பகுதிகளையும் பற்றி விளக்கும் விளக்கமாகவோ இதைக் கொள்ளக் கூடாது. தமிழ்ப் பண்டை நூல்களில் என்ன என்ன எப்படி எப்படிச் சொல்லப்பட்டிருக்கின்றன என்பதையும், நூலாசிரியர்களைப் பற்றிய செய்திகளையும் அறிந்துகொள்ள இந்தக் கட்டுரைகள் உதவவேண்டும் என்பதே என் நோக்கம்** (மேற்படி, ப. viii)

என்பது கருத்தில் கொள்ளத்தக்கது. எட்டுத் தொகை பற்றித் தனித்தனி நூல்கள் வந்தமைக்கும் பத்துப்பாட்டின் இரு பாட்டுகளுக்கு அவ்வாறே நூல்கள் உருவானமைக்கும் இங்கு விதை வெளிப்படுகிறது. இவ்விதை, அவற்றில் நூல்களாக விழுதுவிட்டு வளர்ந்துள்ளன. பத்துப்பாட்டின் பிற எட்டுப் பாட்டுகட்கும் தனித்தனி நூல்கள் வராதது தமிழின் தவக் குறைவே. நூல், நூலின் தன்மை, தொகுத்தோர், தொகுப்பித் தோர், அடியளவு, பொருண்மை என்ற பொதுச் செய்திகளுடன், ஓரிருபாடல் அல்லது சில பல அடிகளின் தனித் தன்மை புலப் படுத்தும் விளக்கம் என்பன இவற்றின் பொது அமைப்பாகும். இப்பகுதிகளும், இவை பற்றிய தனி நூல்களும் அவற்றின் முன்னுரையும் வெவ்வேறு விதமாகவே எழுதப் பெற்றுள்ளமை தன் பணியில் கி.வா.ஜ. கொண்டுள்ள ஈர்ப்பையும், ஈடுபாட்டையும் புலப்படுத்தும். சான்றாக, அகநானூறு (பக். 125-132) பகுதியை எடுத்துக் கொண்டால், செலவழுங்கும் தலைவன் கூற்று, இருதலைப்புள்ளின் ஒருயிராகத் தலைவனும் தலைவியும் அமைதல், பொதினி-பழனி தொடர்பு, இராமன் புள்ளொளி அமர்த்தியது, குடவோலை முறை போன்றன இங்கமைகின்றன. கடவுள் வாழ்த்து, 2, 4, 8, 14, 22. பாடல்களின் விளக்கம் என்பன 'இன்பமலை' என்ற அகநானூறு பற்றிய தனி நூலில் இடம் பெறுகின்றன. இவ்வாறே பிறவும் கண்டு காட்ட முடியும்.

## புரவலர் – புலவர் பற்றிய நூல்கள்

கோவூர்கிழார் (1953), கரிகால் வளவன் (1959), குமண வள்ளல் (1955), பாண்டியன் நெடுஞ்செழியன் (1956), அதியமான் நெடுமான் அஞ்சி (1959), பாரிவேள் (1968) என்ற ஆறு நூல்களும்

வரலாறு தழுவிய கதை நூல்களாக அமைகின்றன. சங்க இலக்கிய ஆய்வு என்பதுள், பாடல்களையும் அவை தொடர்பான செய்திகளையும் களனாக்கிச் சிறிது வேறுபட்டமைவன இவை. இலக்கியக் குறிப்புகளிலிருந்து வரலாற்றை உருவாக்கும் முயற்சி தென்படினும், கதை கூறும் உத்தி முன்னிற்கின்றது. நோக்கமும், அணுகுமுறையும் நூலாசிரியரால் விளக்கப்படுகின்றன. 'கரிகால் வளவன்' நூல் குறித்து,

> ஆராய்ச்சி முறையில் இன்ன இன்ன நிகழ்ச்சிக்கு இன்ன இன்னது ஆதாரம் என்று சொல்லாமல், இலக்கிய ஆதாரங்களையெல்லாம் தொகுத்து அவற்றிலுள்ள செய்திகளை ஒருவாறு கோவைப்படுத்திக் கற்பனை யென்னும் பசையால் இணைத்து உருவாக்கியது இவ் வரலாறு. நிகழ்ச்சிகளினூடே உள்ள உணர்ச்சியை வெளிப் படுத்த வருணனைகளையும் உரையாடல்களையும் இடை யிடையே அமைத்திருக்கிறேன். புத்தகத்தைப் படித்த பிறகு, ஒரு பேரரசனுடைய வரலாற்றை உணர்ச்சியோடு தெரிந்து கொண்டோம் என்ற திருப்தி நிலவவேண்டும் என்பதே என் கருத்து. அதோடு படித்துச் செல்லும் பொழுதே கதையை நாம் ஒட்டாமல் அது நம்மை ஒட்ட வேண்டும் என்ற நினைவால் கதைக்குரிய கருவை விரித்துச் சொல்லியிருக்கிறேன். (கரிகால்வளவன், முகவுரை)

எனச் சுட்டுவது காணத்தக்கது. சங்க இலக்கியம்பால் உள்ள ஈடுபாடும், பாடல் தலைவர்பால் ஏற்பட்ட பற்றும் படைப்பாளரின் வியத்தகு திறன் குறித்த மாண்பும் இத்தகு நூலாக்கத்திற்கு வேராவதைக் 'கோவூர்கிழார்' நூலில் உணரலாம். அதில்,

> சங்ககாலப் புலவர்களுள் ஒருவராகிய கோவூர்கிழாரின் வரலாறு பல துறைகளோடு தொடர்புடையது. பலருடைய வாழ்க்கையை உருவாக்கிய வரலாறு அது. அமைதியை உண்டாக்கப் பிறந்தவரோ இவர் என்று தோன்றும் வண்ணம் அவர் செய்த செயல்கள் உள்ளன. இக்காலத்தில் சமாதானத்துக்காகப் பரிசு கொடுக்கிறார்கள். சங்க காலத்து மக்களில் இப்பரிசுக்கு ஏற்றவராக ஒருவரைத் தேர்ந்து அவரை வருவித்து அளிக்கும் ஒரு அதிசயம் நிகழ்ந்தால் அதனை நிச்சயம் கோவூர்கிழார் பெறுவார்.
>
> அவர் வரலாறு எனக்கு இனித்தது. அதை இந்தக் காலத்துத் தமிழில் சொல்லலாம் என்று தோன்றியது. இதனை எழுதினேன். ஆராய்ச்சி முறையில் காலத்தை வரையறுப்பது, சான்றுகள் காட்டிச் செய்தியை நிறுவுவது போன்றவற்றை இந்தச் சிறு புத்தகத்தில் காண இயலாது.

> **படிப்பவர்களின் உள்ளத்தில் ஒரு புலவர் பெருமானின் ஓவியம் உருவாகிப் பதிய வேண்டும் என்ற எண்ணத்தால் எழுந்த முயற்சி இது** (கோவூர்கிழார், முகவுரை)

எனக் கூறுவது சான்றாகும்.

**சங்கநூற் காட்சிகள் – எட்டுத்தொகை**

எட்டுத்தொகை பற்றிய எட்டு நூல்களும் சங்க இலக்கியத்தின் எழில்மிகு காட்சிகளை, தெவிட்டா இன்பம் தரும் இயற்கைப் புனைவுகளை, அகவுணர்வு வெளிப்பாடுகளை, புறவுணர்வுப் புலப்பாடுகளை எளிமையாகவும் இனிமையாகவும் சித்திரிக்கும் நோக்குடையவை. ஒவ்வொரு தொகுதியும், உள்ளமையும் கட்டுரைகளுள் ஏதேனும் ஒன்றன் தலைப்பையே நூல் தலைப்பாகக் கொண்டிலங்கும் அமைப்பொருமை கொள்கின்றன.

**மனைவிளக்கு (1951) – நற்றிணை**
**குறிஞ்சித்தேன் (1952) – குறுந்தொகை**
**தாமரைப்பொய்கை (1952) – ஐங்குறுநூறு**
**பிடியும் களிறும் (1952) – கலித்தொகை**
**அறப்போர் (1952) – புறநானூறு**
**இன்பமாலை (1952) – அகநானூறு**
**புதுவெள்ளம் (1952) – பதிற்றுப்பத்து**
**தமிழ்வையை (1953) – பரிபாடல்**

நான்கு நான்கு நூல்கள் ஒவ்வொரு தொகுதியாக, இவை சங்கநூற் காட்சிகள் - என இரு தொகுதியாகத் தொகுக்கப் பட்டும் ஆசிரியர் காலத்திலேயே, தனி முன்னுரையுடன் வெளியிடப்பட்டுள்ளமையும் சுட்டற்குரியது (தொகுதி - 1, 1962).

குறிஞ்சித்தேன், முதற்பதிப்பில் ஏழும், இரண்டாம் பதிப்பில் (1956), மூன்று கூடுதல் கட்டுரைகளுடன் பத்துக் கட்டுரைகளும் உடையது. விரிவான முகவுரை, எட்டுத்தொகை நூல் பெயர்கள், புறம் - அகம் எனும் பாகுபாடுகள், அகத்தில் திணைப் பாகுபாடுகள் ஐங்குறுநூறும் கலித்தொகையும், அடிவரை யறைப் பகுப்பினதான பிற அக நூல்கள், குறுந்தொகையே முதலில் தொகுக்கப் பெற்ற செய்தி என்பனவற்றைத் தருகிறது. மேலும் உரையாசிரியர் மேற்கோளில் குறுந்தொகையாட்சி, குறுந்தொகையில் இறையனாரின் பாடல் இடம்பெறும் தன்மை, தேர்ந்த பாடல்களைப் பாடியோர் பற்றிய தகவல், இப்பாடல் களிலிருந்து சங்க மக்கள் வாழ்வும் அவர் எண்ணமும் பற்றி அறியலாகும் செய்திகள், முதல்-கரு-உரி-கூற்று எனும்

கோட்பாடுகள், குறுந்தொகைப் பதிப்பு, இந்நூல் எழுதிய - எழுந்த சூழல் எனப் பலவும் கி.வா.ஜ. தருகின்றார். 'பொருள் விளக்கம் செய்வதில் இது புதிய முறை; நல்ல முறை' எனவும் 'புதுமுறையில் விளக்கம் எழுத முன்வந்தேன்' என்றும் தன்நிலையை வெளிப்படுத்துகிறார்.

கட்டுரைத் தலைப்புகள், சேவலங்கொடியோன், கூந்தல் மணம், குறிஞ்சித்தேன், அருளும் அன்பும், கொன்றைக் கானம், அகவல் மகள், அணில் ஆடும் முன்றில், குருவிக் குடும்பம், அவள் ஆவல், மகன்றியின் காதல் என அமைகின்றன. ஒவ்வொரு கட்டுரையும் விரிந்த விளக்க அமைப்பின. கதைபோல, சொற் பொழிவு போலச் செல்லும் நடையின. தொடர்புடைய, தெரிந்த, பொருத்தமான எல்லாக் கருத்தையும் அடுக்குதல் காணப்படு கிறது. இடையிடையே பாடல் வரிகளைத் தந்து விளக்குவதுண்டு. கட்டுரையின் இறுதியில் பாடலும், பொழிப்பும், பதவுரையுமாக அமைகின்றது. பாடலையும், அது இயற்றப் பெற்ற சூழலையும் நாடகத் தன்மையோடு உரையாடலமைப்பில் காட்சிப்படுத்தல், பாடலுக்கு வெளியேயுள்ள திணை, கரு, துறைச் செய்தியை - கிளவியை விளக்கல் என்பன உள.

புதுவெள்ளம் பதிற்றுப்பத்துப் பற்றிய எட்டுக் கட்டுரைகள் அடங்கிய நூலாகும். செல்வம் கண்டோம், புதுவெள்ளம், வெற்றி மேல் வெற்றி, பனித்துறைப் பரதவன், புலவர் கோமான், பாசறை ஓலக்கம், யானைப்படை, உயிர்தரும் கரும்பு என்பன அத்தலைப்புகள். பதிற்றுப்பத்துப் பாடல்களுக்கு, இவற்றின் தொடரால் ஏற்கெனவே பெயர்களமைய, கி.வா.ஜ. வேறு தலைப்புகள் தருவது குறிப்பிடற்குரியது. 'உருத்து வரு மலிர்நிறை' - 'புது வெள்ளம்' ஆகிறது; 'சில்வளை விறலி' - 'புரவலர் கோமான்' ஆகிறது - இவ்வாறு கவிஞர் அறிமுகம், பாடல் சூழல், நிகழ்ச்சி, பாடற்பொருளைப் புனைவாகத் தருதல், பாடல், அதன் சொற்பொருளும் குறிப்புகளும் என ஒவ்வொரு கட்டுரையும் உருவாகின்றது. மாணாக்கர்க்குப் பாடம் புகட்டுவது போலவும், வாசகருக்குக் கதைகேட்பது போலவும் அமைப்பு உருவாகியுள்ளது. நூலுக்கு முன்னமையும் முகவுரை இலக்கிய வரலாற்று நோக்கிலும், திறனாய்வுப் பார்வையிலும், பதிற்றுப்பத்தை அறிமுகம் செய்கிறது. பாடல்கள், கிடைக்காத பாடல், பாடியோர், பாடப்பட்டோர், தொகுப்பு, பதிகம், ஐயரவர்களின் பதிப்பு, இந்நூலிலடங்கிய கட்டுரைச் செய்திகள் எனப் பல கூறுகளையும் பெற்று எடுத்துக்காட்டாய் அமைகிறது.

பரிபாடல் பற்றியமையும் தமிழ் வையை இரு பாடல்களின் விளக்கம் தாங்கியது. கடுவன் இள எயினனாரின் திருமால் பற்றியமைந்த பாடலும், நல்லந்துவனாரின் வையைப் பாடலும் களமாகின்றன. ஏற்கெனவே முருகனைப் பற்றிய பரிபாடலொன்று (பாயிரும் பனிக்கடல்) 'பெரும் பெயர் முருகன்' என்ற நூலில் கட்டுரையாக்கப்பட்டதை நூலாசிரியர் குறிப்பது, ஆய்வுக்களப் பரப்பை உணர்த்துகிறது. முகவுரை, நால்வகைப்பா, பரிபாடல் பற்றித் தொல்காப்பியமும் பாப்பாவினமும் கூறுவனவற்றிலிருந்து பெறும் கருத்து, எட்டுத் தொகையுளொன்றான பரிபாடலின் அறிமுகம், உ.வே.சா. அவர்களின் பதிப்பு, சங்க இலக்கியங்களிலிருந்து கடவுள் வழிபாடு குறித்து அறியலாகும் செய்திகள், விளக்க எடுத்துக் கொண்ட பாடல்களும் ஆசிரியரும் பற்றிய சிறப்புக் குறிப்புகள், இவர் கொண்ட பாடம் குறித்த செய்தி என்பனவற்றை அளிக்கின்றது. நூலுள், திருமால்புகழ், சிறுசிறுதுணைத் தலைப்புகளில் பாடலுக்குள் நுழையுமுன் உள்ள கருத்துகள், சிலசில பாடலடிகளும் அவற்றின் பொழிப்புரையும் பதவுரையுமெனத் தொடர்ந்தும் பகுதிபகுதியாகச் சென்று, இறுதியில் முழுப்பாடலும் துறைக் குறிப்பும் என நிறைகிறது. இம்முறையே அடுத்த பாடலுக்கும் அமைந்து கி.வா.ஜ.வின் கூறுமுறையை அறிவிக்கிறது.

பத்துப்பாட்டில், திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப் படை ஆகிய இரு பாடல்களுக்கே நூலாக்கம் அமைகின்றது. அவற்றுள்ளும், திருமுருகாற்றுப்படையின் நூலாக்கம் இருமுறை நிகழ்ந்தமை தனித்துச் சுட்டற்குரியது. வழிகாட்டி 1947இல் அமைய, மறு ஆக்கமான திருமுருகாற்றுப்படை விளக்கம் 1970இல் உருவாகியுள்ளது.

வழிகாட்டியின் 'அறிமுகம்' என்ற தொடக்கப்பகுதி, எளிமையாகப் பொருளை விளக்குவதின் தேவையை ஆசிரியர் உணர்ந்தமையை மிக விரிவாகக் கூறுகிறது. நூலுக்குள் நேரே புகாமல் பல செய்தியும் கூறித் தொடங்கும் உத்தியை உணர்த்துகிறது. மேலும்,

> **முருகனைப் பற்றிய நூலாக இருந்தாலும் இதன்கண் நக்கீரர் காலத்தில் வாழ்ந்த தமிழர் வாழ்க்கையைப் பற்றிய செய்திகளும் இடையிடையே விரவியிருக்கின்றன. அக் காலத்து நாகரிகமும், முயற்சியும், வழக்கமும், வழிபாடும், உடையும், ஊணும், அணியும், படையும், இசையும் கூத்தும் இன்னபடி இருந்தன என்பதை இந்நூலைக் கொண்டு ஓரளவு தெரிந்துகொள்ளலாம்.** (அறிமுகம், ப. xxiv)

என நுவல் பொருளையும் சுட்டுகிறது. ஆற்றுப்படை என்ற சொல் அருமை பற்றி 'வழிகாட்டி' என அதனை எளிமைப் படுத்தி ஆள்கிறார் கி.வா.ஜ. திருவிளையாடற்புராணம் கூறும் நக்கீரர் பற்றிய செய்தி, 'பிறந்த கதை' என ஆசிரியர் அறிமுக மாகின்றது. ஆறுபடை வீடுகளடிப்படையில் நூல் தொடர்ந்து விளக்கம் பெறுகிறது. சிறு சிறு தலைப்புகளில், சில சில அடிகளின் பொருண்மையும் சொற்பொருளும் செய்தியும் விளக்கி நூல் அமைதல் இவரது அணுகுமுறையின் பொதுத்தன்மைக் கேற்ப உள்ளது. முழுப்பாடலையும் இறுதியில் தருகிறார்.

வழிகாட்டியிலுள்ளனவற்றை விளக்கியும் விரித்தும் திருமுருகாற்றுப்படை விளக்கத்தில் அமைத்ததுடன் பல புதிய சேர்க்கைகளையும் தரும் நிலை கி.வா.ஜ.விடம் காணப்படு கின்றது. முதல் மூன்று பாடல் வரிகள் வழிகாட்டியில் இரண்டு பக்க அளவிலும், விளக்கத்தில் சுமார் பத்து பக்க அளவிலும் விரிவுரை பெறுகின்றன. 'உலகம்' மங்கலச் சொல் என்பது புதிய சேர்க்கை ஆகுதல் சான்றாகும்.

> எந்த நூலைத் தொடங்கினாலும் மங்கலச் சொல்லில் தொடங்குவது ஒரு வழக்கு. இன்ன இன்ன சொற்கள் நூல்களின் முதலில் மங்கலச் சொற்களாக ஆள்வதற் குரியன என்று சொல்லும் இலக்கணம் ஒன்று பிற்காலத்தில் உண்டாயிற்று. அப்படி வரும் மங்கலச் சொற்கள் பலவற்றில் முக்கியமானது உலகம் என்பது. உலகம் என்ற மங்கலச் சொல்லில் தொடங்கும் நூல்கள் பல இருப்பதைப் பார்க்கலாம். கம்பராமாயணம், 'உலகம் யாவையும் தாமுள ஆக்கலும்' என்று தொடங்குகிறது.
>
> (திருமுருகாற்றுப்படை விளக்கம், ப. 38)

என்று அப்பகுதி அமைகிறது. இது 'வழிகாட்டி'யில் இல்லை. முருகனின் பலவகை நாமங்களை ஏத்துதல், பழமுதிர்சோலைப் (பகுதி. 2) பகுதியில் (வழிகாட்டி, பக். 113-135) 'கார்த்திகேயன்' என்பது முதல் 'சூரசங்காரன்' என்பது வரை 17 தலைப்புகளில் அமைய, திருநாமங்கள் (பகுதி 19) எனத் தனிப்பகுதியாக, 'விளக்கத்தில்' சுமார் 30 தலைப்புகளில் 40 பக்கங்களின் (பக். 228-267) விரிவாக இடம்பெறுகிறது. இவ்வாறே பிறவற்றையும் ஒப்பிட்டுக் காணலாம். எளிமை, தெளிவு, விரிவு என்பன இவ்விளக்கத்தால் ஏற்படுவது தெரிகிறது.

### கட்டுரைத் தொகுப்புகள்

பல்வகையான இலக்கியக் கட்டுரைத் தொகுப்புகள் கி.வா.ஜ. நூலாக்கத்தில் இடம்பெறுகின்றன. இவற்றுள் சில, சங்க

இலக்கியக் கட்டுரைகளையும் உட்கொண்டுள்ளன. முன் சுட்டிய 'காவியமும் ஓவியமும்' (1944), தவிர, பெரும்பெயர் முருகன் (1952), வாழ்வரசி (1956), புதுமெருகு (?), எல்லாம் தமிழ் (1959), வீரர் உலகம் (1966-மணிவாசகர் பதிப்பகம்), கன்னித் தமிழ் (1973) எனும் நூல்கள் இவ்வகைப்பாட்டின. 'எல்லாக் கட்டுரைகளிலும் சங்கச் செய்யுளின் தொடர்பு இருக்கும்' என 'வாழ்வரசி'யில் (முகவுரை, ப. 11) கூறுகிறார். இதன் 'வாழ்வரசி' என்ற முதற்கட்டுரை, உணவளித்தல், விருந்தோம்பல் என, சங்க இலக்கியம், சிலம்பு, கம்பன், பழமொழி என்பது வரை செல்வது காலந்தோறுமான கருத்தோட்டத்தை விளக்கும். மற்றொரு கட்டுரையான 'எலியும் புலியும்', புறம், குறள் எனத் தொடர்ந்து பாரதி வரை செல்கிறது. முதல் ஆறு கட்டுரையில் சங்க இலக்கியப் பின்புலமுள்ள 'எல்லாம் தமிழ்', நூலிறுதியில் இலக்கிய ஆதாரங்களைத் தொகுத்துத் தருவது (பக். 91-100), கதைத் தன்மையுடைய நூலுக்கு வரலாற்றுச் சாயல் தருகிறது. இதனை ஆசிரியர் முகவுரையிலும் சுட்டுகிறார்.

## ஆய்வுப் போக்கு

விளக்கவியலாய்வாகவும், கவிதையை உரைநடைப்படுத்தி எளிமையாக்கித் தரும் போக்கினதாகவும் கி.வா.ஜ.வின் சங்க இலக்கிய ஆய்வுகள் அமைகின்றன. ஒவ்வொரு பாடல் விளக்கமும் முன்னுரையோடு தொடங்குகிறது. பாடலின் மொத்தப் பொருண்மை 'விரிவுரையாகிக் கட்டுரை வடிவம் கொள்கின்றது. இறுதியில் முழுப்பாடல் வருவதுடன், அதன் பொழிப்புரையும், சொற்களுக்குப் பதவுரையுமமைந்து முழுத் தெளிவுக்கு இடன் நல்குகின்றது. இதனால், முழுப்பார்வை கிடைப்பதுடன், ஒரு நூலுக்கு ஒரு பாடல் அல்லது ஒரு சில பாடல் பதமாக அமைந்து பிற பாடல்களையும் கற்க, கற்றறியத் தூண்டுதலாகிறது. அகப்பாடலாயின், இடம்பெறும் உள்ளுறை பற்றிய விளக்கமும் இணைகின்றது.

ஐங்குறுநூற்றின் (தாமரைப் பொய்கை) குறிஞ்சிப்பகுதியில் உள்ள அன்னாய் வாழிப்பத்தின் 8-வது பாடல் விளக்கத்தில் உள்ளுறை சுட்டப்படுவது இங்கு எடுத்து மொழியத்தக்கது.

> இந்தப் பாட்டில், 'கானவர் கிழங்கு அகழ் நெடுங்குழி மல்க வேங்கைப் பொன்மலி புதுவீத் தாகம்' என்பது உள்ளுறை உவமம். இதற்குத் தலைவனுடைய இயல்பை விளக்கும் உட்கருத்தாகிய உள்ளுறை ஒன்று உண்டு. கிழங்கு கானவருக்குப் பயன்பட்டது. ஆனால் தரையில் குழி அமைந்துவிட்டது. அந்தக் குழி குழியாகவே இராமல்

**மலர் அதை நிரப்பியது. அதுபோலத் தலைவன் பலருக்கு உபகாரம் புரிபவன். அதனால் அவனுக்குப் பொருட் குறைவு நேர்வது இயல்பே. ஆனால் அந்தக் குறைவு தோன்றாதபடி அவனுக்குப் புகழ் வந்து நிரம்பும் ('மணிநிற மால் வரை' - தாமரைப் பொய்கை, சங்க நூற் காட்சிகள், தொகுதி - 1, ப. 242).**

உள்ளுறை கூறும் இவ் ஆழ் ஆய்வுப்போக்குப் போன்றே, அடிக்குறிப்புத் தரல், பாடம் காணல் போன்றனவும் அமைவது குறிப்பிடத்தக்கது. கட்டுரையின் ஓட்டத்துக்குத் தடை யேற்படாவண்ணமும், பிறிது மொழிதலாக அகன்றுவிடாமலும் சில கருத்துகள் கூறலின் தேவை அடிக்குறிப்பால் நிறைவுறு கின்றது. பிற இலக்கிய மேற்கோள் ஒப்புமைக் கருத்தாக அடிக்குறிப்பில் வருகிறது.

**மாதவர் நோன்பும் மடவார் கற்பும்**
**காவலன் காவல் இன்றெனில் இன்றால்**
(மணிமேகலை 22. 208-9)

என ஐங்குறுநூறு பற்றிய தாமரைப் பொய்கை நூலில் (சங்க நூற்காட்சிகள், பகுதி - 1, ப. 205) அடிக்குறிப்பில் சுட்டுகின்றார். இலக்கணக் குறிப்பாக அடிக்குறிப்பு வருவதும் உண்டு. உரையாசிரியர் வழி விளக்கம் தரற்காகக் கலித்தொகை பற்றிய 'பிடியும் களிறும், நூலில் (மேற்படி, ப. 365) அமைகின்றது. சான்று,

**(i) உம்மீற்று வினையெச்சம் விரைவு தோன்ற நின்றது**
- நச்சினார்க்கினியர்

**(ii) நனவினாம் புணர்ச்சி, கனவினாம் புணர்ச்சி யென ஆம் என்பனவற்றைக் கூட்டுக** - நச்சினார்க்கினியர்

மேலும், கலையார்வம் உடையவராகக் கி.வா.ஜ. அமைவதால் கலைச்செய்தியும் இவ்வாறு அடிக்குறிப்பில் இணைவது காணப் படுகிறது. (மேற்படி, ப. 302):

**சாந்தோக்கிய உபநிஷத்தில் தேவியார் ஆடலாசிரியனா யிருந்து தாளம் தட்டப் பரமசிவன் நிருத்தம் செய்தா னென்று கூறியிருத்தல் காண்க** - பரத சேனாபதீயம்

**ஓங்கு புகழ் ஈசன் உயர்விதமாய்க் கொண்டாடப்**
**பாங்கின் இசை நாரதனார் பாடுதலும் - பூங்குழலாள்**
**பாணி இயற்றினாள் என்றான் பனிவரையில்**
**வீணை இயற்றிய வேந்து** - சுத்தானந்தப் பிரகாசம்

கி.வா.ஜ. அவர்களின் பன்னூல் அறிவும், பல்துறை ஞானமும் இக்குறிப்புகள் வழிப் புலனாகும்.

பாடம் காணல் என்பது பரிபாடல் பற்றிய 'தமிழ் வையை' நூலில் அமைகின்றது. ஐயமேற்பட்ட இடத்தும், விடுபாடுள்ள இடத்தும் இதனை அமைக்கின்றார். அவை யடக்கமாக, 'அவ்விடங்களில் இப்படித்தான் பாடம் இருக்க வேண்டும் என்று துணிவாகச் சொல்லும் தகுதி எனக்கில்லை. ஆயினும் பாட்டின் ஓட்டத்தோடு இந்த ஊகங்கள் பொருந்தி இழைகின்றன என்ற நினைவு மாத்திரம் உண்டு' என்கிறார்.

> வையையைப் பற்றிய பாட்டில் 15ஆம் அடி "கொடி சேராத் திருக்கோவை காழ்கொள" என்ற பாடத்தோடு இருப்பதை 'கொடி சோரத் திருக்கோவை காழ்கொள' என்று கொண்டிருக்கிறேன். 'ஊரூர்பு இடந்திரீஇ (39) என்பதை உரைக்கு ஏற்ப 'ஊர்பூர்பு இடந்தரீஇ' என்று மாற்றிக் கொண்டேன். 'வரையழி வாலருவி' (?) வா தாலாட்ட' (52) என்று தெளிவின்றியிருந்த அடியை 'வரையழி வாலருவி கால் தாலாட்ட' என்று ஒருவாறு ஊகித்து அமைத்திருக்கிறேன். 'இன்னிளவேனில் இதுவன்றோ வையை நின் – "(77) என்ற அடியிலுள்ள குறையை உரையின் உதவியைக் கொண்டு "இன்னிளவேனி லிதுவன்றோ வையை நின் காமம்' என நிரப்பி அமைத்திருக்கின்றேன் (முகவுரை, ப. 12)

எனக் கூறல் காணலாம்.

ஒப்பாய்வு நோக்கு, கி.வா.ஜ. அவர்களிடம் பலபோதும் அமைகின்றது. சங்க இலக்கிய ஆய்வாய் இருந்தபோதும் தமிழிலக்கியக் களனில் காலங்களூடே கருத்தொருமையும் சிந்தனைத் தொடர்ச்சியும் காணப்படுவதை அறிந்தமையால் அவற்றை அங்கங்கே பதிவு செய்தலும் ஒப்பியல் கட்டுரைகள் ஆக்குவதும் அவருக்கு இயல்பாகின்றது. 'வாழ்வரசி' ஒப்பியல் கட்டுரை பல அடங்கிய நூல் ஆகும். பன்முக நோக்கும் பல்பொருள் அறிவும் வெளிப்பட, பல நூல் மேற்கோள்கள் 'குறிஞ்சித்தேனில் அமைகின்றன. கல்லாடம் (ப. 20), சீவகசிந்தாமணி (ப. 24), நாலாயிரம் (ப. 33), கம்பன் (ப. 58), அருணகிரி நாதர் திருப்புகழ் (ப. 13), தணிகைப்புராணம் (ப. 109) என இக் களம் விரியும். சங்க நூற் காட்சிகளில் குறள் (பக். 303, 330), சிலம்பு (ப. 307), மணிமேகலை (ப. 296), பாரதி (ப. 282) ஆகிய மேற்கோள் உள.

சங்க இலக்கிய ஆய்வில், மற்றொரு சங்க இலக்கியத்தை நூல்/பாடல் - இணைத்துத் தருதல் எனும் உள் ஒப்பும் காணப் படுகிறது. அகநானூறு பற்றிய 'இன்பமலை' நூலில்,

மணிமிடற்று அந்தணன் எனும் முதற்கட்டுரையில், வேறு தொகை நூலின் கடவுள் வாழ்த்தையும் சுட்டுகின்றார்.

இறைவனுடைய தாள் நிழலிலிருந்து எல்லா உலகங்களும் உண்டாயின என்று ஐங்குறுநூற்றுக் கடவுள் வாழ்த்தில் பெருந்தேவனார் பாடியிருக்கின்றார்.

> **நீலமேனி வாலிழை பாகத்து**
> **ஒருவன் இருதாள் நிழற்கீழ்**
> **மூவகை உலகும் முகிழ்த்தன முறையே (இன்பமலை, ப.18)**

மேலும், இதே நூலில், அகநானூறு 22-ஆம் பாடலை அடியொற்றியெழுந்த 'நகைத்த தலைவி' எனும் கட்டுரையில் திருமுருகாற்றுப்படைச் செய்தியை ஒருங்கிணைக்கிறார்.

> **குறிஞ்சி நில மக்கள் பூசாரியாகிய வேலனையும் பூசாரிச்சியாகிய குடிமகளையும் கொண்டு முருகனை வழிபடுவது வழக்கம். திருமுருகாற்றுப்படையில் முருகனை ஆற்றுப்படுத்தும் நிகழ்ச்சியைப் பின்வரும் அடிகள் விரித்துரைக்கின்றன.**
>
> **மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடை (மேற்படி, பக். 110-111)**

எனத் தொடங்கிப் 17 அடிகளை மேற்கோளாக்குகிறார்.

உடன்கால இலக்கிய ஒப்புக் காட்டுவதுடன், பிற இலக்கிய ஒப்பீடு அமைப்பதும் இவராய்வில் அமைகின்றது. புறநானூறு, தேவார ஒப்பு 'மழைவேண்டாம்' எனும் கட்டுரையில் அமைகின்றது.

> **மழை இல்லாமையால் 'மழை வேண்டும்' என்று கடவுளுக்குப் பூசை போட்டார்கள். ...முருகன் திருவருள் செய்தான். மழை பெய்தது. ஆனால் அளவுக்கு மிஞ்சி விட்டது. ஆகவே 'கடவுளே எங்களுக்கு மழை போதும்...' என்று மறுபடியும் முருகனுக்குப் பூசை போட்டார்கள். மழை நின்றது.... இதைப் புறநானூறு என்ற நூலில் கபிலர் என்ற பெரும்புலவர் ஒரு பாட்டில் சொல்கிறார்.**
>
> **இதே மாதிரி வேறு ஒரு நிகழ்ச்சியைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தில் பாடுகிறார்.**
>
> **வையகம் முற்றும் மாமழை மறந்து**
> **வயலில் நீர் இலை மாநிலம் தருகோம்**
> **உய்யக் கொள்க மற்றெங்களை -என்ன**
> **ஒளிகொள் வெண்முகிலாய்ப் பரந்தெங்கும்**

*பெய்யும் மாமழைப் பெருவெள்ளம் தவிர்த்துப்*
*பெயர்த்தும் பன்னிரு வேலிகொண் டருளும்*
*செய்கை கண்டுநின் திருவடி அடைந்தேன்*
*செழும் பொழில் திருப்புன்கூர் உளானே,. . .*

*. . . முன்னே சொன்னது கொங்குநாட்டுக் கதை. அதைப் பாடியவர் கபிலர். பின்னே சொன்னது சோழநாட்டுக் கதை. அதைப் பாடியவர் சுந்தரமூர்த்தி நாயனார். (கன்னித் தமிழ், பக். 170-181).*

இதைப் போன்றே மற்றோரிடத்தில் ஐங்குறுநூற்றையும் (நெய்தல், தாய்க்குரைத்த பத்து), கம்பன் பாடலையும் இணைத்துக் காட்டுகிறார்.

*தங்கள் மனத்துக்கு விருப்பம் இல்லாத ஒன்றை விரிவாகச் சொல்லத் தோழிக்கு வாய் வரவில்லை. அதனால் 'பிறிது ஒன்று' என்று அதைக் குறித்தாள். இங்கே கம்பர் வாக்கு ஒன்று நினைவுக்கு வருகிறது. கைகேயி தசரதனிடம் இரண்டு வரங்களைக் கேட்டபோது அவன் எத்தனையோ பன்னிப்பன்னிச் சொல்லியும் அவள் தன் பிடிவாதத்தை விடவில்லை. தசரதன்.... கெஞ்சுகிறான். கண்ணே வேண்டும் என்னினும் ஈயக்கடவேன்.... மண்ணே கொள்நீ மற்றதை ஒன்றும் மற என்றான். இராமனைக் காட்டுக்குப் போகச் செய்தல் என்பதைத் தன் வாயால் சொல்ல விரும்பாத தசரதன் 'மற்றதை ஒன்றும்' என்று சுட்டுகிறார். அதுபோல இங்கே தோழி தாம் விரும்பாத நொதுமலர் வரைவைப் பிறிதொன்று என்று சுட்டினாள். . . புன்னை பொன்னிறம் விரியும் பூக்கெழு துறைவனை என்னை என்றும் யாமே, இவ்வூர் பிறிது ஒன்றாகக் கூறும் (தாமரைப் பொய்கை, சங்க நூற் காட்சிகள், தொகுதி 1, ப.222).*

'பிறிது ஒன்று' என்ற சொற்றொடர் காரணமாக ஏற்பட்ட தூண்டுதலும் 'மற்றையது ஒன்றும்' என்ற கம்பராமாயணத் தொடர் பற்றிய அனுபவ ஈடுபாடும் கி.வா.ஜ.வை இத்தகு ஒப்பீட்டு விளக்கமமைக்க இட்டுச் செல்வது தெரிகிறது.

ஒப்பாய்வில், இலக்கியக் களங்கள் தவிர, கலை, பண்பாட்டுக் களங்களும் கி.வா.ஜ.விடம் அமைந்துள்ளன. இலக்கியம், கலைக்கும் பண்பாட்டுக்கும் இடம் தருவதும், நூலாசிரியருக்கு இவை பற்றிய ஆர்வமும் அறிவும் இருப்பதும் இதற்குக் காரணமாகும். ஐங்குறுநூறு பற்றிய நூலில், வழக்கிலுள்ள 'பரிசமிடும் முறை'யை இணைக்கிறார்.

*ஒரு பெண்ணை மணம் பேசும் பொருட்டுத் தக்க பெரியோர்களை விடுக்கும்போது ஏதேனும் பரிசம்*

போடும் வழக்கம் இக்காலத்தும் பல சாதியினரிடம் இருக்கிறது. இந்தப் பரிசத்தை மணமகளுக்குப் பயன்படும் ஒரு பொருளின் பெயரைச் சொல்லி வழங்குவது வழக்கம். மணமகளின் மஞ்சட்பூச்சுக்குப் பயன்படக் கொடுத்ததாகக் கருதி 'மஞ்சட்காணி' என்று நிலத்தை வழங்குவது இன்றும் வழக்கில் இருக்கிறது (தாமரைப் பொய்கை, சங்கநூற் காட்சிகள், தொகுதி - 1, ப.225).

இதைப் போலவே, காலத்தைக் கணிக்க மக்கள் வாழ்வில் பயன் கொண்ட ஒரு வழக்கையும் சுட்டக் காணலாம். பண்பாட்டாய்வுடன், பேச்சு மொழியாய்வும் இவற்றில் உள்ளது நினைக்கத்தக்கது.

> தமிழ்நாட்டில் 'ஒரு மாமாங்கம்' என்று பேச்சு வழக்கில் பன்னிரண்டு வருஷ காலத்தைக் குறிக்கும் வழக்கம் இருக்கிறது. சில கிழவர்கள், 'நான் ஒரு மாமாங்கம் கண்டவனப்பா!' என்று தம்முடைய முதுமையை எடுத்துச் சொல்வார்கள். அது போலவே நீலகிரியில் உள்ள தொதுவர்கள் தங்கள் பிராயக் கணக்கைக் குறிஞ்சி மலரைக் கொண்டு கணக்கிடுவார்கள். குறிஞ்சி மலரும் பருவம் இத்தனை கண்டவன் என்று சொல்வார்களாம் (குறிஞ்சித்தேன், ப. 44)

எனக் குறுந்தொகை பற்றிய நூலில் கூறுகின்றார்.

கலித்தொகையின் கடவுள் வாழ்த்து, கொடுகொட்டி, பாண்டுரங்கம், காபாலம் ஆகிய ஆடல்களைச் சுட்டுகிறது. கலித்தொகை பற்றி கி.வா.ஜ. எழுதியுள்ள 'பிடியும் களிறும்' நூல் இதனை விளக்கும்போது இவ் ஆடல்கள் பற்றிய சிலப்பதிகாரச் செய்திகளையும் தக்கவாறு எடுத்து மொழிகின்றது.

> கொடுகொட்டி என்ற கூத்தைப் பற்றி வேறு நூல்களும் சொல்கின்றன. இறைவன் முப்புரங்களையும் எரித்த பொழுது ஆடியது அது என்று சிலப்பதிகாரம் சொல்கிறது. (பிடியும் களிறும், சங்கநூற் காட்சிகள் - தொகுதி 1, பக். 306-307)

எனச் சுட்டிப் பாவடிகளையும் தருகிறார் (சிலப்பதிகாரம் 6.139-43). மேலும்,

> பாண்டரங்கம் என்ற கூத்தும் தெய்வங்களுக்குரிய பதினோராடல்களில் ஒன்று. இறைவன் திரிபுர சங்காரம் செய்த பிறகு பைரவியின் வேடம் பூண்டு, பூமியைத் தேராகக் கொண்டு, நான்மறையைப் புரவியாகப் பூட்டி அவற்றை ஓட்டிய பிரமனாகிய சாரதி காண வெண்ணீற்றை அணிந்து ஆடியதென்று சிலப்பதிகாரம் கூறும்.

*தேர்முன் நின்று திசைமுகன் காண*
*பாரதி ஆடிய வியன் பாண்டரங்கமும்* (சிலப்பதிகாரம் 6. 44-46) (மேற்படி ப. 311)

இவ்வாறு பல்வகை நிலையில் ஒப்பாய்வு பரக்கின்றது.

## ஆய்வுப் புதுமை

மரபு வழியாகச் சிந்தித்து உரைகூறுவதும் விளக்குவதும் கி.வா.ஜ.விடம் அமைவது ஒரு பால் எனில், சிந்தனைப் புதுமை காட்டுவது மறுபால் அமையும். ஐங்குறுநூற்று மருதத்தின் முதற்பத்தாக அமையும் வேட்கைப்பத்து, யாய், யாம் என இருவரின் விருப்பை உணர்த்துவதாக அமையும், 'என வேட்டோளே யாயே' எனவும் 'யாமே - என வேட்டோமே' எனவும் அவை காணப்படும். இவற்றுள் யாய் என்பது தாயின் விருப்பத்தை உணர்த்துவதாகக் கொள்வது மரபு. அதாவது "ஆதன் வாழ்க, அவினி வாழ்க" எனத் தாய் வேண்டினாள் என்பது. ஆனால், கி.வா.ஜ., இதனைத் தலைவி வேண்டினாள் எனப் புதுமையாக அணுகுகிறார். 'தாய்மையியல்பினளாகிய தலைவி' என மரபைப் புதுக்குகிறார். யாம் என்பதில் தோழியராகிய தம்மை உட்படுத்தக் காணலாம். இது தோழி கூற்றுப் போலும்.

> **ஆதன் வாழ்க, அவினி வாழ்க. அவ்வரசன் பகைவர்கள் தாழ்ந்து போவார்களாக. அவனுக்கு ஆண்டுகள் பல வளர்க' என்று தாய்த் தன்மையை உடைய இவள் வேண்டிக் கொண்டாள். நானும் என்னைச் சார்ந்த சிலரும் 'விரிந்த பொய்கையிலே அரும்பிய தாமரையையுடைய தண்ணிய நீர்த் துறையையுடைய ஊர்க்குத் தலைவனாகிய இவள் காதலன் இவளை மணந்து கொள்வானாக, எம் தந்தையும் இவளை அவனுக்கு மணம் செய்து கொடுப்பானாக' என்று வேண்டிக் கொண்டோம்** (தாமரைப் பொய்கை, சங்கநூற் காட்சிகள் - தொகுதி 1, ப. 207).

இக்கருத்தை, கதைச் சுவையுடன் 'எல்லாம் தமிழ்' நூலில் 'தாயின் பிரார்த்தனை' என்ற கட்டுரையில் கி.வா.ஜ. அமைக்கக் காணலாம். புதிய கருத்தில் பிறந்த ஆர்வமே இக்கருத்து வலியுறுத்தலுக்கு இடம் தந்துள்ளது போலும். கூறியது கூறலாக அன்றிச் சுவைபட மொழிவதாக இவ்ஆய்வு வெளிப்படுகின்றது. நாடகக் காட்சியாகப் புலப்படுகின்றது.

> **மாலைக் காலம். இல்லத் தலைவியாகிய மடமங்கை விளக்கேற்றி வைத்தாள். தெய்வத்தை வணங்கித் தொழுதாள். வாழ்த்தினாள். தோழிமார் இருவரும் தூரத்தில் இருந்தபடியே அவளைக் கவனித்தார்கள். . .**

*அவள் வேண்டுகோள் என்ன என்று அவர்கள் கூர்ந்து கேட்டார்கள். 'கடவுளே என் தலைவன் மீண்டும் இங்கே வந்துவிட வேண்டும்' என்றுதான் அவள் வேண்டுவா ளென்பது அவர்கள் எண்ணம். . .*

*'கடவுளே, நம்முடைய அரசனாகிய ஆதன் வாழ்க! அவினி வாழ்க! உலகத்தில் பசி இல்லையாகுக! நோய்கள் யாவும் ஒழிய வேண்டும்' என்று அவள் செய்துகொள்ளும் வேண்டுகோள் அவர்கள் காதில்இன்னிசைபோல் வந்து ஒலித்தது.*

*அவர்கள் வியப்பு மயமாகவே ஆகிவிட்டனர். 'இவள் நமக்குத் தாய் என்று இருந்தோம். நம் அரசனுக்குத் தாய் இவள்; நாட்டுக்குத் தாய்; உலகுயிர்க்கெல்லாமே தாய். . .* (எல்லாம் தமிழ், பக். 62-63)

என அப்பகுதி அமையும்.

நடை

கி.வா.ஜ. நடை, அவர் படைப்புகளுக்குச் சுவை சேர்ப்பது. பேசுவது போல் எழுதுவது நல்லது என்பது அவரது எண்ணம். இதனால் நேரில் கேட்பவரோடுள்ளது போல் வாசிப்பவரோடு நெருக்கம் ஏற்பட்டு கருத்துகள் எளிதாகவும் தெளிவாகவும் சென்று சேர்கின்றன. இன்னும் ஒரு படி நெருங்கிப் பேச்சு வழக்கைப் பயன்கொள்வதும் இவரிடம் அங்கங்குக் காணப்படுகிறது. சான்று:

*அட பாவி நெஞ்சே! உனக்கு இன்னுமா சபலம். . . . . . அந்தக் கண்ணராவிக் காட்சியை என்னவென்று சொல்வது* (மனைவிளக்கு, ப. 36).

இரட்டைக்கிளவி, அடுக்குத்தொடர், ஒலிக்குறிப்புச் சொற் பயன்பாடும் இவரிடம் உண்டு.

*அவை தளதளவென்று தழைத்திருக்கவில்லை* (மனைவிளக்கு, ப. 37).

*வேலால் குத்தியபோது குத்திய புண்ணிலிருந்து குபீர்குபீர் என்று குருதி கொப்புளித்தது. வாளால் வெட்டியபோது சலார் சலார் என்று இரத்தத் துளி நெடுந்தூரம் தெறித்தது* (புரவலர் கோமான், புதுவெள்ளம், ப. 78).

மேலும், மரபுத் தொடர்ப் பயன்பாடும் அமைவது இணைந்து சுவை நல்குகின்றது.

**ஓண்ணே ஒண்ணு கண்ணே கண்ணு என்று பொத்திப் பொத்திக் காப்பாற்றினேன்... விசுக்குவிசுக்கென்று அவன் நடக்கும்போது நான் பார்த்து மகிழ்ந்து போவேனே** (கன்னித்தமிழ், ப. 169).

**என் மனத்துக்குள்ளே கோயில் கொண்டிருக்கிறாள் (தாமரைப்பொய்கை, சங்கநூற் காட்சிகள் – தொகுதி 1, ப. 251)**

என்பன போலச் சான்று அமையும்.

மரபுத் தொடர்கள் போலவே பழமொழிகளும் பரவலாகக் கி.வா.ஜ. உரைநடையில் இடம்பெறுகின்றன. பழமொழி எனச் சுட்டியும் பலபோதும் ஆட்சியை அமைப்பார்.

**கொண்டவன் தூற்றினால் கூறையும் தூற்றும் என்னும் பழமொழியின் வண்மை எனக்கு இப்போது நன்றாக விளங்குகிறது** (வாழ்வரசி, ப. 21).

**ருசி கண்ட பூனை உறியை எட்டிஎட்டித் தாவும்** (எல்லாம் தமிழ், ப. 67).

**சண்டைக்கு எடுபிடி மாடுபிடி என்ற பழமொழி கூட இந்த அறத்தைச் சுட்டிக் காட்டுகிறது.** (அறப்போர், ப. 25).

**ஆற்று மணலை எண்ணினாலும் எண்ணலாம் அர்ஜுனன் மனைவிகளை எண்ண முடியாது என்று இக்காலத்தில் ஒரு பழமொழி வழங்குகிறது** (?)

என்பன சில சான்றுகள்.

இன்னும் பல்வகையான நடையியல் உத்திகளைக் கி.வா.ஜ.விடம் காண முடிகிறது. ஆசிரியர் குரல் வெளிப்பட, வினாத் தொடரும் வியப்புத் தொடரும் வருவது சுட்டற்குரியது.

**. . . அவருடைய திருமேனியைப் பார்க்க வேண்டாமா? சற்று அதைக் கவனிப்போம். அது என்ன? அவருடைய திருக்கழுத்தில் கன்னங்கறேலென்றிருக்கிறதே. (அருந்தவத்தோன், அறப்போர், ப. 3)**

எனச் சான்று பல்கும். வடமொழி அறிவுமுடையவராகையால் இவர் மொழிநடையில், சமஸ்கிருத மேற்கோளும் சொற் கலப்பும் சிலபோது விளக்கமும் காணப்படுகின்றன.

**பாலை நிலத்துப் பிரஜையாகிய பருந்து ஒன்று வேப்ப மரத்தின்மேல் இருக்கிறது** (மனைவிளக்கு, ப. 37).

**குறைந்த மழையை அநாவிருஷ்டி என்றும் மிகுபெயலை அதிவிருஷ்டி என்றும் சொல்வார்கள்(கன்னித்தமிழ், ப. 178)**

கட்டுரைத் தலைப்பிலேயே வடமொழி அமைவதைக் 'குறிஞ்சிக் கிழவன்' நூலில் காணலாம்.

**இந்த நாட்டினர் உயர்ந்த கடவுளை உயர்ந்த இடத்தில் வைத்துப் போற்ற வேண்டுமென்று எண்ணினார்கள். கொஞ்சம் மரியாதை உள்ளவர்கள் நம் வீட்டுக்கு வந்தால் அவர்களை நாம் உயர்ந்த ஆசனம் போட்டு உட்காரச் செய்கிறோம். 'உச்சஸ்தானேஷு பூஜ்யந்தே' என்று வடமொழியில் சொல்வார்கள்.** (உச்சஸ்தானேஷு பூஜ்யந்தே, குறிஞ்சிக்கிழவன், ப. 43)

கி.வா.ஜ.வின் சங்க இலக்கிய ஆய்வுக்கு எளிமையும் தெளிவும் கொடுத்ததும், சுவை சேர்த்ததுமாகிய மற்றொரு நடையியல் உத்தி, உரையாடல் எனும் நாடக உத்தியாகும். காட்சிகளாகக் கவிதையை வகுத்து, உணர்வுகளை உரையாடலாக வடித்து, செறிவான பாடல் அடிகளை அரங்க உணர்வுடன் அமைக்கிறார். அகவல் மகள் பற்றிய குறுந்தொகைக் காட்சி சான்று.

**குறத்தி வந்துவிட்டாள். நரைத்த மயிர். பழுத்த உடல். சங்கு மணி மாலை அணிந்த கழுத்து ஆகியவற்றோடு அவள் குறிபார்த்துச் சொல்வதற்காக வந்திருக்கிறாள். அவள் கையில் ஒரு முறமும் ஒரு கோலும் உள்ளன. அவளோடு தலைவியைப் பெற்ற தாயும் வளர்த்த செவிலியும் பேசுகிறார்கள்.**

**செவிலி: ஏ! குறத்தி, நீ குறிபார்த்துச் சொல்வாயா?**

**குறத்தி: அதுதானே என் தொழில்!**

**செவிலி: என்ன என்ன குறிபார்த்துச் சொல்வாய்?**

**குறத்தி: நோய் நொடிக்குக் காரணத்தைச் சொல்வேன். தெய்வத்துக்கு அபசாரம் செய்து அதனால் கெடுதல் வந்திருக்கலாம். அதை ஆராய்ந்து எந்தத் தெய்வக் குற்றமென்று சொல்வேன். . .**

(குறிஞ்சித்தேன், சங்கநூற் காட்சிகள், தொகுதி 1, ப. 170)

வீட்டிற்கு வெளியே இக்காட்சி அமைய, தோழியும் தலைவியும் இதனைக் கேட்டு உரையாடும் காட்சி மாற்றத்துடன் வீட்டிற்கு உள்ளுள்ள காட்சியும், மீண்டும் கதைத் தொடர்ச்சியுடன் வெளியேயுள்ள காட்சியுமாக இதனை அமைக்கிறார் கி.வா.ஜ.

**தோழியும் தலைவியும் உள்ளே மிக மெல்லிய குரலில் பேசிக் கொள்கிறார்கள்.**

தலைவி: கேட்டாயா உன் தாய் சொல்வதை? எனக்கு ஏதோ நோய் வந்துவிட்டதாமே.

தோழி: உன் நோய் இன்னதென்று அவர்கள் தெரிந்து கொள்ள இயலாமல் தடுமாறுகிறார்கள்.

வெளியே நற்றாய் குறத்தியிடம் பேசுகிறாள்.

நற்றாய்: 'இப்போது நீ எந்த மாதிரி குறி பார்க்கப் போகிறாய்?

குறத்தி: கட்டுப் பார்க்கலாம் என்று நினைக்கிறேன் (மேற்படி. ப. 171)

சங்கத் தமிழைக் கதையாக, நாடகமாக, காவியமாகப் பிறர் ஆக்குவதற்கு ஒரு முன்னோட்டம் இங்குத் தென்படுகிறது.

வருணித்தல் என்பது கி.வா.ஜ.விடம் அமையும் மற்றொரு நடையியல் உத்தியாகும். ஓவியம் போன்ற விளக்கம் இதனால் பாடலுக்குக் கிடைக்கிறது. அரங்கமாக அமைத்து உரையாடலாகத் தரும் முன்னணி போல, இங்குப் பின்புலம் சித்திரமாகத் தீட்டப்படுகிறது. நிலை வருணனையும் இயங்கு வருணனையும் இவரிடம் உள. ஒரு சிறு அடை, அல்லது தொடர், அல்லது பாடல் வரி இவரிடம் பல பக்கமான வருணனையாக விரியும். சான்றாக, அகநானூறு 2-ஆம் பாடலாக அமையும் கபிலரின் குறிஞ்சித்திணைப்பாடல் இன்பமலை எனக் கட்டுரையாவதைச் சுட்டலாம் (இன்பமலை, ப. 22). பாடலின் ஏழு அடிகள், சுமார் 10 வரிப் பொழிப்புரை பெற, வருணனை, ஐம்புலனறி வருணனையாக 4 பக்கம் விரிந்து வளர்ந்துள்ளது. சான்றுக்காக அதன் சில பகுதிகள்; சுற்றுச் சூழல் வருணனை முதலில் வருகிறது:

> எங்கே பார்த்தாலும் காடு; பூ மரங்கள்; பழ மரங்கள், வானை முட்டி வளர்ந்த மரங்கள் அடத்தியாக நின்றன. மழைக்கு அங்கே பஞ்சம் ஏது? மலைச் சாரலில் அருவி ஒல்லெனப் பாய்ந்து வருகிறது. குறிஞ்சி நிலத்தின் முழு அழகும் அங்கே களி நடம் புரிகின்றது! எத்தனை வகையான மரங்கள்! மலையருவி நீரின் ஊட்டத்தால் மதமதவென்று வளர்ந்திருக்கும் வாழை மரங்கள் ஒரு சார். வாழையின் இலையைப் பார்த்தாலே அதன் வளப்பம் தெரியும். மிக மிக நீளம். மிக மிக அகலம். கொழுமைக்கு அடையாளமென்று அந்த இலையைச் சொல்லலாம். மலைச் சாரலில் வளரும் அத்தனை மரஞ்செடி கொடிகளின் வளத்தை எழுதிய ஏடு என்று கூட அதைச் சொல்லலாம். . . (இன்பமலை. ப. 22)

இந்த அமைதிப் பின்புலத்தில் ஒரு விலங்கின் இயக்கம் செயல் வருணனையாக அமைவது மற்றொரு பரிமாணம் தருவதுடன், கி.வா.ஜ.வின் இத்துறையீடுபாட்டையும் அளிக்கும்.

> . . . இதோ ஒரு குரங்கு; அது ஆண்குரங்கு; கடுவன் . . . தானே பழுத்து உதிரும் வாழைக்கனியைத் தின்றது. . . வாழையின் கோள் (காய்) மிகு பெருங்குலையிலிருந்து உதிர்ந்த தீங்கனியை உண்டவுடன் அருகிலே இருந்த பலாப்பழம் அதை அழைத்தது. பலாச் சுளையையும் வயிறு நிரம்பத் தின்றது.
>
> இப்போது அதன் பசி போய்விட்டது. மிக இனிய கனிகளாதலின் அளவுக்கு மேலே தின்றுவிட்டது. அதனால் அதற்குக் கடுமையான தாகம் எடுத்தது. அங்கே பாறையிலே ஓர் ஆழமான சுனை இருந்தது. அங்கே சென்று அதன் நீரை உண்டது. அது நீரா? புளித்த தேன் அல்லவா? சுனையிலே முதிர்ந்து விளைந்த தேனைக் குடித்தது. . .
>
> வயிறு நிரம்பப் பழங்களைத் தின்று சுனையிலே தேங்கி யிருந்த தேனைக் குடித்த கடுவனுக்கு மயக்கமாக இருந்தது. கண்ணிமைகள் கனத்தன. கீழே இழுத்தன. சந்தன மரத்தை ஏறெடுத்துப் பார்த்தது குரங்கு. அதன் மேல் ஏறலாம் என்று நினைப்பதற்கு முன் கண்ணைச் சுற்றியது மயக்கம். அயலில் பல மலர்கள் உதிர்ந்து படுக்கை போட்டாற்போல் மெத் தென்று இருந்தன அல்லவா? மணமுள்ள மெத்தென்ற அந்த மலர்ப் படுக்கையில் படுத்ததுதான் தாமதம்; அப்படியே உறங்கிவிட்டது (மேற்படி, ப. 25)

கேட்போரையும், படிப்போரையும், சங்கப் பாடலை மனக் கண்ணில் ஓவியமாக்கிப் பதியவைப்பதாக இவ்வுத்தி சிறக்கிறது.

கருத்து விளக்கத்திற்காக உவமையைப் பயன் கொள்ளுதல் என்பதும் இவரது கோட்பாடாகும், எழுத்திலும் பேச்சிலும் இது அமையும். 'உவமைகளைப் பேச்சினிடையே பயன்படுத்துவது என் வழக்கமாகிவிட்டது' (குறிஞ்சிக்கிழவன், முகவுரை) என்கிறார். சங்க இலக்கியங்கள் உவமைப் பெருக்குடன் அமைவதும் இவரது இத்தோய்வுக்குக் காரண மாகலாம். தலைவியின் மனநிலையை விளக்க, அனைவரும் அறிந்த உவமைகளைப் பயன் கொள்கிறார்.

> தாய் இனிய வார்த்தைகளால் பரிவுதோன்றப் பேசவே தலைவிக்கு உள்ளம் குளிர்ந்தது. மந்திரம் போடுபவர்

**களுக்கு முன் நாகம் தலை சாய்ப்பது போலவும் வீணை வாசிப்போருக்கு முன் யானை மதம் தெளிந்து மயங்கி நிற்பது போலவும் இருந்தது தலைவியின் நிலை**
(மனைவிளக்கு - சங்கநூற் காட்சிகள் - தொகுதி 1, ப. 62)

எனச் சான்று அமையும். இவ்வொப்புமைகள் பாடல் பகுதிகளில் இல்லாதன என்பதும் நூலாசிரியர் விளக்கத்திற்காகப் படைத்தன என்பதும் சுட்டற்குரியது.

## நிறைவாக

சங்க இலக்கிய ஆய்வின் தொடக்கத்தில், தனித்தனிப் பாடல்களை அடிப்படையாக்கித் தனிக்கட்டுரைகள் எழுதி இதழ்களில் வெளிவந்து, அக்கட்டுரைகள் தொகுக்கப்பட்டு நூலாக வந்தமையே, பின்பு, ஒரே தொகை நூல் பற்றிப் பல கட்டுரைகள் இயற்றித் தனிநூலாக வெளியிட அடிப்படை யாகின்றது. 1944-இல் வந்த 'காவியமும் ஓவியமும்' சங்கப் பாடல்கள் பலவற்றைப் பற்றி அமைய, 1951-இல் வந்த 'மனை விளக்கு' நற்றிணை மட்டும் பற்றிய கட்டுரைகளால் அமைவது சான்று.

சுமார் 40 ஆண்டுக்காலமாக இச் சங்க இலக்கிய ஆய்வு நூல்கள் வெளிப்போந்தமையால், அவற்றில் மாற்றமும் வளர்ச்சியும் தெரிகின்றன. அமைப்பில் மாற்றமும், விளக்கத்தில் விரிவும் சேர்க்கையும் ஏற்பட்டுள்ளன. 'வழிகாட்டி', 'திருமுருகாற்றுப்படை விளக்கம்' என முழுமாற்றமும் வளர்ச்சியும் கொண்டுள்ளமை குறிப்பிடற்குரியது. எட்டுத் தொகை பற்றிய நூல்கள் பலவும் இவர் காலத்திலேயே மறுபதிப்புப் பெற்றபோது, முதல் பதிப்பினும் பிந்தைய பதிப்புகள் கூடுதல் எண்ணிக்கைக் கட்டுரைகள் கொண்டு வளர்ச்சி காட்டின. 'குறிஞ்சித் தேன்' முதற்பதிப்பில் ஏழு கட்டுரையுடனும், இரண்டாம் பதிப்பில் கூடுதலாக மூன்று கட்டுரைச் சேர்க்கையால் பத்துக் கட்டுரையுடனும் அமைந்துள்ளது சான்றாகச் சுட்டத்தக்கது.

பன்முக நோக்குடன் நூல் பல படைத்துள்ள அறிஞர் கி.வா.ஜ., சங்க இலக்கிய ஆய்வுக்கும் சிறந்த பங்களிப்புச் செய்துள்ளமை பாராட்டுக்குரியது.

### பயன் நூல்கள்

1. **இன்பமலை**, கி.வா. ஜகந்நாதன், அமுத நிலையம் லிமிடெட், சென்னை, இரண்டாம் பதி. பிப்ரவரி, 1959.

2. **எல்லாம் தமிழ்**, கி.வா. ஜகந்நாதன், அமுத நிலையம் பிரைவேட் லிமிடெட், எட்டாம் பதி. ஜூன், 1959.

3. **கன்னித் தமிழ்**, கி.வா. ஜகந்நாதன், அமுத நிலையம் லிமிடெட், மறுபதி. 1994.

4. **காவியமும் ஓவியமும்**, கி.வா. ஜகந்நாதன், கலைமகள் காரியாலயம், மயிலாப்பூர், டிசம்பர், 1944.

5. **குமண வள்ளல்**, கி.வா. ஜகந்நாதன், மாதவி பதிப்பகம், சென்னை, மறுபதி, 2006.

6. **கோவூர் கிழார்**, கி.வா. ஜகந்நாதன், பகவதி பதிப்பகம், சென்னை, மறுபதி. 2000.

7. ***சங்கநூற் காட்சிகள் – தொகுதி 1**, கி.வா. ஜகந்நாதன், அமுத நிலையம் லிமிடெட், சென்னை, 4ஆம் பதிப்பு,. 2001.

8. **தமிழ் நூல் அறிமுகம்**, கி.வா. ஜகந்நாதன், அமுத நிலையம் லிமிடெட், சென்னை, 1977.

9. **தமிழ் வையை**, கி.வா. ஜகந்நாதன், அமுத நிலையம் லிமிடெட், சென்னை, மூன்றாம் பதிப்பு. 1980.

10. திருமுருகாற்றுப்படை விளக்கம், கி.வா. ஜகந்நாதன், அமுத நிலையம் லிமிடெட், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1981.

11. **புதுவெள்ளம்**, கி.வா. ஜகந்நாதன், அமுத நிலையம் லிமிடெட், டிசம்பர். 1952.

12. **வழிகாட்டி**, கி.வா. ஜகந்நாதன், அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை, 1947.

13. **வாழ்வரசி**, கி.வா. ஜகந்நாதன், அமுத நிலையம் பிரைவேட் லிமிடெட், சென்னை, நவம்பர், 1956.

* இதிலடங்கிய நூல்கள் - 1. மனைவிளக்கு, 2. குறிஞ்சித்தேன், 3. தாமரைப் பொய்கை, 4. பிடியும் களிறும்

# நாட்டுப்புறவியல் ஆய்வுகள்

தி. உமாதேவி

கி.வா. ஜகந்நாதன் சிறந்த சொற்பொழிவாளர். பக்தி இலக்கியங்களையும், இலக்கணத்தையும் ஆய்வு செய்து எளிமையான முறையில் நூல்களாக வெளியிட்டவர். இவர் நாட்டுப்புறவியல் தொடர்பாகப் பல நூல்களையும் வெளி யிட்டுள்ளார். இக்கட்டுரை கி.வா. ஜகந்நாதன் நாட்டுப்புறவியல் துறைக்கு வழங்கியுள்ள பங்களிப்பையும் ஆய்வுகளையும் விளக்குகிறது.

## நாட்டுப்புறப்பாடல்கள் சேகரிப்பில் கி.வா.ஜகந்நாதனின் ஈடுபாடு

ஒரு துறையில் ஈடுபாடு இருந்த போதும் அத்துறை சார்ந்த அறிஞர்களின் தூண்டுதலால் அந்த ஈடுபாடு சிறப்புப் பெறுகிறது. அந்த அடிப்படையில் கி.வா.ஜ. விற்கு நாட்டுப்புறப் பாடல்களில் ஆர்வம் இருந்த போதிலும் அதனை ஈடுபாடாக மாற்றிய பெருமை பஞ்சாப்பைச் சேர்ந்த ஸ்ரீதேவேந்திர ஸத்யார்த்தியையே சாரும். ஸத்யார்த்தி இந்தியா முழுவதும் சுற்றித் திரிந்து நாட்டுப்புறப் பாடல்களைத் தொகுப்பதையே வாழ்க்கைத் தொழிலாகக் கொண்டவர். இவர் 1940இல் தமிழ் நாட்டிற்கு வந்து தங்கி, நாட்டுப்புறப் பாடல்களைச் சேகரித்தார். சென்னையில் கி.வா.ஜ.விற்கு ஸத்யார்த்தியைச் சந்தித்துப் பழகும் வாய்ப்பு ஏற்பட்டது. அவரைச் சந்திக்கும் முன்பே நாட்டுப்புறப் பாடல்கள் சேகரிப்பில் சற்று ஈடுபாடு இருந்த போதும் அவரின் ஊக்கத்தினால், தமிழ் நாடோடிப் பாடல்களைத் தொகுக்க வேண்டும் என்ற ஆர்வம் கி.வா.ஜ.விற்கு மிகுதியாயிற்று. அன்று முதல் தாம் செல்லும் இடமெல்லாம் பலரிடமும், நண்பர்கள் வாயிலாகவும், நாட்டுப்புறப் பாடல்களைத் தொகுக்கத் தொடங்கியதாகக் கி.வா.ஜ. குறிப்பிடுகிறார். (கி.வா.ஜ., 2002 : 5)

## சொல்லாட்சி

நாட்டுப்புறப் பாடல்கள், நாட்டார் பாடல்கள், கிராமியப் பாடல்கள் போன்ற சொற்கள் நாட்டுப்புறவியல் துறையில் தற்போது பயன்படுத்தப்பட்டு வருகின்றன. ஆனால் கி.வா.ஜ. நாடோடிப் பாடல்கள், பாமரர் பாடல்கள், கட்டில்லாக் கவிதை, மலையருவி, காட்டு மலர்கள், நாட்டுப் பாடல்கள் போன்ற சொற்களைப் பயன்படுத்துகிறார். ஒரு பகுதியில் வழங்கும் பாடல்கள் வெவ்வேறு இடங்களில் அந்தந்த இடத்துக்கேற்ற வகையில் வழங்குகின்றன. நாடு முழுவதும் சென்று வழங்குவதால் இவற்றை நாடோடிப் பாடல்கள் என்றும் பழமொழிகள், விடுகதைகள் போன்றவற்றை நாடோடி இலக்கியங்கள் என்றும் வழங்கலாம் (கி.வா.ஜ. 1975 : 16).

## நாட்டுப்புற ஆய்வு நூல்கள்

நாட்டுப்புறவியல் துறை ஆரம்பமான காலத்தில் நாட்டுப்புறப் பாடல்கள் மட்டுமே சேகரிக்கப்பட்டன. ஆனால் கி.வா.ஜ. அந்தக் காலத்திலே பாடல்களை மட்டுமின்றிப் பழமொழிகள், விடுகதைகள் ஆகியவற்றையும் சேகரித்தார்.

அவர் வெளியிட்டுள்ள நூல்கள் பின்வருமாறு :

1. மலையருவி
2. நாடோடி இலக்கியம்
3. கஞ்சியிலும் இன்பம்
4. தெய்வப் பாடல்கள்
5. ஏற்றப் பாடல்களும் தொழிற் பாடல்களும்
6. தமிழ் நாட்டுப் பழமொழிகள்
7. பல்வகை விளையாடல்கள்
8. விடுகதைகள்
9. குழந்தை உலகம்
10. மச்சு வீடு
11. யார் பொறுப்பு
12. திருமணப் பாடல்கள்
13. சீன நாடோடிக் கதைகள்
14. விடைகள் ஆயிரம்

இந்நூல்கள் தவிர்த்து இரண்டு கட்டுரைகளையும் கலைக் களஞ்சியத்தில் படைத்துள்ளார்.

1. அம்மானை
2. ஓடப்பாட்டு

இனி நூல்கள் தொடர்பான செய்திகள் விளக்கப்படுகின்றன. இங்கு ஆய்விற்கு முதல் ஏழு நூல்கள் இரண்டு கட்டுரைகள் மட்டுமே எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. மற்ற நூல்கள் ஆய்வாளருக்குக் கிடைக்கப் பெறவில்லை.

## மலையருவி

நாட்டுப்புறப் பாடல்களை மட்டுமே மலையருவி நூல் ஆய்வு செய்கிறது. இந்நூலின் நாட்டுப்புறப் பாடல்களைச் சென்னை மாகாணத்தின் ஆட்சியராக இருந்த பர்ஸீமாக்வீன் என்னும் ஆங்கிலேயர் சேகரித்தார். இவர் தமிழ் நாடோடிப் பாடல்களை மலைப்பகுதி தோட்டத் தொழிலாளிகளிடமும், கிறித்தவர்களிடத்தும் ஒரு வரிக்கு இத்தனை அணா என்றும் பணம் கொடுத்துச் சேகரித்துள்ளார். பின்னர் அவற்றில் பலவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார்.

அப்பாடல்களை வகைப்படுத்திச் சிறந்த முன்னுரையுடன் மலையருவி என்று உருவக அடிப்படையில் பெயரிட்டுள்ளார். இந்நூல் மூன்று இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. முதல் இயல் நாட்டுப்புறப் பாடல்களின் தோற்றம் பற்றியும், செவ்வியல் இலக்கியங்களோடு ஒப்பிட்டு அவற்றின் சிறப்பியல்புகளை விளக்குகிறது.

இரண்டாம் இயல், நாட்டுப்புறப் பாடல்களின் பொருளடக்கத்தை விளக்கும் தன்மையில் அமைகின்றது. மூன்றாம் இயல், நாட்டுப்புற மக்களிடையே காணப்படும் வழக்குச் சொற்கள் பற்றியும், அவர்கள் பயன்படுத்தும் பொருள்களின் பெயர்கள் பற்றியும், பழக்க வழக்கங்களைப் பற்றியும் விளக்குகிறது. பின்னிணைப்பாக எல்லாப் பாடல்களும் கொடுக்கப்பட்டுள்ளன.

## நாடோடிப் பாடல்களின் தோற்றம்

இதில் நாடோடிப் பாடல்கள் எவ்வாறு எழுத்திலக்கியங்கள் தோன்றுவதற்கு அடிப்படையாக இருந்தன என்பது பற்றி விளக்குகிறார். முதலில் நாடோடிப் பாடல்கள் உருவான முறை விளக்கப்படுகிறது.

மனிதன் தன் கருத்தை வெளியிடப் பல்வேறு ஒலிகளைப் பயன்படுத்தினான். ஒலிகளை ஒழுங்குபடுத்தி மொழியை உருவாக்கினான். மொழியினால் ஆன பாடலை ஏதோ ஒரு வகையில் இசையோடு பாடினார்கள். பின்னர் அப்பாடல்களுக்கு உருவம் கொடுக்க அவை உணர்வு மிகுந்த வாய்மொழிப் பாடல்களாக மாறின. பின்னர் அவை வாய்மொழியாக ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குப் பரவத் தொடங்கிற்று. இவ்வாறு உருவாகிய நாட்டுப்புறப் பாடல்களில் நாகரிகத்தைக் கற்றுக் கொண்ட மனிதன் பல வரையறைகளைப் புகுத்தினான். புலவர்கள் பலர் தோன்றித் தம்முடைய ஆற்றலைப் புகுத்தினார்கள். இவ்வாறு நாட்டுப்புறப் பாடல்களிலிருந்து இலக்கியம் உருவாயிற்று. (ஜகந்நாதன், கி.வா. 1975:9). இக்கருத்தினை உறுதிப்படுத்தும் நோக்கில் இலக்கியங்களிலும் புலவர்களிடமும் நாட்டுப்புற இலக்கியங்கள் செல்வாக்குப் பெற்றிருப்பதை சான்றுகளுடன் எடுத்துக்காட்டுகிறார்.

## இலக்கியங்களும் நாட்டுப்புறப்பாடல்களும்

இப்பகுதியில் தொல்காப்பியர் குறிப்பிடும் பண்ணத்தியையும், சிலப்பதிகாரம் குறிப்பிடும் அம்மானை வரிப்பாடல்களையும், சங்க இலக்கியங்களிலும் பிரபந்தத்திலும் நாட்டுப்புறப் பாடல்களின் தாக்கம் இருப்பதை எடுத்துக் காட்டுகிறார். முதலில் தொல்காப்பியர் குறிப்பிடும் நாட்டுப்புற இலக்கியங்கள் எவை எவை என்ற கருத்து கூறப்படுகிறது.

**நொடியோடு புணர்ந்த பிசியினான**
**ஏது நுதலிய முதுமொழியான**
**மறைமொழி கிளந்த மந்திரத்தான**
**கூற்றிடை வைத்த குறிப்பினான** (தொல். செய்யு.164)

விடுகதை, பழமொழி, மந்திரம், குறிப்பு மொழி நான்கும் சுட்டப்படுகின்றன. இதனை விளக்கும் பேராசிரியர் இவை எழுதப் பெறாமல் கேட்டுணர்ந்து ஒருவர்பால் மற்றொருவருக்குச் செவி வழியாக வருவன என்கிறார்.

**பொருள் மரபில்லாப் பொய்ம் மொழியானும்**
**பொருளொடு புணர்ந்த நகைமொழியானும்**
(தொல். செய்யு. 173)

என்ற வரிகள் நாடோடிக் கதைகளை பற்றியன. இது மட்டுமின்றி தொல்காப்பியர் குறிப்பிடும் பண்ணத்தி என்பது நாடோடி இலக்கியத்தைக் குறிக்கின்றது என்று கி.வா.ஜ. தனது மலையருவி நூலில் குறிப்பிடுகிறார்.

பாட்டிடைக் கலந்த பொருளவாகிப்
பாட்டின் இயல பண்ணத்தி இயல்பே

பண்ணத்தி என்பது பிசியோடு கூட ஒத்துவரும். இதற்குச் சான்றாக, வஞ்சிப்பாட்டு, மோதிரப்பாட்டு போன்றவையும் எடுத்துக்காட்டப்படுகின்றன. இதனடிப்படையில் தொல்காப்பியர் காலத்தில் வாய்மொழியாக வழங்கும் இலக்கியங்கள் புலவர் களின் கவனத்துக்குரியனவாக இருந்தனவென்றும் நாடோடிப் பாடல்களையே பண்ணத்தியென்று தொல்காப்பியர் வழங்கினார் என்ற கருத்தும் வலியுறுத்தப்படுகிறது.

தமிழ்நாட்டுப் பெண்கள் அம்மானைக் காய்களை வைத்து ஆடும்போது பாடப்படும் பாடல்கள் சிலப்பதிகாரத்தில் கூறப் படும் அம்மானைவரிப் பாடலோடு ஒத்துக் காணப்படுகின்றன. அது மட்டுமின்றிச் சிலப்பதிகாரம் கூறும் வேட்டுவவரி, ஆய்ச்சியர் குரவை, ஊசல் வரி போன்றவை நாடோடி இலக்கியத்தில் காணப்படுகின்றன. சங்க இலக்கியங்களைக் குறிப்பிடும் சில நிகழ்வுகளின் போது பாடப்படும் பாடல்கள் நாடோடிப் பாடல்களின் தன்மையினை ஒத்துக் காணப்படுவதாகக் குறிப்பிடுகிறார். சான்றாக, சில இங்குக் கொடுக்கப்படுகின்றன.

குறிஞ்சி நிலத்தில் நிகழும் வேலன் வெறியாடலின் போது பாடப்படும் பாடல்கள் நாடோடி இலக்கியமாகும். குற மகளிர் தினைக் கொல்லையில் கிளிகளைக் கடிதற்காகப் பாடப்படும் பாடல்கள் ஆலோலம் எனப்படும். நாட்டுப்புறப் பாடல் வகையைச் சார்ந்தவை. குறமகளிர் தினையைக் குத்தும் போது பாடும் வள்ளைப் பாட்டு, சுண்ணாம்பு இடிக்கும்போது பாடப்படும் பாட்டுடன் ஒத்துக் காணப்படுகிறது. அடுத்ததாகப் பாலை நிலத்தில் கொற்றவையை வழிபடப் பாடும் வேட்டுவ வரியும், முல்லை நிலத்தில் கண்ணனைப் பற்றிப் பாடப்படும் ஆய்ச்சியர் பாடலும் மருதநிலத்தில் மகளிர் தாம் கூடிக் கை கோர்த்து ஆடும் துணங்கைக் கூத்தின்போது பாடப்படும் பாடல்களும் நாட்டுப்புறப்பாடல்களின் அமைப்பைக் கொண்டுள்ளன. நெய்தல் நிலத்தில் கேட்கும் ஒலியைப் பற்றி மதுரைக் காஞ்சி குறிப்பிடும். அவை நீரை இறைப்பவர்களின் பாட்டொலி, ஏற்றம் இறைப்பவர் ஓசை, பறவைகளை ஓட்டு கிறவர்களின் பாடல், பரதவர் ஆடும் குரவைப் பாட்டு ஆகியன. இவை யெல்லாம் நாட்டுப்புறப் பாடல்களின் வடிவங்களே என்று கி.வா.ஜ. கூறுகிறார். மேற்கூறிய நிகழ்வுகளைச் சான்றாகக் கொண்டு நாடோடிப் பாடல்களில் மனம் செலுத்தி இன்புற்ற சங்கப் புலவர்கள் அவற்றின் அமைப்பை யொத்த

பாடல்களைத் தம் நூலில் கூறியுள்ளனர் என்ற கருத்தை தெளிவுபடுத்துகிறார். அதுமட்டுமின்றி நாட்டுப்புற இலக்கியங் களின் பயன்பாடு மக்களிடையே வழக்கிலிருந்ததையும் விளக்குகிறார்.

பிசியொடு மானும் – அதனை ஒத்தலாவது அதுவும்
செவிலிக்குரித் தென்றவாறு

புதிர்களையும், கதைகளையும், செவிலித்தாய்மார் தலைவனைப் பிரிந்த தலைவிக்குச் சொல்வித்துப் பொழுது போக்குவது வழக்கம் என்பதைச் சுட்டிக்காட்டி நாட்டுப்புறப்பாடல்களின் பயன்பாட்டையும் விளக்குகிறார்.

## நாடோடிப் பாடல்களின் இயல்புகள்

இத்தலைப்பின் கீழ் நாடோடிப் பாடல்களின் இலக்கியக் கூறுகள் எடுத்து இயம்பப்படுகின்றன.

### எதுகை மோனை

நாடோடிப் பாடல்களுக்கு ஆசிரியர் இன்னாரென்று அறியப்படாது; ஆனால் ஏதோ ஒருவரால் முதலில் பாடப் பட்டிருக்கும். அதாவது இதில் இலக்கியத்திற்குச் சிறப்புத் தரும் எதுகை மோனை ஓசையழகு சிறப்பாய் உள்ளது. குழந்தைகளின் பாடல்களில் அதிகமாய்க் காணப்படுகின்றன என்கிறார் கி.வா.ஜ.

### ஓசை அமைதி

நாடோடிப் பாடல்களில் கண்ணிகளும், சிந்துகளும் பயின்று வரும். ஒவ்வொரு பாடல்களுக்குள்ளும் ஒரு வகையான ஓசை அமைதி இருக்கும். தெம்மாங்கு, கும்மி, ஓடப் பாட்டு, தாலாட்டு, ஒப்பாரி என ஒவ்வொரு பாடல்களுக்கும் இருக்கும் ஓசை அமைவு கேட்கும்போது இவை இன்னபாட்டின் வகை என்பதைப் புலப்படுத்தும்.

### சொற்கள்

நாட்டுப்புறப்பாடல்களில் வழக்கிலிருக்கும் சொற்கள் பயன்படுத்தப்படும். ஒரு பாடலிலிருக்கும் வழக்குச் சொற்களைத் திருத்த முனைந்தால் அது நாடோடிப் பாடல்களின் இலக்கிய நயத்தை அழித்துவிடும் என்று குறிப்பிடுகிறார்.

## இலக்கணத்துக்கு மாறு

இலக்கணத்திற்கு மாறாகப் பேச்சு வழக்குச் சொற்கள் மட்டுமின்றி ஒருமைப் பன்மை மயக்கங்களும் கூடப் பாடல்களில் பயின்று வரும்.

## திரும்பி வருதல்

நாடோடிப் பாடலைப் படித்துப் பார்ப்பதில் இன்பம் இராது. பாடிக் கேட்கும் போதுதான் தாள அமைப்பும் இசையும் அழகைக் கொடுக்கும். ஏனெனில் இதில் மீண்டும் மீண்டும் சில சொற்றொடர்களும் வாக்கியங்களும் திரும்பத் திரும்ப வந்து அழகு பயப்பதாக அமைகின்றன. இவ்வாறு முதல் இயல் முடிகிறது. நாடோடி இலக்கியம் செவ்வியல் இலக்கியங் களுக்குச் சமமானது என்ற கருத்தை வலியுறுத்தியுள்ளார்.

## நாட்டுப்புறப் பாடல்களின் வகைகள்

நாட்டுப்புறப்பாடல்களைப் பல்வேறு நிலையில் வகைப் படுத்துவர். பொருள், நிலையில் வகைப்படுத்துவது ஒரு வகை. அந்த அடிப்படையில் கி.வா.ஜ. அவற்றை 7 வகையாகப் பகுக்கிறார்.

1. தொழில் செய்வார் பாடல்
2. இன்பப் பாடல்
3. உணர்ச்சிப் பாடல்
4. குழந்தைப் பாடல்
5. விளையாட்டுப் பாடல்
6. கருத்துப் பாடல்
7. கதைப்பாடல்

என்பவையாகும். மேற்கூறியது பொது வகைப்பாடு. ஆனால் மலையருவி நூலில் கொடுக்கப்பட்ட பாடல்களைப் பதின்மூன்று தலைப்புகளாகப் பிரித்துக் கொடுத்துள்ளார். உள்ளடக்கம், சொற்றொடர்கள் வடிவம் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு தலைப்புகளைக் கொடுத்துள்ளார். அவை,

1) **தெம்மாங்குப் பாடல்:** இதற்கு வண்டிக்காரன் பாட்டு என்ற பெயரும் உண்டு. தேன் போன்று இனிமையான இசையும் ஓசையும் கொண்ட பாடல் என்று குறிப்பிடுகிறார். 2) **தங்க ரத்தினமே** 3) **ராசாத்தி:** இந்தப் பாடல்களின் இறுதியில் தங்க ரத்தினமே, ராசாத்தி! என்று திரும்பத் திரும்ப ஒவ்வொரு

வரியின் இறுதியில் வருவதால் இப்பாடல்களுக்கு மேற்கூறிய தலைப்பை வழங்கியுள்ளார்.

### ஆண் பெண் தர்க்கம்

ஆணும் பெண்ணும் உரையாடுவதுடன் தர்க்கம் செய்வது போன்று அமையும் பாடல்களை இந்த வகையினுள் அடக்கியுள்ளார்.

### தொழிலாளர் பாடல்

கூலி வேலை செய்யும் தொழிலாளர் (ஆண், பெண் இரு பாலரும்) வேலை செய்யும் பொழுது களைப்புத் தெரியாமல் இருக்கவும் பொழுது போக்கவும் பாடும் பாடல்களை இந்த வகையின் கீழ் கொடுத்துள்ளார்.

### கள்ளன் பாட்டு

திருநெல்வேலியில் வாழ்ந்த ஐம்புலிங்கம் பற்றிய பாடல்களை அப்பகுதியின் வட்டார வழக்கோடு பெயரிட்டு வகைப்படுத்தியுள்ளார்.

### குடும்பம்

இத் தலைப்பின் கீழ்க் காதல், திருமணம், மாமியார் - மருமகள் சண்டை போன்ற பொருளடக்கம் கொண்ட பாடல்களை வகைப்படுத்தி விளக்குகிறார்.

### தாலாட்டு

இதில் குழந்தைகளுக்குச் சொல்லப்படும் பாடல்கள் அடங்குகின்றன. அதுமட்டுமின்றி வேட்டைத் தாலாட்டு, கோயில் தாலாட்டு எனப் பல்வேறு வகையான தாலாட்டுப் பாடல்களையும் விளக்குகிறார்.

### சிறுவர் உலகம்

குழந்தைகள் உலகத்தில் இருவகையான பாடல்கள் அடங்குகின்றன. ஒன்று குழந்தைகளே தமக்காகப் பாடுபவை. மற்றது குழந்தைகளுக்காக மற்றவர் பாடுபவை. இவ்விரண்டு வகையான பாடல்களை இத்தலைப்பின் கீழ்க் கொடுத்துள்ளார்.

### புலம்பல்

இதில் துயரம் நிறைந்த உணர்வுகளை வெளிக்காட்டும் பாடல்களைக் கொடுத்துள்ளார்.

## கும்மி

பலர் கூடி ஆடிப்பாடி மகிழும் விளையாட்டைக் கும்மி என்பர். இதற்கென்று தனி மெட்டு உண்டு. அவற்றை யெல்லாம் இத்தலைப்பின் கீழ் வகைப்படுத்தியுள்ளார்.

## தெய்வப் பாடல்கள்

மாரியம்மன், ஏசு போன்ற தெய்வங்களைப் பற்றிய பாடல்களும் பூசாரிப் பாட்டு என்ற பாடல் வகையும் இத்தலைப்பின் கீழ் கொடுக்கப்பட்டுள்ளது.

## பல கதம்பம்

மேற்கூறிய வகைப்பாட்டிற்குள் அடங்காத பாடல்களை இத்தலைப்பின்கீழ்க் கொடுத்துள்ளார். தொதுவப் பழங்குடியினர், வெள்ளைக் காரன் போன்றோர் சார்ந்த பாடல்களும் தாது வருஷத்துப் பஞ்சத்தைப் பற்றிய பாடல்களும் இத்தலைப்பின் கீழ் அமைகின்றன. மலையருவி நூலின் மூன்றாவது இயல் சொற் களஞ்சியமாக அமைகிறது. பர்ஸிமாக்வீன் தொகுத்துக் கொடுத்த பாடல்களில் உள்ள பல வட்டார வழக்குச் சொற்களின் சொல் லடைவைக் கொடுத்துள்ளார். சொற்களை இருபத்தியேழு வகையாகப் பகுத்து வழங்கியுள்ளார்.

1. **ஆடை வகை**
2. **அணிகலன் வகை**
3. **பூ வகை**
4. **உணவு வகை**
5. **பழவகை**
6. **புதுப்பொருள்கள்**
7. **பாட்டு வகை**
8. **மீன் வகை**
9. **பழக்க வழக்கங்கள்**
10. **கடவுளர்**
11. **பழம் பெயர்கள்**
12. **ஆண் பெயர்கள்**
13. **ஊர்களும் இடங்களும்**

மேற்கூறிய பதின்மூன்றையும் பொருள்களின் வகைகள் என்று பகுத்துள்ளார். பழக்க வழக்கங்களைப் பற்றிய சொற்களுக்கு நம்மிடையே வழங்கும் வழக்கங்களை விளக்கங்களுடன் கொடுத்துள்ளார். இதன் வாயிலாக நமது பண்பாட்டுக் கூறுகளை அறிந்து கொள்ள முடிகிறது.

அடுத்து வரும் 14 வகையும் சொற்களஞ்சியங்கள். அவை சொல் எவ்வாறு உருவாகிறது; எவ்வாறு சிதைகிறது என்பதை விளக்குகின்றன. வட்டார வழக்குச் சொற்களைத் தொகுத்து அவற்றிற்குப் பொருள் தந்து விளக்கியுள்ளார். பிறமொழிச் சொற்களும் ஆங்கிலச் சொற்களும் நடைமுறை வாழ்க்கையில்

பயன்படுத்தப்பட்டு வந்துள்ளதை எடுத்துக் காட்டியுள்ளன. ஏனெனில் மக்களின் மொழிகளையும், வழக்குகளையும் ஆராயும் ஆய்வாளர்கள் அவர்களிடையே வழங்கும் வசவுச் சொற்களிலிருந்து அவர்களுடைய இயல்புகளையும் கொள்கை களையும் ஒழுங்குமுறைகளையும் தெரிந்து கொள்ளலாம் என்று குறிப்பிடுகின்றனர். பின்னர்ச் சொற்களின் சிதைவுகளை இலக்கண இலக்கிய அடிப்படையில் பகுத்துக் கொடுத்துள்ளார்.

சொற்கள் பேச்சு வழக்கில் சிதைவது இயல்பு. இதனை இலக்கியத்தில் மரூஉ என்பர். சொற்கள் பொதுவாக முதல் இடை, கடை என்ற மூன்று இடங்களிலும் தோன்றல், திரிதல், கெடுதல் என்னும் மூன்று விகாரங்கள் பெற்றுச் சிதைகின்றன. ஒரே சொல் வெவ்வேறு இடங்களில் சூழ்நிலைக்கேற்ப, சாதி, வட்டாரம் என்று அதற்கென அந்தந்த இயல்புகளுடன் சிதையும். இதனை வழக்குத் தமிழ் என்பர். இவர் சிதைந்த சொற் களைத் தொகுத்து வகைப்படுத்தி அதன் பொது இயல்புகளை ஆய்ந்து அதன் அடிப்படையில் அகர வரிசைப்படி கொடுத்துள்ளார்.

மேற்கூறியுள்ள கருத்துருக்களின்படி மலையருவி என்ற நூல் பல்வேறு ஆய்வுகளின் நிலை களனாக அமையும் என்பதில் சந்தேகமில்லை.

## நாடோடி இலக்கியம்

நாடோடி இலக்கியம் என்ற இந்நூல் நூற்று எழுபது பக்கங்களைக் கொண்டது. இருபத்தி ஒன்பது வகையான பகுதிகளைக் கொண்டது. ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு நாட்டுப்புறப்பாடல் இடம்பெற்றுள்ளது. இந்நூலில் வெறும் பாடல்களை மட்டும் தொகுத்துக் கொடுக்கவில்லை. பாடல்களின் பொருளை மட்டும் விளக்காமல் ஒவ்வொரு பாடல்களுக்கும் ஏற்றவாறு சிறு சிறு கதைகளைக் கொடுத்துள்ளார்.

இப்பாடல்களை அப்படியப்படியே சொல்வதைவிட ஒரு நிலைக்களத்தை அமைத்துப் பொருத்திக் காட்டினால் தமிழ் நாட்டார் அவற்றில் ஈடுபடுவார்கள் என்றும் அது மட்டுமின்றிச் செவ்வியல் இலக்கியத்தோடு ஒப்பிட்டு இரண்டிற்கு மிடையேயுள்ள ஒற்றுமை வேற்றுமை நயங்களை எடுத்துக் காட்டியுள்ளதாக இந்நூலின் முன்னுரையில் குறிப்பிடுகிறார்.

இந்நூலில் குறிப்பிட்டுள்ள 29 வகையான நாட்டுப்புறப் பாடல்களையும் குடும்பம், சமயம், சமூகம் எனும் மூன்று பெரும் பிரிவுகளுக்குள் அடக்க முடியும்.

## குடும்பம்

1. காதல் 2. திருமணம் 3. குழந்தைகள் என முப்பிரிவுகளில் இதனை அணுகலாம். காதல் தொடர்பான பாடல்களில் ஏற்றக்காரனின் காதலையும், முத்துவீராயி என்ற பெண்ணின் காதலையும், சாலையில் சந்திக்கும் இருவர் தங்கள் காதலைப் பாடல்கள் வாயிலாகச் சொல்லும் தன்மையினையும் எடுத்துக் காட்டுகிறார். காதலன் தனக்காகத் தோப்பில் காத்திருந்தும் தான் போகாமல் காவலில் உள்ளதை நினைத்து வருந்தும் காதலியின் வாடிய உள்ளத்தையும் எடுத்து இயம்புகிறார். இந் நிகழ்வைச் சங்க இலக்கியக் காதலியுடன் ஒப்பிட்டு நோக்குகிறார்.

அடுத்து, திருமணம் என்ற தலைப்பில் சமூகத்தில் பாமர ஏழை மக்களிடையேயுள்ள திருமணத்தின் தன்மைகளை எடுத்துக் கூறுகிறார். கிராமத்திற்கு அரிசி விற்க வந்த வயதான கிழவனைத் தனக்குத் திருமணம் செய்து வைத்த பெற்றோரிடம் அவனுடன் வாழமுடியாது என்று இளம் பெண் ஒருத்தி மறுத்துப் பாடும் நாட்டுப்புறப் பாடலைக் காட்டுகிறார். இதன் வாயிலாக அப் பெண்ணின் குடும்ப வறுமை வெளிக்கொணரப்பட்டுள்ளது. தன் கணவன் திருமணத்திற்குப் பின் வேலைக்குச் செல்லாமல் இருக்கும்போது அவனை அறிவுறுத்தி வேலைக்கு அனுப்பு வதற்காகப் பாடப்படும் பாடல்களை விளக்குகிறார். திருமணத் திற்குப் பின் வேறொருவருடன் தொடர்பு வைத்திருக்கும் பெண்ணின் கள்ளக்காதலைத் தெரிவிக்கும் பாடலும் இங்குக் கொடுக்கப்பட்டுள்ளது.

குழந்தைகள் தொடர்பான நாட்டுப்புறப்பாடல்களையும் கொடுத்துள்ளார். குழந்தை இல்லாமல் வாடும் பெண் ஒருத்தி தன் மனவருத்தத்தை வெளிப்படுத்தும் பாடலும் கொடுக்கப்பட் டுள்ளது. குழந்தைகள் விளையாடும்போது பாடப் பாடல் களுக்குக் குருவியின் கல்யாணம், தவளையின் புலம்பல் என்ற இரு தலைப்புக் கொடுத்துள்ளார். இப்பாடல்களுக்கு இவர் தன்னுடைய சொந்தக் கருத்தினைக் கொண்டு இரண்டு சிறுகதைகளைக் கூறி ஒரு அறக்கருத்தையும் வலியுறுத்தியுள்ளார்.

## சமயம்

இராமனை வழிபடும் முறை பற்றியும் இராமயாணம் பற்றிய பாடல்களையும் விளக்கியுள்ளார். எல்லாக் கடவுள ரையும் வழிபடும் நாட்டுப்புற மக்களின் மனநிலையைச் சமரசப் பாட்டு என்ற தலைப்பிலும் நாட்டுப்புறத் தெய்வமான

மாரியம்மனை மக்கள் வழிபடும் நிகழ்வை மாரியம்மன் பாட்டு என்ற தலைப்பிலும் கொடுத்துள்ளார். பரதேசியின் உபதேசம் என்ற தலைப்பில் ஞானம் பெறுதல் எப்படி என்று விளக்குகிறார்.

### சமூகம்

'தை பிறந்தால் வழி பிறக்கும்' என்று அறுவடை செய் வதற்குக் கிராம மக்கள் புறப்பட்டுச் செல்லும் நிகழ்வை பொங்கல் பாட்டு என்ற தலைப்பு குறிப்பிடுகிறது. மனித வாழ்வில் ஏற்படும் துன்பங்களையும், அதற்கு எதிர் நீச்சல் போடுவதையும் மற்றவரை ஏமாற்றித் திருடிய நாய் அடிபட்டுத் திரும்பி வந்த நிகழ்வையும் முள்ளுமுனை, சங்கடங்கள், பரதேசியின் உபதேசம், அடிபட்ட நாய் எனும் தலைப்புகளில் கொடுத்துள்ளார்.

பெரியவர் மற்றும் குழந்தைகள் தங்களுக்கிடையே ஒருவரை யொருவர் கேலி பண்ணும் நிகழ்வைச் சுட்டிக்காட்டு வதற்குச் சிரிப்பு மூட்டும் பாடல்கள் என்ற தலைப்பில் கொடுத்துள்ளார். மக்கள் வழக்கில் ஆங்கில மொழி கலந்த பாடல்கள் எளிமையாகப் பின்பற்றியிருத்தலை இங்கிலிஷ் கலந்த பாடல்கள் சுட்டுகின்றன.

### தமிழ்ப் பழமொழிகள்

தமிழ் பழமொழிகள் என்னும் இந்நூல் ஏறத்தாழ இருபத்து ஐந்தாயிரம் பழமொழிகளை உள்ளடக்கியது. இப் பழமொழிகள் நான்கு தொகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளன. ஒவ்வொரு தொகுதியும் ஏறத்தாழ 250 பக்கங்களைக் கொண்டன. பழமொழிகளை அகரவரிசை அடிப்படையில் வகைப்படுத்தி யுள்ளார். இறுதியில் பின்னிணைப்பாக வழக்குச் சொற்களுக்கு பொருளை விளக்கும் அருஞ்சொற்களையும் கொடுத்துள்ளார்.

பழமொழிகளின் உள்ளடக்கங்களை எடுத்து கொண்டால் அவை சமூகம் சார்ந்தவை, தெய்வம் சார்ந்தவை, உயிரினங்கள் சார்ந்தவை எனப் பல்வேறு வகையாகப் பகுக்கலாம். அவற்றுள் சாதியப் பழமொழிகள், நீர் வாழ்வன, ஊர்வன, புழுபூச்சிகள், விலங்குகள், மருந்து வகையின, குலதெய்வம் தொடர்பான பழ மொழிகள் என்பன குறிப்பிடத்தக்கன. கபிலர், ஒட்டக்கூத்தர் போன்ற புலவர்களின் பெயர்களைக் கொண்ட பழமொழி களும் இடம்பெற்றுள்ளன. பார்ப்பனரை இழிவுபடுத்தும் பழமொழிகளை அப்படியே கொடுத்துள்ளதாகக் கி.வா.ஜ. இந்நூலின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்.

பழமொழியில் வழக்குச் சொற்கள் வரின் அதற்கு இணையான இலக்கியச் சொற்களைக் கொடுத்துள்ளார். ஒரு சில பழமொழிகளுக்கு அருகே சேகரிக்கப்பட்ட இடத்தின் பெயரையும் கொடுத்துள்ளார். நாடோடிப் பாடலைச் சேகரிப் போர் பெரும்பாலும் சூழலைப் பற்றிக் கவலைப்படாத கால கட்டத்தின் காரணத்தினால் சூழல் பற்றி விளக்கவில்லை. வெறும் பாடல்களை மட்டும் சேகரித்துக் கொடுத்துள்ளார்.

## ஏற்றப் பாடல்கள்

இந்நூலில் கி.வா. ஜகந்நாதன் தாம் தொகுத்த ஏற்ற பாடல்களையும் உழைப்பாளிப் பாடல்களையும் தொகுத்துத் தந்துள்ளார்.

## ஏற்றப்பாடல் வரையறை

ஏற்றப்பாட்டுக்கு எதிர்ப்பாட்டில்லை என்பது பழமொழி. ஏற்ற மரத்தின் மேலே ஏறி இரண்டு அல்லது மூன்று பேர் மேலும் கீழும் நடந்து பாடுவார்கள். மரத்தின் நுனியில் இணைத்துக் கொண்டுக் கோலின் நுனியில் சாலைக் கட்டி யிருப்பார்கள். ஏற்ற மரம் சாயும்போது சால் கீழே சென்று தண்ணீரை முகக்கும். மறுபடி மேலுள்ளவர்கள் கீழே போகும் போது சால் மேலே வரத் தண்ணீரை இறைப்பவன் ஒரு பகுதியால் ஒன்று, இருபதியால் ரெண்டு என்று இறைக்கும் சாலின் எண்ணிக்கையைச் சொல்வான். இவ்வாறு சால் இறைப்பவன் ஏற்றம் இறைக்கும்போது பாடப்படுவதை ஏற்றப் பாடல்கள் என்று கி.வா.ஜ. தமது முன்னுரையில் குறிப்பிடுகிறார்.

ஏற்றத்தை இயக்குகிறவர்கள் ஆண்கள் என்ற காரணத்தால் ஆண்களே ஏற்ற பாடல்களைப் பாடுகிறார்கள். இப்பாடல்களில் பொருள் தொடர்ச்சியாக இராது. சில அடிகளில் தொடர்ச்சி இருக்கும். எதுகை, மோனை, ஓசை ஆகியவையும் இதில் காணப்படுகின்றன.

## ஏற்றப்பாடல்களின் பொருளடக்கம்

ஏற்றப்பாடல்கள் பல இடங்களில் வழங்கும்போது ஒரே பாட்டில் பல அடிகள் கூடியிருக்கும். சில அடிகள் குறைந்திருக்கும். சில அடிகளில் பாட பேதங்கள் இருப்பதுண்டு. அவற்றை அந்தப் பாடல்களில் அருகே அடிக்குறிப்பாகக் கொடுத்துள்ளார். (1983:41) ஜகந்நாதன், கி.வா. அரிச்சந்திரன், ராமர் ஆகியோரின் வாழ்க்கை வரலாற்றை உள்ளடக்கிய ஏற்றப் பாடலகளைத் தொகுத்துக் கொடுத்துள்ளார்.

## தொழிலாளர் பாடல்கள்

இந்நூலில் சில தொழிலாளர் பாடல்களையும் தொகுத்துக் கொடுத்துள்ளார். ஏற்றம் இறைப்பவனும் தொழிலாளி, எனவே மற்ற தொழிலாளிகளின் பாடல்களையும் இதில் இணைத்து வழங்கியுள்ளார். இதில் மீனவர்கள், உழவர்கள், நெசவாளிகள், துணி துவைப்பவர் போன்றோர் வேலை செய்யும் போது பாடும் பாடல்கள் கொடுக்கப்பட்டுள்ளன. உழவுப் பாடலில் நாற்றை நடும்போது பாடும் பாட்டு, களை வெட்டும் போது பாடும் பாட்டு, வயல் பார்க்க வரும்போது பாடும் பாட்டு, பருவம் பார்த்து அறுவடை செய்யும் போது பாடும் பாட்டு, நெல் அளக்க, நெல் குத்தும்போது பாடும் பாட்டு எனப் பலவகையாகப் பாடல்களைத் தொகுத்து கொடுத்துள்ளார். மீனவர் பாடல் படகு தள்ளும் பாட்டு வலைப்பாட்டு, வலையர் பாட்டு, தூரிப்பாட்டு எனப் பலவகைப்படும். தறி நெய்பவர் பாட்டு, பச்சை குத்தும்போது வலி தெரியாமல் இருக்கப் பாடும் பாட்டு, சுண்ணாம்பு இடிப்போர் பாடும் பாட்டு, வண்ணான் பாட்டு என்ற தொழில் பாடல்களையும் எடுத்து வழங்கியுள்ளார்.

**ஏழைக் கேது காலம்**
**எழுதாத ஓலைச் சுருளாமோ பொண்ணே?**
**பசுவும் கிழம் ஆனால் பால்குணமும் போமோ?**
**பாம்பும் கிழம் ஆனால் பல் விஷமும் போமோ?**

இப்பாடல் வரிகளைப் பழமையைக் காக்க வேண்டி அப்படியே கொடுத்துள்ளதாகக் குறிப்பிடுகிறார். செங்குந்த முதலியார் வகுப்பினர் தறி, நெசவு செய்யும்போது பாடும் பாட்டு, தறிப்பட்டாகும். இது தறிக்கோலுக்குப் பள்ளம் தோண்டுவது முதல் தறியூட்டி, பாவு ஓட்டி, இணைத்து நெசவு செய்து, முடிக்கும் வரையுள்ள பல்வேறு வேலைகளைக் குறித்துப் பாடுவது (ஜகந்நாதன் கி.வா. 1983:81).

தூரிப்பாட்டு என்பது காற்று பலமாக அடிக்கும்போது வலை அறுந்துவிடாமல் நல்லபடியாகக் கரை வந்து சேருவதற்காக வலையர் பாடும் பாட்டு ஆகும்.

### கஞ்சியிலும் இன்பம்

இந்நூலில் நாட்டுப்புறக் குடும்ப நிகழ்வுகளைப் பல்வேறு வகைகளாகக் குறிப்பிடுகிறார். நாட்டுப்புறப் பாடல்களைக் குறிப்பிட்டு அவற்றிற்கு விளக்கங்களும் கொடுத்துள்ளார். பாடல்களை விளக்கிக்காட்டும் போதுதான் இக்காலத்து

இரசிகர்கள் அதன் சிறப்பை உணர்வர். எனவே நாட்டுப்புறப் பாடல்களுக்கு விளக்கங்கள் எழுதியுள்ளதாகக் குறிப்பிடுகிறார்.

இந்நூல் மொத்தம் பதினான்கு பகுதிகளாக பிரிக்கப் பட்டுள்ளன. அவற்றுள் சில இங்கு நோக்கத்தக்கன. பூசாரி வரம் போன்ற தலைப்பில் கீழ் உள்ள பாடலில், பூசாரிப் பாட்டுக்கு பின்பாட்டு இல்லை என்பதற்கு இணையாய், பூசாரி சங்க காலத்தில் வேலன் வெறியாட்டில் உடுக்கை அடித்து ஆவேசம் கொண்டு பாடுகின்றான். இன்று மாரியம்மன் காளி போன்ற கிராம தேவதைகளை வழிபடுபவனாக இருக்கின்றான்.

"கல்யாணம் செய்து வைப்பேன் நான் - எந்தக் கலகம் வந்தாலும் கலங்கவே வேண்டாம்" மருதமலை வீரப்பன் உதவியால் திருமணத்திற்கு ஏற்பாடு செய்து திருமணம் செய்து வைத்து தட்சணை வாங்கிச் செல்கிறான் என்று குறிப்பிடுகிறார்.

## திருமணம்

1. **கல்யாண விளையாட்டு**
2. **மணமகளின் மிடுக்கு**
3. **மாமியாரும் மருமகளும்**

என்ற மூன்று பாடல்கள் இதில் அடங்குகின்றன. முதலில் பொம்மை களைக் கொண்டு கல்யாணம் செய்வது போன்ற பாடல்கள், வரன் பேசுதல், நகையின் விவரம் பேசுதல் என்பவை அடங்கும். மணமகளை மணவறைக்கு அழைத்து வர மாமியார் செல்ல மருமகள் மிடுக்காகப் பதில் சொல்வது போலப் பாடல்கள் உண்டு. மாமியார் மருமகள் சண்டையை எடுத்துக்காட்டும் பாடல்களும் விளக்கங்களுடன் அமைகின்றன.

## கேலி உறவு முறைகள்

மாமன் உறவு கேலி முறை உறவாகக் கொள்ளப் படுகிறது. மாப்பிள்ளை, மாமன், அத்தான் போன்ற உறவு முறைகளை பரிகாசம் செய்தல் போன்ற செயல்பாடுகள் உண்டு. இது இவர்களின் உறவைப் பலப்படுத்தும். அத்தானுக்கு விருந்து வைப்பதற்காக ஏற்பாடு செய்யும் உணவு வகைப்பாடுகள் பற்றிய பாடல்கள் இடம்பெறுகின்றன.

இறுதியாக, காதல் தொடர்பான பாடல்கள்

1. **நகையும் மலரும்**
2. **வீரத்தின் தோல்வி**
3. **சங்கேத சம்பாஷணை**
4. **கஞ்சியிலும் இன்பம்**

என்று பகுக்கப்படுகிறது. மேற்கூறிய நான்கு தலைப்பில் அமைந்துள்ள பாடல்களில் காதலைச் சிறப்புப்படுத்தும் தன்மையில் விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. நகையும் மலரும் கொடுத்து ஒரு பெண்ணைக் காதலிக்கும் தன்மை எடுத்துக் காட்டப்படுகிறது. காதலர்கள் தங்களுக்குள் பேசும் சங்கேத சம்பாஷணை உடைய பாடல்களைப் பற்றி விளக்கம் அமைகிறது. மிகப்பெரிய வீரனொருவன் காதலித்த பின்பு தன் வீரத்தை இழந்து வெறுங்கையனாய்த் திரும்பி வருவதாக நாடோடிப் பாடல்கள் உள்ளன. குடும்ப விரிவு என்ற பாடலில் ஒரு நாடோடிப் பாடல் விடுகதையை விளக்குவதாக அமைகிறது.

நெல்லுக்குத்த உலக்கை வேணும், சோறாக்கப் புதுப்பானை, சோறு தின்னக் கணக்குப்பிள்ளை, கணக்குப் பிள்ளை சாவுக்குக் கைப்பிள்ளை, கைப்பிள்ளைக்குப் பால் கறக்க நெட்டை எருமை வேணும், நெட்டை எருமை மேய்க்க ஒரு ஒட்டப் பையன் வேணுமா? ஓட்டைப்பயலுக்குச் சோறுக்காகக் குப்பாயி வேணுமா, குப்பாயிக்குப் பெண் பார்க்கக் குரங்குக்குட்டி வேணுமா, குரங்குக்குட்டிக்கு மணி அடிக்க கொட்டாப்புளி வேணுமா?

இப்பாடலின் கருத்தை விளக்க வேறொரு கதையையும் ஒப்பிட்டு விளக்கியுள்ளார்.

சமூகத்தில் நடக்கும் அவலங்களை விளக்கும் நாடோடிப் பாடல்களைத் தொகுத்து வழங்கியுள்ளார். வெள்ளைக் காரனிடமும், கிழவனிடமும் ஏமாற்றப்பட்ட பஞ்சமகளிரின் நிலையை விளக்கும் நாடோடிப் பாடல்களும் இங்கு வழங்கப்பட்டமை சிறப்புடையது.

### ஓடப்பாட்டு

இது கலைக்களஞ்சியத்தில் வெளிவந்துள்ள கட்டுரை. இதில் ஓடப்பாட்டிற்கான வரையறையும், அது தொடர்பான புராணக்கதையும் விளக்கப்பட்டுள்ளன.

### ஓடப்பாட்டு வரையறை

ஓடத்தைத் தள்ளுகிறவர்கள் தம்முடைய வேலையில் அலுப்புத் தோன்றாமலிருக்கும் பொருட்டுப் பாடிக் கொண்டே தள்ளுவது வழக்கம். கரையருகே இழுத்துச் செல்லும்போதும் ஓடப்பாட்டுப் பாடுவது வழக்கம். இதற்குக் கப்பற்பாட்டு, ஏலேலோ பாட்டு, ஏலப்பாட்டு எனப் பல பெயர்கள் உண்டு.

## ஓடப்பாட்டின் இயல்புகள்

இப்பாட்டு பல கண்ணிகளாக உள்ளது. துண்டு துண்டான பல கருத்துகள் வரும். கருத்துகள் அற்று வரும் பல அடிகள் சேர்ந்து ஒரு கருத்தைக் குறிக்கும். கப்பற் பாட்டுகளைப் புன்னாகவராளியால் பாடுவார்கள். ஏலேலோ, ஐலசா போன்ற சொற்கள் பாட்டின் ஒவ்வொரு அடியின் இறுதியிலும் வரும்.

## ஓடப்பாட்டின் உருவாக்கம்

ஏலேலோ சிங்கர் என்பவர் மயிலாப்பூரில் பெருஞ் செல்வராக வாழ்ந்து வந்தார். இவர் திருவள்ளுவரின் நண்பர். கப்பல் தொழிலாளிகள், ஏழைகளுக்கு உதவும் நற்குணம் படைத்தவர். இவரிடம் உதவி பெற்ற கப்பல் தொழிலாளிகள் ஏலேலோ சிங்கர் என்று கூறி வாழ்த்தினை முடிப்பர். பின்னர், இதுவே ஓடப்பாட்டின் வாய்பாட்டாக மாறிவிட்டதாகக் கி.வா.ஜ. குறிப்பிடுகிறார்.

எலா, ஏலா, ஏல என்பவை தோழன் தோழிகளை விளிக்கும் விளிச்சொல். இவ்விளிச் சொல்லே ஏலேலோ என இரட்டித்து உருவாகியிருக்கும் என்று கி.வா.ஜ. ஓடப்பாட்டின் வாய்பாட்டின் உருவாக்கத்தினைக் குறிப்பிடுகிறார். இக் கட்டுரையின் வாயிலாக ஓடப்பாட்டின் வாய்பாட்டிற்காக வாய்பாட்டுச் சொல்லிற்கான காரணமும், ஓடப்பாட்டின் தன்மைகளும் விளக்கப்பட்டுள்ளன.

## அம்மானை

அம்மானை என்ற கட்டுரையும் கலைக்களஞ்சியத்தின் முதல் தொகுதியில் வெளிவந்துள்ளது. இக்கட்டுரையில் கி.வா.ஜ. அம்மானைப் பாடல்களை வரையறை செய்து இலக்கியங்களில் காணப்படும் அம்மானை வரியோடு ஒப்பிட்டு நோக்கியுள்ளார்.

## அம்மானை வரையறை

கதையைத் தழுவி வரும் நெடும் பாடல்கள் பல அம்மானை என்ற பெயரோடு வழங்கி வருகின்றன. சான்று: கள்ளழகர் அம்மானை, வைகுந்த அம்மானை.

## அம்மானையின் இயல்புகள்

நாடோடிப் பாடல்களின் இயல்புகளுடன் கொச்சை மொழிகள், உலக வழக்குச் சொற்கள் யாவருக்கும் வழங்கும் உபமானங்கள், ஒரு செய்தியையே மீண்டும் மீண்டும் சொல்லுதல், சில வாக்கியங்கள் எல்லாப் பாடல்களிலும் வருதல் அம்மானை

இலக்கியங்களின் பண்பாகும். அல்லியரசாணி மாலை, பவளக் கொடி மாலை போன்றன அம்மானைப் பாடலைச் சார்ந்தவை.

## இலக்கியத்தில் அம்மானை வரி

அம்மானை விளையாட்டுக் காய்கள் கொண்டு விளையாடும் போது குறிப்பிடப்படும் பாடல் அம்மானை வரி. கலம்பகத்தில் அம்மானை என்ற உறுப்பு இருக்கும். மூவர் அம்மானை என்ற நூல் உள்ளது. சிலப்பதிகாரத்தில் அம்மானைவரி உண்டு. உலா விலும் அம்மானைவரிப் பாடல்கள் உண்டு. அம்மானை, தாய், பெண்கள் பாடும் பாட்டு. இதில் மூன்று பெண்கள் பாடுவர். ஒருவர் ஒரு செய்தியைச் சொல்ல மற்றவர் கேள்வி எழுப்ப மூன்றாமவர் பொதுவாய் அதற்கு விடையாகப் புகழ்பாடுவது. இதற்கு அடிவரையறையில்லை.

இலக்கியங்களில் காணப்படும் அம்மானைவரிப் பாடல்கள் நாடோடிப் பாடல்களின் அம்மானைப் பாடல்களி லிருந்து உருவாக்கப்பட்டன என்பதே இக்கட்டுரையின் நோக்கமாக அமைகிறது.

## தெய்வப் பாடல்கள்

நாட்டுப்புற மக்களிடையே பெரும்பாலும் குலதெய்வம் தொடர்பான பாடல்களே காணப்படும். ஆனால், இவர் மக்களிடையே வழிபடப்படும் செவ்வியல் தெய்வங்களையும் பற்றிய பாடல்களைத் தொகுத்துள்ளார். இந்நூலில் விநாயகர் முதலிய பல கடவுளரின் புகழ்பாடும் பாடல்களைக் காண முடிகிறது. பழமையைப் பாதுகாக்க வேண்டும் என்பதற்காக அப்படியே கொடுத்திருப்பதாகக் கி.வா.ஜ. குறிப்பிடுகிறார்.

இது விநாயகர், கந்தன், வள்ளி, சிவன், சிவகாமி, மீனாட்சி, இலட்சுமி, பெருமாள், வருணன், ஏசு, நாகூர் போன்ற தெய்வங்களைப் பற்றிப் புகழ்ந்து பாடுவதாக அமைகிறது. இதில் வரும் பூசாரிப் பாட்டில் இப்பாட்டுப் பாடப்படும் சூழ்நிலையை இவர் விளக்குகிறார்.

பொங்கல் அல்லது முக்கியமான சுபகாரியம் நடக்கும் காலங்களில் பெண்கள், கரும்பு முதலியவற்றைப் படைத்துப் பிள்ளையாரைக் குறித்துத் தங்களுக்குத் திருமணம் ஆக வேண்டுமெனத் தொடங்குவர். பிள்ளை வீட்டார் குடைக் கல்யாணம் செய்வதற்காக வரவழைத்த பூசாரியுடன் உடுக்கை அடித்து வர்ணித்துப் பாடி ஊர்வலம் வரும்போது பாடும்

பாட்டு பூசாரிப்பாட்டு என்று குறிப்பிடுகிறார். மற்ற பாடல்களைப் போலல்லாமல் இப்பாடல் பாடப்படும் சூழல் தனித்தன்மையோடு விளங்குவதால் இதனை விளக்கியிருக்கலாம்.

### பல்வகை விளையாடல்கள்

இந்நூலில் விளையாடும்போது பாடப்படும் பல்வகைப் பாடல்களைத் தொகுத்து வழங்கியுள்ளார். இதில் குழந்தை விளையாடல் பாடல்களை 5 வகையுள் பகுத்துக் கொடுத்துள்ளார்.

### குழந்தைகளின் உறவுகளைப் பற்றிய பாடல்கள்

இதில் தாய் தந்தையர், சகோதரர், சகோதரி, சுற்றம் பற்றி உறவு முறையோடு விளக்கும் பாடல்களைக் கொடுத்துள்ளார். சான்றாக, அம்மாவும் அப்பாவும், சவாரி போகும் தம்பி, பாட்டி, பாட்டி எங்குப் போகிறாய், அக்காள் வித்தியாசம் என்பன அமையும். இப்பாடல்கள் ஒரு வரிபாடிப் பின்னர் அதிலிருந்து கேள்வி எழுப்பித் தொடர்ச்சியாகப் பாடுவது போல அமைகிறது.

### குழந்தைப் பாடல்கள்

இத்தலைப்பின் கீழ், குழந்தையைப் பால் உண்ண அழைத்தல், கை வீசுதல், சாய்ந்தாடல், குழந்தைக்குத் தலை வாரி பின்னுதல், தவலைச் சோறு, தோள் வீசுதல், பிள்ளை பெறுதல் என்ற பல்வேறு தலைப்புகளில் உள்ள பாடல்களைக் கொடுத்துள்ளார்.

### தாலாட்டுப் பாடல்கள்

இத்தலைப்பில் குழந்தையைத் தாலாட்டித் தூங்க வைக்கும் போது பாடக்கூடிய பாடல்களைத் தொகுத்து வழங்கியுள்ளார்.

### எண்ணிக்கைப் பாடல்கள்

இத்தலைப்பில் எண்ணிக்கையை அடிப்படையாகக் கொண்ட பாடல்கள் உள்ளன. இதில் நாகப்பழம் எண்ணும் எண்ணிக்கை வாய்பாடு, ஒன்று, இரண்டு, ஐந்து பாஷைப் பாட்டுப் போன்றவை அடங்கும்.

### உணவுவகை பற்றிய பாடல்கள்

இதில் உணவு வகைகளைப் பற்றிக் குழந்தைகள் பாடும் பாடல்கள் அடங்கும். காபிப்பாட்டு, லட்டுப் பாட்டு, விருந்து

விமரிசை, கத்தரிக்காய்ப் பொறியல், நெய் ஊற்று, வடை, தோசை ஆகியவை வாயிலாக உணவின் அருமை விளக்கப்படுகிறது.

**விளையாட்டுப் பாடல்கள்**

குழந்தைகள் விளையாடும் விளையாட்டுக்களின் போது பாடப்படும் பாடல்கள் இங்கு விளக்கப்படுகின்றன. அட்டலங்காய், ஓடி விளையாடுதல், கல்லாங்காய் விளையாட்டு, பந்தாடுதல், கூழாங்கல் பாட்டு, பந்தடிபாட்டு, கண் கட்டி விளையாடல் போன்ற விளையாட்டுப் பாடல்களைத் தொகுத்து தந்துள்ளார். சில பாடல்களின் பாடபேதங்கள் அடிக்குறிப்பாக அப்பாடலின் கீழ் கொடுத்துள்ளது குறிப்பிடத்தக்கது.

**முடிவுரை**

இக்கட்டுரையிலிருந்து பின்வரும் முடிவுகள் பெறப் பட்டுள்ளன.

1. நாட்டுப்புறப்பாடல்களே செவ்வியல் இலக்கியங்கள் தோன்றுவதற்குக் காரணமாக அமைந்தன என்ற கருத்து பெறப்படுகிறது. இதன் வாயிலாக நாட்டுப்புற இலக்கியங் களுக்கும் செவ்வியல் இலக்கியங்களுக்கும் இடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகள் ஆய்வு செய்யப்பட்டு இரண்டிற்கு மான தொடர்பு வெளிக் கொணரப்பட்டுள்ளது.

2. நாட்டுப்புற இலக்கியங்கள் என்றால் வெறும் பாடல்கள் மட்டுமே என்று கருதப்பட்ட காலத்தில் கி.வா.ஜ. பழமொழிகள், விடுகதைகள் போன்றவற்றையும் கொடுத்துள்ளார்.

3. நாட்டுப்புறப்பாடல்களை இலக்கியத்திற்கு உயர்த்த வேண்டும் என்ற நோக்கில் சீர் பிரித்துப் பாக்களின் வடிவில் கொடுத்துள்ளார். சொற்களில் பாடலின் ஓசை கெடாமல் எதுகை மோனை கெடாமல் சிற்சில மாற்றங்களைச் செய்துள்ளார்.

4. பாடல்களைப் படிப்போருக்கு ஆர்வத்தைத் தூண்டும் வகையில் பாடல்களின் பொருளை மட்டும் விளக்காமல் சிறுசிறு கதைகளின் வாயிலாக நிலைக்கலன்களை அமைத்துள்ளார்.

5. மலையருவி நூலில் கொடுக்கப்பட்டுள்ள சொற்களின் தொகுதி வட்டார மொழி ஆய்வு செய்வோருக்குச் சிறந்த தரவு களாய் அமையும்.

## துணை நூற்பட்டியல்

1. ஜகந்நாதன், கி.வா., 1967, காஞ்சியிலும் இன்பம், சென்னை, அமுத நிலையம்.

2. ஜகந்நாதன், கி.வா., 1975, மலையருவி தஞ்சாவூர், தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையம்.

3. ஜகந்நாதன், கி.வா., 1983, ஏற்றப்பாடல்களும் தொழிலாளர் பாடல்களும், சென்னை, அமுத நிலையம்.

4. ஜகந்நாதன், கி.வா., 1983, தெய்வப் பாடல்கள், சென்னை, அமுத நிலையம்.

5. ஜகந்நாதன், கி.வா., 1984, பலவகை விளையாடல்கள் சென்னை, அமுத நிலையம்.

6. ஜகந்நாதன், கி.வா., 2001, தமிழ்ப் பழமொழிகள் நான்கு தொகுதிகள், சென்னை, ஜெனரல் பப்ளிஷர்ஸ்.

7. ஜகந்நாதன், கி.வா., 2002, நாடோடி இலக்கியம், சென்னை, அமுத நிலையம்.

### கட்டுரைகள்

1. ஜகந்நாதன், கி.வா., 1954, அம்மானை, கலைக்களஞ்சியம் தொகுதி 1, சென்னை, தமிழ் வளர்ச்சிக் கழகம்.

2. ஜகந்நாதன், கி.வா., 1955, ஓடப்பாட்டு கலைக் களஞ்சியம் தொகுதி 2, சென்னை, தமிழ் வளர்ச்சிக் கழகம்.

# நடையியல்

வே. சீதாலட்சுமி

கி.வா.ஜகந்நாதன் பல திறப்பட்ட பேராற்றலும் நூலாராய்ச்சி வன்மையும் தமிழ் இலக்கண, இலக்கிய நூல்களில் பரந்த ஞானமும், ஞாபகசக்தியும் உடையவர் என்று அவரைப் போற்றிக் கூறுவர் உ.வே.சா. 'தமிழ்க் காப்பியங்கள்' என்ற கி.வா.ஜ. எழுதிய நூலின் முன்னுரையில் இவ்வாறு கூறப்பட்டிருப்பதைக் காணலாம். உ.வே.சா. போற்றிக் கூறுமளவிற்குக் கி.வா.ஜ. வின் எழுத்து அமைந்திருப்பதிலிருந்து இவரது எழுத்தாற்றல் நன்கு வெளிப்படுகிறது.

நடை என்பது ஓர் எழுத்தாளரின் எழுத்தாற்றலை வெளிப்படுத்தும் ஒரு கருவி எனலாம்.

பல்வேறு இலக்கண இலக்கியச் செய்திகளை அனைவரும் ஆர்வத்துடன் படிக்குமாறு எழுதியிருக்கிறார் கி.வா.ஜ. ஒவ்வொரு கட்டுரையிலும் பல்வேறு விதமான உத்திகளைக் கையாண்டு, தன் நடையால் அனைவரையும் ஈர்த்தவர் கி.வா.ஜ. இவர் எழுதிய 9 நூல்கள் இக்கட்டுரைக்குப் பயன்படுத்தப் பட்டுள்ளன.

அவை 1. புதுமெருகு, 2. வாழ்வரசி, 3. பாரிவேள், 4. மல்லிகை மாலை, 5. கற்பகமலர், 6. நாயன்மார் கதை, 7. தமிழ்க் காப்பியங்கள், 8. வாருங்கள் பார்க்கலாம், 9. விடையவன் விடைகள்.

பல்வேறு விதமான இலக்கணச் செய்திகளையும் சாதாரண மக்களும் படித்துப் புரிந்து கொள்ளுமாறு இவரது நடை எளிமையாகக் காணப்படுகின்றது. வானொலி உரைகளாகவும் சொற்பொழிவுகளாகவும் அமைந்திருக்கும் இக்கட்டுரைகள் இவரது எழுத்தும், பேச்சும் ஒரே நடையைக் கொண்டவை என்பதை நிரூபிப்பது போல் காணப்படுகின்றன. இவரது நடையில் காணப்படும் பல்வேறு விதமான உத்திகளை இங்குக் காணலாம்.

## தலைப்பு

பல்வேறுபட்ட செய்திகளை இவருடைய நூல்களில் காணலாம். அந்தச் செய்திகளைக் கூறும்போது, தலைப்புகளைச் சிறப்பான தொடர்களால் அமைத்து ஆர்வமூட்டுவனவாகக் கூறுவதைக் காணலாம். 'வாருங்கள் பார்க்கலாம்' என்ற நூல் பெயரே எங்கேயோ பல ஊர்களுக்கு நம்மை அழைப்பதை உணர்த்தி விடுகிறது. அப்படியொரு பக்திச் சுற்றுலாவிற்கு அழைத்துச் செல்லும்பொழுது வெறுமனே ஊர்களின் பெயர்களை வரிசை யாகத் தொகுத்துச் சொல்லாமல், அவ்வூர்ச் சிறப்புப் புலப்படுமாறு நிகழ்ச்சிகளாலும், அவதாரங்களாலும், பிற சிறப்புகளாலும் அவ்வூர்களுக்குத் தலைப்பிட்டிருக்கிறார். மதுரை என்பதை மண் சுமந்த மதுரை என்றும், எர்ணாகுளத்தைப் படகுப் பயணம் என்றும், நிறைசெல்வத் திருவாரூர் சோதியும் வீதியும், (ஆச்சாள்புரம்) என்றும் குறிப்பிட்டுச் செல்வதைக் காணலாம்.

இதைப் போன்றே பாரியின் வரலாற்றைக் கூறிய பாரிவேள் என்ற நூலில் ஒவ்வொரு இயலுக்கும் பின்வருமாறு தலைப்புகள் அமைத்திருக்கிறார். பறம்பு மலை, மணம் மறுத்தல், முற்றுகை, வெற்றி, வஞ்சகச் செயல், துயர் வெள்ளம், மணமுயற்சி, கபிலர் மறைவு, திருமணம் என்று தலைப்புகள் இட்டு அத்தலைப்பு களிலேயே வரலாற்றை உணர்த்திவிடுகிறார்.

## சூழலுக்கு ஏற்ற நடை

தாம் எழுதும் செய்திக்கேற்ற நடையினை அமைப்பதை ஒரு வரலாற்றாசிரியன் போல் செய்கிறார் கி.வா.ஜ.

> **மொகலாய மன்னர்.... ஆஸ்தானத்துக்கு வரும்போது நடக்கும் மரியாதைகளையும் ஜனங்கள் அவருக்குப் பயபக்தியோடு சலாம் செய்வதையும் பார்த்தார்**(மல் 21)

என்று கூறுமிடத்தில் இடத்திற்குப் பொருத்தமான சொற்களை அமைப்பதைக் காணலாம்.

## வருணனை விளக்கம்

இயற்கையை வருணிப்பதில் கி.வா.ஜ.வின் திறமே அலாதி. அப்படியே கண் எதிரில் கொண்டு வந்து நிறுத்துமாறு இயற்கை நிகழ்ச்சிகளை வருணிப்பதை இவர் தனித் திறமையாகக் கொண்டுள்ளார்.

> **அடர்ந்த காடு தான் இது. ஆனாலும் மனிதர் இயங்கும்படி இடையிடையே வழிகள் இருக்கின்றன.**

எங்கே பார்த்தாலும் பலா மரங்கள், கனிந்து பழங்கள் வெடித்து அவற்றிலிருந்து சாறு வழிந்து ஓடுகிறது. அந்தப் பழத்தைக் கண்டு, தொட்டு தொட்டுப் பார்க்கிறது ஒரு குரங்கு. தொட்ட விரலை நாவில் வைத்துக் கொள்கிறது. ஆ! அது குதிக்கிறதைப் பார்த்தால் அதற்குள்ள மகிழ்ச்சி நன்றாகப் புலனாகிறது. தன் கையால் பலாப்பழத்தின் வெடிப்பைப் பிளந்து கனிந்த சுளைகளை எடுத்துத் தின்கிறது. இப்போது கண்ணை மூடிக்கொண்டபடியே பலாப்பழத்தின் சுவையை அனுபவிக்கிறது (பாரி....)

சில சொற்களாலும் காட்சியைப் படம்பிடித்துக் காட்டுகிறார்.

அழகிய மலர் மணம் செறிந்து தளதள வென்று கண்ணையும் கருத்தையும் கவருகிறது (மல். 12)

என ஒரு சிறிய மல்லிகைப் பூவை இவர் வருணிக்கும் காட்சி அபாரம்

ஒரு சின்ன மலர். பங்களாக்களிலெல்லாம் தொங்கும் கொடிகளில் இருக்கின்றனவே, அந்த மாதிரி கண்ணைப் பறிக்கும் வர்ணங்கள் இல்லை; தாமரைப்பூவைப் போன்ற பெரிய உருவமும் இல்லை. சுத்த வெள்ளை நிறம்; சிறிய உருவம். இதற்குள்ளே.....

(மல் 1) என்று அடுக்கிக் கொண்டே செல்கிறார். இதைப் போன்றே தோற்றத்தை வருணிப்பதிலும் தேர்ந்த சொற்களை அமைக்கிறார். உ.வே.சா. பற்பை வர்ணிப்பைச் சிறந்த எடுத்துக் காட்டாய்க் கூறலாம்.

கையிலே கழியை ஊன்றிக் கொண்டு அறிவினால் பெருத்த தலைக்கு மேலே உருவினாற் பெருத்த தலைப் பாகை தனி அடையாளமாக விளங்க, மேடை மேல் ஐயரவர்கள் ஆஜானுபாகுவாக நின்றபோது பொதிய மலை தான் நிற்கிறதோ என்று தோன்றியது (மல். 178)

## புலவர் அறிமுகம்

பழையகாலத்து ஆசிரியர்கள் நிலையைக் கூறும்பொழுது அக்கால மக்களின் தோற்றத்தை எள்ளலாக வருணிப்பதைக் காணலாம்.

மற்ற உத்தியோகஸ்தர்களெல்லாம் தொப்பியும் நிஜாரும் அணிந்து கொண்டு டாக் டீக் என்று உலவும் உலகத்தில் மூலைக் கச்சத்தையும், அங்க வஸ்திரத்தையும்

ஈசல் சிறகை விரித்துப் பறப்பது போல் பறக்கவிட்டுக் கொண்டு செல்லும் வாத்தியார் ஐயா நிலை பரிதாபகரமானது தான் (மல். 98)

மற்றொரு முறையிலும் புலவரை,

குமர குருபர ஸ்வாமிகள் என்று ஒரு பெரிய புலவர் தமிழ் நாட்டில் இருந்தார். பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் பாட புஸ்தகங்களில் வாசிக்கும் 'நீதிநெறி விளக்கம்' என்ற நூலை இயற்றியவர் அவரே (மல் 21)

என அறிமுகம் செய்கிறார் கி.வா.ஜ. வாத்தியார் என்றால் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கான கருத்துக்களை அடுக்கிக் கொண்டே போகிறார்.

வாத்தியார் ஐயா மனிதருட் சிறந்தவராக இருக்கிறார். போதுமா? அவர் நன்றாகப் படித்திருக்க வேண்டும். பல நூல்களை வெறுமனே கணக்குப் பண்ணி படித்திருந்தால் மட்டும் போதாது. படித்ததைத் தெளிவாகத் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். தெளிவு இல்லாமல். அவருக்கே சந்தேகம் இருந்தால் அவரிடம் படிக்கும் மாணவர்கள் உருப்படுவது எப்படி? ஆகவே அவர் கலைகள் பயின்றிருக்க வேண்டும்; பரீக்ஷை கொடுத்துப் பட்டம் பெற்றிருந்தால் இந்தக் காலத்துக்குப் போதுமானது. அந்தக் காலத்தில் இதெல்லாம் பலிக்காது. படித்ததைச் சந்தேக விபரீதமின்றிப் படித்திருக்க வேண்டும். நன்றாகப் படித்தவர்கள் எல்லாம் வாத்தியாராக முடியுமா? எவ்வளவோ படித்தவர்களைப் பார்க்கிறோம் (மல். 101)

என்று அடுக்கிக் கொண்டே செல்கிறார்.

## அணிகள்

**தற்குறிப்பேற்ற அணி:** இது இவர் நடைக்கு ஏற்றம் தருகிறது. முல்லைக் கொடி.... மெல்லிய காற்றில் அது திரும்பித் திரும்பி அசைந்தது; வளைந்து நிமிர்ந்தது. அப்போது வழியில் போவோரை எனக்குத் துணை புரிய வாருங்கள் என்று அழைப்பது போல இருந்தது (பாரி. 21)

**உவமை அணி:** இவர் நடையை உயர்த்திக் காட்டும் உவமை அணிக்குச் சில சான்றுகள்.

மின்சார ஓட்டம் போல் இருக்கும் இவரது நடை கட்டுரைகளுக்குச் சுவை ஊட்டுகிறது. (புது. 62)

உவமையிலும் நடைநயத்தைக் காட்டுகிறார் கி.வா.ஜ.

*அவர்கள் செவி வழியே அம்பு போல நுழைந்து உள்ளத்தே பாய்ந்து புண்படுத்தியது. புண்ணிலிருந்து பீரிட்டெழும் குருதி போலப் பொறாமைத் தீ புறப்பட்டது (புது. 17)*

உவமையைத் தம் சொல் நயத்தால் விளக்கிக் கூறுவதையும் இவருடைய உத்திகளில் ஒன்றாகக் காணலாம்.

*வித்து நட்டு, நீர் ஊற்றச் செடியாகி மரமாகிப் பூத்துக் காய்த்துக் கனிந்தது போலின்றி, மாய வித்தைக் காரர்கள் கனிகளுடன் மாஞ்செடியை வருவித்தாற் போல மகாசக்தியின் திருவருளால் விளைவு விரைவில் வந்தது என்பது கருத்து (நாயன். 15)*

உவமையைக் கூறும்பொழுது, அதைக்காட்டிலும் உயர்வுடையது இது என்று கூற வந்த பொருளை உணர்த்திச் செல்கிறார். உ.வே.சா. அவர்களைக் கொலம்பஸுக்கு இணையாகக் கூறி விட்டு, ஆனால் இந்த கொலம்பஸ் இல்லாவிட்டால் வேறொருவன் கண்டு பிடித்திருப்பான். ஆனால், ஐயரவர்கள் கண்டெடுத்த இலக்கியச் செல்வமோ அத்தகையதன்று. கறையான்களும் இராமபாணப் பூச்சிகளும் ஏடுகளை அழித்துக் கொண்டிருந்தன. அவற்றை இறவாமல் எடுத்துப் பாதுகாக்கும் நூல்களுக்குக் கணக்கு வழக்கே கிடையாது என்று (மல். 168) உறுதிபடக் கூறுவதைக் காணலாம்.

**உவமைகளை அடுக்கல்**

தொடர்ந்து உவமைகளை அடுக்கித் தான் கூற வந்த பொருள் எத்தகைய சிறப்பு உடையது என்பதை உணர்த்துகிறார் கி.வா.ஜ.

*அருகில் ஒரு முல்லைக் கொடி வளர்ந்திருந்தது; ஆனால் அருகில் பற்றுக்கோடு ஒன்றும் இல்லாமல் அது காற்றில் அசைந்து கொண்டிருந்தது. தளர்நடை பழகும் குழந்தை தட்டுத் தடுமாறி வந்து கீழே விழும் நிலையில் இருப்பது போல அந்தக் கொடி தளர்ந்து நின்றது. குருடன் ஒருவன் கால் தளர்ந்து எதையேனும் பற்றிக் கொள்வதற்காக நாற்புறமும் கையால் வெறு வெளியைத் துழாவுவது போல அந்தக் கொடி அசைந்தது. நடுவழியில் துணையின்றி நிற்கும் கன்னிப் பெண்ணைப் போல அது அலைப்புண்டு நின்றது (பாரி. 21)*

### உவமை-வினா அடுக்கல்

உவமைகளை வினாக்களாக அடுக்கிக் கொண்டே போகும் உத்தியையும் இவரிடம் காணலாம்.

முல்லைக்குத் தேர் கொடுத்த பாரி பெற்ற இன்பத்தைக் கூறும் பொழுது, "அப்போது அவனுக்கு உண்டான இன்பத்தை அளந்து அறியும் ஆற்றல் யாருக்கு உண்டு. ஆழ்கடலில் மூழ்கி உயிர் போகும் தறுவாயில் இருந்த ஒரு குழந்தையை எடுத்துக் கரையில் விட்டது போன்ற உவகை அவனுக்கு உண்டாயிற்று என்று சொல்லலாமா? பல நாள் பசித்திருக்க ஏழைக்கு இலை நிறையச் சோறு போட்டதைப் போன்றிருந்தது என்று கூறலாமா? தனக்கு ஏற்ற மணாளன் கிடைக்காமல் நின்ற கன்னி ஒருத்திக்கு ஓர் ஆடவனை மணம் செய்வித்தது போன்றது என்று இயம்பலாமா? ஆனால் ஒரு கொடி தளர்வது கண்டு அதைத் தாங்கத் தன் தேரை நிறுத்திய பாரியின் செயலையும் அதற்குக் காரணமாக இருந்த அவனது உயர்ந்த அருள் உள்ளத்தையும் தெரிந்து கொள்ள முடியாது. அவற்றிற்கு அவைகளே ஒப்பு என்று உவமை கூற முடியாது" என்று முடிவு கூறி விடுவதையும் இதில் காணலாம் (பாரி. 24).

### உவமை வருணனை

உவமையைச் சில இடங்களில் வெறுமனே கூறாமல் வருணித்துக் கூறுவதும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். காலம் தன்னுடைய வேலையை நடத்திக் கொண்டே வந்தது. கவிதை செய்யுளாயிற்று. கட்டுப்பாடுகளும் கோணல்களும் கணக்கின்றிப் புகுந்து கொண்டன. யாப்பு நயங்களும் அலங்காரங்களும் செய்யுளை நிரப்பின. முழம் போட்டு அளப்பதைப் போலப் பாடல்களை அளந்து பார்த்து இயற்றினார்கள். கருத்தைக் காட்டிலும் சொல்லுக்கும் சொற்களின் கட்டுக்கோப்புக்கும் அலங்காரத்திற்கும் கௌரவம் உண்டாயிற்று. கம்பீரமான கங்காப் பிரவாகமாக இருந்த கவிதை போய் மூலைக்கு மூலை திரும்பித் தேங்கி வற்றியும் குழம்பியும் செல்லும் சிறு வாய்க்காலைப் போன்ற செய்யுள் உண்டாயிற்று.

### எள்ளல்

உவமையிலும் எள்ளலை அமைப்பதை இவரிடம் காணலாம். "தொழிற்சாலையில் பாண்டங்களோ, வேறு பண்டங்களோ அச்சில் வார்த்து ஆயிரக்கணக்காகத் தள்ளுகிறார்களே, அந்த மாதிரி ஆகிவிட்டது கவிதைத் தொழில்" (மல். 30).

### உவமை விளக்கம்

உவமை கூற வரும்போது அந்த உவமையை விளக்குவதன் மூலம் செய்தியைத் தெளிவாக எடுத்துக் காட்டுவதை இவர் நடையில் காணலாம்.

"இந்த மாதிரி அலங்காரங்களையும், சொல்லில் வரும் சமற்காரங்களையும் அமைப்பதற்கும் ஒரு பழக்கம் வேண்டும். கழைக்கூத்தாடி டபடபவென்று காதை அடைக்கும்படிப் பறையை முழக்கிக் கொண்டும், அதற்கு மேல் தன் தொண்டைப் பலத்தை வெளிப்படுத்திக் கொண்டும் உடம்பை வளைக்காதபடியெல்லாம் வளைத்துக் காட்டுகிறானே, அந்த வித்தையைப் பார்த்து நாம் வியக்கவில்லையா? அதைச் சேர்ந்தது இத்தகைய செய்யுள் வித்தை. முதலில் சொன்ன கவிதையோ அழகும், மென்மையும் நிரம்பிய அணங்கு ஒருத்தி இன்னிசைக் கீதத்தினிடையே மெல்லென்று நடனம் ஆடினால் எப்படி இருக்கும்; அப்படி இருக்கும் அநுபவத்தைத் தருவது. கழைக்கூத்தாடியின் வித்தையில் ஒவ்வொரு கணமும் அவனைத் தனியே நின்று பார்க்கிறோம். மெல்லியலின் இன்னிசைக் கூத்திலே நம்மையே மறந்து ஏங்கியே போகிறோம்."

### முரண் தன்மை

முரண்பட்ட செய்தியை உவமையாகக் கூறி நயமாக விளக்குவதையும் இவர் உத்தியாகக் கையாளுகிறார். அப்படி எழுதினால் விளக்கெண்ணைப் பற்றி எழுதினாலும் தேன் போல் அனுபவிக்கலாம் (மல்-69).

### உருவகம்

தன்னையும் பாடப்பகுதியோடு இணைத்து, உருவகத்தினுள் செல்வதை இவர் உத்திகளுள் ஒன்றாகக் காணலாம்.

> **பெரியபுராணம் என்னும் விமானத்தில் சேக்கிழார் என்னும் பெரும்புலவர் என்னை ஏற்றிச் சென்றார்** (வா.பா. 3)

ஏகதேச உருவகத்தையும் இவர் எழுத்தில் காணமுடிகின்றது.

> **கலைப் பொருள்களிலேயே சிறந்தது கவிதை. கலை மரத்திலே விளைந்து பலபல பொருள்களிலே வண்டினங்களை அழையாது அழைக்கும் ஆற்றல் வாய்ந்தது** (மல். 13)

என உருவகத்தையும் சுவையான தொடராகக் கூறிச் செல்வதை இவரிடம் காணலாம். புலவர்கள் தாம் அறிந்த சிறப்புகளைத்

தன் வாயே முரசாக, நாவே குறுந்தடியாகக் கொண்டு அறைந்து பரப்பும் இயல்புடையவர்கள் அல்லவா (பாரி. 38) என்பது சான்று.

**நகைச்சுவை**

நகைச்சுவையோடு செய்தியைக் கூறிச் செல்வதிலும் வல்லவர் கி.வா.ஜ. சான்று:

> **'நல்வழியை ஆரம்பிக்கும்போது அதன் காப்புச் செய்யுளாகிய விநாயக வணக்கத்தைப் பிள்ளைகள் படிப்பார்கள். 'பாலும் தெளிதேனும்' என்று அந்தக் கடவுளைப் ப்ரார்த்தித்துக் கொள்வார்கள். நாலு பண்டங்களை விநாயகனுக்குக் கொடுத்துவிட்டு மூன்று தமிழர்களைக் கேட்பார்கள். விநாயகர் தம்முடைய பங்கிலே லாபம் இருப்பதை எண்ணிச் சங்கத் தமிழ் தந்து விடுவார் என்ற ஞாபகமோ என்னவோ, அது கிடக்கட்டும்'** (மல். 158)

பழங்காலத்தில் தமிழில் வசன நடை இருந்ததா என்ற ஐயம் கொண்டவர்களிடம் தனக்கு ஏற்பட்ட சினத்தை நகைச்சுவையாக மாற்றிவிடுவதைக் காணலாம்.

> **அந்தக் காலத்தில் வசன நடை உண்டா? இந்தக் கேள்வியை என் நண்பர் கேட்கிறார். அவர் இப்படிக் கேட்பதை விடத் 'தமிழர்கள் அந்தக் காலத்தில் பேசினார்களா? என்று கேட்கலாம்; அல்லது 'தமிழர்களுக்கு வாய் இருந்ததா? என்று கூடக் கேட்கலாம்** (மல். 41)

அந்தக் கால மக்களுக்கிருந்த சிறுகதை மோகத்தையும் நகைச்சுவையோடு சுட்டிக்காட்டுகிறார்.

> **வரவரத் தமிழ் எழுத்தாளர்களுக்குச் சிறுகதைப் பித்துப் பிடித்துவிட்டது..... இக்காலத்தில் தமிழ் எழுத்தாளன் என்று ஒருவன் பெயரெடுக்க வேண்டுமானால் அவன் முதலில் சிறு சிறு கதைகளை எழுத வேண்டும். பிறகு அவன் எதையாவது எழுதிக் கொள்ளட்டும். சிறுகதை எழுதுபவனைத் தான் ஜனங்கள் கவனிக்கிறார்கள்** (மல். 35)

காலத்துக்கேற்ற செய்தியைத் தரும் எழுத்தாளர்கள் தான் பிழைக்க முடியும் என்று கூறுமிடத்திலும் நகைச்சுவையைச் சேர்த்துத் தருகிறார்.

**இப்படி இவன் எழுத்து இருந்தால் போர்க்காலத்தில் ஜீவித்திருந்ததற்குப் பலன் உண்டு. இல்லாவிட்டால் பேசாமல் பேனாவைத் தூர எறிந்துவிட்டுத் துப்பாக்கி எடுத்துக்கொண்டு மிலிடரிக்கு ஆள் சேர்க்கும் காரியாலயத்தை நோக்கி நடந்து விடலாம்** *(மல். 26)*

காலத்தின் கோலமும் இந்நகைச்சுவையில் அகப்படுகிறது.

**அரிச்சுவடியின் ஆரம்பத்தில் அணில், ஆடு, இலை, என்ற பாடங்களுக்குப் பதில் அபிஸீனியா, ஆப்ரிக்கா, இத்தாலி என்ற பாடங்கள் வந்துவிடுமோ என்றுகூட எண்ணும்படியாகிவிட்டது**

என்பதில் இதனைக் காணலாம். குறிப்பாகச் சிலவற்றைச் சொல்வதற்கு இவருக்குக் கைகொடுக்கிறது நகைச்சுவை.

**முதல்நாள் செய்தித்தாளாக மதிப்புப் பெற்ற அது மறுநாள் புளி மடிக்கும் காகிதமாகிவிடுகிறது**

*(கற்பக. 7)*

## மரபுத் தொடர்கள், பழமொழிகள்

மரபுத் தொடர்களும், பழமொழிகளும் எழுதுபவர் கூற வந்த பொருளைக் குறிப்பால் உணர்த்துவதில் குறிப்பிடத்தக்க இடம்பெற்று விளங்குவன. அவற்றை ஏற்ற இடமறிந்து பயன் படுத்துவோர்க்கு ஏற்ற வகையில் பொருளை வெளிப்படுத்து வதிலும் தன் எழுத்துத் திறமையைக் காட்டியிருக்கிறார்.

(சமணர்கள் ஏடு) கையில் கிடைக்காமல் நீரில் அடித்துச் செல்லப்பட்டது. அது அவர்களை நட்டாற்றில் விட்டுப் போய் விட்டது (நாயன்மார் 76). நீரில் அடித்துச் செல்லப்பட்ட ஏடு அவர்களை நட்டாற்றில் விட்டுவிட்டதாகக் கூறுவது சுவை மிக்கதாகும். இதைப்போன்றே,

**புற்றீசலைப் போலச் சில நேர வாழ்வுள்ள புதிய விஷயங்களைப் பற்றிப் புகுத்துவதும்** *(மல். 107)*

**'யானையைக் கட்டித் தீனிப் போடுவது** *(மல். 157)*

என்பன போன்ற மரபுத் தொடர்களையும் கையாளுகிறார்.

பழமொழிகளைக் கையாளும்போது அதற்கான விளக்கத் தையும் கூறிச் செல்கின்றார். பெரியபுராணத்தில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் புராணம் மிகப் பெரியது. 4287 பாடல்கள் அடங்கிய பெரியபுராணத்தில் 1256 பாடல்கள் கொண்டது ஞானசம்பந்தப் பெருமானின் வரலாறு. இதனை

எண்ணியே 'பிள்ளை பாதி, புராணம் பாதி' என்ற பழமொழி வழங்கி வருகிறது (நாயன் 3). மேலும்,

> வல்லான்வகுத்ததே வாய்க்கால் (தமிழ். 17)
>
> ஏற்றப்பாட்டுக்கு எதிர்ப்பாட்டில்லை (புது. 83)
>
> மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும்
> முடிச்சு போட முடியுமா? (மல். 88)
>
> கோவில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் (மல். 97)

என்பன போன்ற பழமொழிகளையும் இவர் எழுத்தில் காணலாம்.

### மரபுச் செய்திகள்

வழிவழியே மக்களால் கூறப்பட்டு வரும் மரபுச் செய்திகளையும், சில இடங்களில் தாமறிந்த செவிவழிச் செய்திகளையும் பொருத்தமான இடங்களில் குறிப்பிடுகிறார்.

> இசைக்கு ஆதாரமாக இருப்பவை ஏழு நரம்புகள் அல்லது ஏழு சுரங்கள்; இதனால் ஏழிசையென்று சொல்வது ஒரு மரபு (நாயன் 54)
>
> திருமாலைப் புண்டரீகாட்சன் என்றும் கமலக்கண்ணன் என்றும் கூறுவது மரபு. அதனை ஒட்டியே தாமரைக் கண்ணன் என்றார் திருவள்ளுவர் (கற்பக. 104)

என்று மரபுச் செய்திகளைச் சுட்டுவதைக் காணலாம்.

### செவி வழிச் செய்திகள்

திருக்கோலக்கா கோவில் பற்றிக் கூறுமிடத்து, கையிலே அத்தலத்து இறைவன் தாளங்களை அருள, அந்தத் தாளத்திற்கு நல்ல ஓசை உண்டாகும்படி அங்கே எழுந்தருளிய அம்பிகை அருள் செய்தாள் என்று ஒரு வரலாறு வழங்குகிறது. இப்போது திருக்கோலக்காவைத் தாளமுடையார் கோயில் என்றும், அங்கே கோயில் கொண்டுள்ள இறைவனைச் சப்தபுரீசர் என்றும், அம்பிகையை ஓசை கொடுத்த நாயகி என்றும் வழங்குகின்றனர் (நாயன் 23) என்று பெயர்க் காரணத்தை மக்கள் வழக்கிலுள்ள செய்தி கூறி விளக்குகின்றார். சைவ சமயப் பெரியோர் நால்வரைக் கூறுமிடத்து, சைவ சமய ஆசிரியர்கள் நால்வரையும் அவதார புருஷர்களாகவே கொள்வது ஓர் வழக்கு. அப்பர் கைலையில் இருந்த சித்தர் ஒருவருடைய அவதாரமென்றும் பெரியோர்

கூறுவர் (நாயன் 44) என்று வாய்மொழிச் செய்தியைச் சேர்த்துத் தருகிறார்.

### பழைய இலக்கியச் செய்திகள் விளக்கம்

சங்க இலக்கியச் செய்திகளைத் தமிழ் இலக்கியம் பயிலாத மக்களும் படித்து எளிதில் புரிந்து கொள்ளுமாறு விளக்கிச் செல்வதை இவர் எழுத்தில் காணலாம்.

> **"பாணர்களுடன் வந்து பாடி ஆடும், மகளுக்கு விறலி என்று பெயர். பாணனுடைய மனைவி அவள். அவளைப் பார்த்து 'நீ இன்ன செல்வரிடம் சென்று பாடினால் உனக்குப் பரிசில் தருவார்' என்று பாடுவது ஒரு முறை அதை விறலியாற்றுப்படை என்று சொல்வார்கள்."** (கபிலர் பாட்டு, ப. 31 பாரி)

### தொடர் நயம்

இரண்டு வேறுபட்ட செய்திகளை ஒரே இடத்தில் தொடர்புபடுத்தி அமைக்கும் திறனை இவரிடத்தில் நிறையக் காண முடிகின்றது.

> **அவர் மலை மீது ஏறிக் கொண்டிருந்தார். அவருடைய உள்ளமாகிய சிங்காதனத்தில் பாரிவேள் ஏறிக் கொண்டிருந்தான்** (பாரிவேள் 14)

ஏறுதலாகிய ஒரு சொல்லைக் கொண்டு கபிலர் உள்ளத்தில் பாரி இடம்பிடித்த செய்தியை நயமாகக் கூறுகிறார் கி.வா.ஜ.

> **'இனி வட்டாடுதலை விளையாட்டிற்கும் செய்யேன்' என்று கூறும்போதே அவன் கண்களில் நீர் துளித்தது. தாமப்பல் கண்ணனார் கண்களிலோ வெள்ளம் பாய்ந்து அதனை வரவேற்றது** (புது. 57)

இருவர் கண்களில் நீர் துளித்தது என்று கூறிச் செல்லாமல் தாமப்பல் கண்ணனார் கண்களில் வெள்ளம் பாய்ந்தது என்று அவரின் உணர்ச்சி மிகுதியைப் புலப்படுத்திக் காட்டுகிறார் கி.வா.ஜ.

> **அவனோ தன் கோபத்தைச் செயலில் காட்டாமல் அடங்கினான். இவரோ அடங்காமல் வசைமாரி பொழிந்தார்** (புது. 53)

அடங்கினான், அடங்காமல் என்ற இரு உடன்பாடு மற்றும் எதிர்மறைச் சொற்கள் நயத்தை ஏற்படுத்துகின்றன.

**அவர் நெற்றியில் புறப்பட்ட ரத்தத் துளிகள் அவன் உள்ளம் முழுவதையும் கறையாக்கி, அவன் உடம்பையும் குன்ற வைத்துவிட்டன** (புது 52)

அவர் மேல் ஏற்படுத்திய காயம், அவன் உள்ளத்தில் கறை ஏற்படுத்தி விட்டது என்று கூறுவது நயம் மிக்கது.

**பிசிராந்தையார் அறிவுடை நம்பியாகிய யானையைத் தம் அறிவுரைக் கயிற்றினால் கட்டிவிட்டார். அதனால் யானைக்கும் நன்மை; நாட்டுக்கும் நன்மையே உண்டாயிற்று** (புது 46)

உருவகத்தால் இத்தொடர் நயமுறுகிறது.

யமன் வாயை நோக்கிச் சென்ற கவளம் அந்தரத்திலேயே நின்றது (புது 39)

யமனிடம் இருந்து உயிர் மீண்ட நிலையை யமனுக்கு உணவு கிடைக்காமலாகிவிட்டது என்று கூறும் தொடர் சிறப்பானதாகும்.

**அரசனை நோக்கிச் செல்லும் அப்புலவரைச் சூழ்ந்த கூட்டம், யமனை நோக்கிச் செல்லும் இளந்தத்தனை அணுகியது** (புது 38)

நோக்கிச் செல்லும் என்ற சொற்றொடர் மீண்டும் மீண்டும் வந்து தொடரில் சுவை ஏற்படுத்தியுள்ளது.

ஒரு செய்தியைக் கொண்டு செல்லும் முறையில் இவரது நடையில் சுவை காணலாம்.

**பாலை நிலத்தையும் கடந்து, மருத நலத்து வழியே சென்று சோழ நாட்டையும் கடந்து, அப்பால் மறவர் வாழும் இடங்களையும் கடந்து பாண்டி நாட்டை அடைந்தார்** (நாயன்மார். 52)

பாண்டி நாட்டை அடைந்தார் என்று வெறுமனே கூறாமல், எவ் வெவற்றையெல்லாம் கடந்து பாண்டி நாட்டை. அடைந்தார் என்று கூறுவது படிப்போர்க்குச் சுவை தருவதாகும்.

சைவ நெறி மங்கியது என்பதை உணர்த்த,

**வேத நெறியும் சைவ நெறியும் மங்கின சைவம் சிறந்து வளர்ந்த அந்த நாட்டில் இப்போது அது ஒளிந்து வாழலாயிற்று** (நாயன்மார் 49)

என்று கூறும் தொடர் நயமுடையதாகும்.

மேலும், "சில கட்டுரைகள் தீயை கக்கும்" (மல் 67) என்பன போன்ற சொற்றொடர்கள் குறிப்பால் அதன் தன்மையை உணர்த்த வல்லன.

### அடுத்த செய்தியை ஆரம்பித்தல்

ஒரு செய்தியைக் கூறி, அடுத்த செய்தியைத் தொடங்குமுன், "இனி, சரித்திரத்திற்கு வருவோம்" (மல். 54) என்று படிப்பவர் களை அடுத்த செய்திக்கு அழைத்து வருவதைக் காணலாம்.

### பேச்சு வழக்கு நடை

எழுதிக் கொண்டே செல்லும்பொழுது இயல்பாக யாருடனோ உரையாடுவது போன்று இடையே எழுதிச் செல்வதையும் இவரிடத்துக் காணலாம். சான்று:

> **ஆனால் எனக்கு ஒன்று தோன்றுகிறது உங்கள் அபிப்ராயத்துக்குப் பொருத்தமாயிருந்தால் வைத்துக் கொள்ளுங்கள் இல்லாவிட்டால்.... நான் சொல்லு வானேன்? உங்கள் இஷ்டம்'.**

### தொடர்புடைய செய்தி தெரிவித்தல்

ஒரு செய்தியைக் கூறிவிட்டு அதனுடன் மறைமுகத் தொடர்புடைய மற்றொரு செய்தியைக் கூறும், இவரது பாங்கு குறிப்பிடத்தக்கது.

தொல்காப்பியத்தில் கூறப்படும் நான்கு பகுப்பையும் விளக்கி இறுதியில் அவருக்கு முன்பே இச்செய்திகள் கூறப் பட்டிருப்பதென்பதைக் கூறுவதற்கு,

> **மற்றொரு விஷயம்: இந்தப் பகுப்பு தொல்காப்பியராலே முதல் முதலாக அமைக்கப்பட்டது என்று சொல் வதற்கில்லை. அதற்கு முன்பே கூறப்பட்டதென்று தெரிகின்றது**

என்று கூறுவதைக் காணலாம்.

### தொடர்கள் அமைப்பு முறை

***சிறு தொடர்கள்:*** செய்திகளைக் கூறிச் செல்லும்பொழுது, இடையிடையே சிறுசிறு தொடர்கள் அமைத்துப் படிப் போர்க்குச் சுவை ஏற்படுத்துவதை இவர் எழுத்தில் காணலாம்.

> **நாட்கள் சென்றன; வாரங்கள் கடந்தன; பல மாதங்கள் கழிந்தன. பறம்பு மலை நின்றது; அதனை முற்றுகையிட்ட படைகளும் அதனடியிலே**

*கிடந்தன; வீணே சோறுண்டு பொழுது போக்கிக் கிடந்தன; ஒரு வருஷம் ஆயிற்று; இரண்டு ஆண்டுகள் கடந்தன (புது 24)*

என்பது எடுத்துக்காட்டு. பாரியின் கொடைத்திறனை விளக்குமிடத்திலும்,

*புலவருக்கும் பாணருக்கும் விறலியருக்கும் அவன் அளிக்காத பொருள் இல்லை. பொன் கொடுப்பான், பொருள் கொடுப்பான்; ஊர் அளிப்பான், நாடுநல்குவான்; குதிரையும், யானையும் கொடுத்து உதவுவான்; அவர்கள் வேண்டினால் தன்னையே கொடுக்கவும் முன்வருவான் (புது. 17).*

என்று கொடைத்திறனை அடுக்கிச் செல்வதைக் காணலாம்.

### எண்ணுத் தொடர்கள்

எண்ணும்மைகளை அமைத்து எழுதிச் செல்லுமிடத்தும் சுவை ஏற்படுத்துவதை இவரிடத்துக் காண முடிகின்றது.

*பாரியின் ஆசிரியராகவும், அமைச்சராகவும், நண்பராகவும், அவைக்களப் புலவராகவும் விளங்கலானார் கபிலர் (பாரி 18).*

### உணர்ச்சி நடை

தாம் கூறிச் செல்லும் செய்தியைப் பொறுத்துத் தம்மை அறியாமல் உணர்ச்சி வசப்படுவதை இவரிடம் காணலாம். இதில் இருவகையான நடைப்பாங்கை உணர முடிகிறது. கூறவந்த செய்தியின் இடையே வரும் உணர்ச்சி வெளிப்பாடு, கூறவந்த செய்தியைப் பொறுத்துத் தம் மனதில்தோன்றும் உணர்ச்சி வெளிப்பாடு. பாரி வஞ்சகர்களால் கொலையுண்டது பற்றிக் கூறுமிடத்து,

*பறம்பு மலையின் மேல் மரங்களடர்ந்த சூழலில் தன்னைச் சேர்ந்தவர் யாவரும் இல்லாதபோது, பாரி வஞ்சகப் பாண வேடம் புனைந்த பாதகன் ஒருவனது வாளுக்கு இரையானான். புலவர்களுக்கு வற்றாது நல்கிய ஊற்று வற்றியது. பொய்யாது பெய்த மேகம் வறண்டது. கற்பக மரத்தை, அருமையறியாத பாவி வெட்டிவிட்டான்! காமதேனுவைக் கொன்றுவிட்டான்!*

என்று கூறுவதில் வஞ்சகச் செயலுக்கு உணர்ச்சி வசப்பட்ட ஆசிரியர் இயல்பைக் காணலாம் (பாரி 65). கூறப்பட்ட செய்திகளை விட்டு வெளியே வந்து தம்முடைய தனிப்பட்ட

உணர்ச்சிகளை வெளிப்படுத்துவதையும் இவரிடத்துக் காணலாம்.

> **சீகாழிக்குப் பன்னிரெண்டு திருநாமங்கள் உண்டென்று படித்திருக்கிறேன். சீர்காழி என்று சொல்வதைவிடச் சீகாழி என்று சொல்வதுதான் முறையென்றும் தெரிந்து கொண்டிருந்தேன். அந்தப் பெயரே ஆங்கிலத்தில் ஷியாலியாகவும் கொடுந்தமிழில் சிய்யாழியாகவும் மாறி நின்றதைக் கண்டு உள்ள வெதும்பாமல் இருக்க முடியுமா?**

என்று கூறுமிடத்தில் உணர்ச்சிவசப்படுவதைக் காணலாம் (வா.பா. 4). தம் எழுத்தில் இடம்பெறும் மக்கள் உணர்ச்சி வசப்படுவதையும் சொற்களால் வடிக்கிறார் கி.வா.ஜ. சான்று:

> **வேலிக்குத் துக்கமும், வியப்பும் ஆனந்தமும் மாறி மாறி வந்தன** (புது 92)

முரண்தொடர்

> **சிற்றரசனாக இருந்தாலும் அவனுடைய பெரும் புகழ் வையமளந்து வானம் முட்டியது** (புது 16)

என்று கூறுமிடத்தில் இவ்வகை அமைப்பினைக் காணலாம். அந்த முரண் தொடர் களை மேலும் சுவையுடையதாக அமைத்துச் செல்வதையும் இவரிடம் காணலாம். சான்று:

> **சுவர் உண்மையில் குறுஞ்சுவர் தான். அவர் அதை நெடுஞ்சுவராக்கும் வேலையை ஒப்புக் கொண்டு வந்தார். அவர் கைகளுக்கு அந்தத் திறமை இல்லை. இப்போது அவர் நாவினால் அது நெடுஞ்சுவராகி விட்டது** (புது 91)

கவிதை நடை

எதுகை, மோனை அமைப்புடன் கூடிய கவிதை நடையினையும் இவர் எழுத்தில் காணலாம்.

> **குத்துண்ட பாரி குருதி வெள்ளத்தில் கிடப்பதைக் கண்டவர்கள் அலறினார்கள். பறம்பு நாடே திரண்டு வந்தது** (பாரி 65).

கவிதையாகவே எழுதிச் செல்வதை ‘விடையவன் விடைகள்’ என்ற நூல் காட்டுகிறது.

சக்தி பெரிதா சிவன் பெரிதா என்பதைப் பக்திக்கண் கொண்டு பரிந்துரைக்க இக்கவிதை பாடி அனுப்புகிறேன் பாட்டையா

கி.வா.ஜ. நாடி உணர்ந்திடவே நான் என்று ஒருவர் கவிதை நடையில் கேட்ட கேள்விக்கு,

> சக்தி சிவனென்று சாற்றும் இருவருமே ஒத்தவர்கள்
> என்றாலும் ஓர் சமயம் – சக்தியினை உள்ளடக்கி
> நிற்பான் உயர்சிவனென் பாரதனால் கொள்ளத்
> தகுவதை நீ கொள் *(பக். 91)*

என்று கவிதை நடையிலேயே விடை தருகிறார்.

> நரேலென்று பாயும் சிங்கப் பாய்ச்சல் வேண்டும்
> *(மல் 24)*

என்பதிலும் கவிதை நயத்தைக் காணலாம்.

## பொது விளக்கம்

ஒரு செய்தியைக் கூற வருமிடத்து முதலில் பொதுவாக அச் செய்தியைக் கூறி, பின் அவை என்னென்ன என்று விரித்தெழுதும் பாங்கை இவரது நடையில் காணலாம்.

'சிவ பாத இருதயர் வைதிக முறைப்படிச் செய்ய வேண்டிய வற்றை யெல்லாம் குறைவின்றிச் செய்தார்' என்று கூறிவிட்டுப் பின் என்னென்ன செய்தார் என்பதைக் கூறுகிறார். ஜாதகர்மாச் செய்தார். மங்கல மடந்தையர் வாழ்த்தொலி எடுத்தார்கள். எங்கும் பாலிகையும் பொற்குடங்களும் வைத்தார்கள். பல வகைத் தாளங்களைச் செய்தார்கள். வீடு முழுவதும் அழகாக அலங்கரித்தார்கள். வெண்சிறு கடுகு, அகில் முதலியவற்றில் தூபம் எடுத்தார்கள் (நாயன். பக். 9). ஒவ்வொரு வீட்டிலும் களிப்புப் பொங்கியது'. இவ்வாறு சொல்வதால் ஒரு செய்தி முழுமை அடைவதை உணர முடிகிறது.

## கதை போல் கூறல்

'பாரி பாரியென்று பல ஏத்தி' என்ற புறநானூற்றுப் பாடலைக் கூற வந்த கி.வா.ஜ. அதற்குரிய விளக்கத்தை ஒரு சிறுகதையாகவே படம்பிடித்துக் காட்டுகிறார்.

"பாரியைப் பற்றியே பேசிக்கொண்டிருக்கிறீர்களே, வேறு ஒருவரும் உங்களுக்கு அகப்படவில்லையா?" என்று இடை மறித்துக் கேட்டார் கபிலர். அப்படிக் கேட்கும்போது அவருடைய முகத்தில் புன்முறுவல் ஒளிவிட்டது.

"எப்படிப் பேசினாலும் அது பாரியிடம் தான் வந்து முடிகிறது" என்று ஒரு புலவர் சொன்னார். 'பாரி பாரி என்று

எப்பொழுதும் ஒருவனையே புகழ்கிறீர்களே, அதைமாற்றி வேறு யாரைப் பற்றியாவது சொல்லுங்கள்' என்று மறுபடியும் கபிலர் சொன்னார்.

''பாரியைச் சொல்லிவிட்டு வேறு ஒருவரைப் பற்றிச் சொல்வதாவது'' என்று ஒருவர் கூறினார்.

'நன்றாக யோசித்துப் பாருங்கள் எத்தனையோ வள்ளல் கண்டு பாடிப் பரிசில் பெற்றவர்கள் நீங்கள். பாரிக்கு ஒப்பாக வேறு யாராவது ஒருவரை எண்ணிப் பார்த்துச் சொல்லுங்கள். ஒருவர் கூடவா கிடைக்கமாட்டார்? கபிலர் இப்படிக் கேட்டதும் புலவர்கள் சிறிது நேரம் யோசிப்பவர்களைப் போல மௌனமாக இருந்தார்கள். பிறகு 'பாரியை விட்டால் வேறு யாரும் இல்லையே!' என்றார்கள்.

'அப்படியா? நான் வேறு ஒருவரைச் சொன்னால் ஒப்புக் கொள்வீர்களா' என்று கேட்டார் கபிலர்.

'நீங்களா சொல்லப் போகிறீர்கள்?' என்று வியப்போடு கேட்டனர். கபிலர் பாரியிடம் எவ்வளவு அன்பும் பெருமதிப்பும் வைத்திருக்கிறார் என்பதை அவர்கள் நன்கு அறிவார்கள். அதனால் தான் இப்படி கேட்டார்கள்.

'ஆம் நான்தான் சொல்லப் போகிறேன். எப்போது பார்த்தாலும், பாரி பாரி என்று பலபடியாக ஒருவனையே புகழ் கிறார்கள் செந்நாப்புலவர்கள். பாரி ஒருவன் தானா உலகைக் காப்பாற்றுகிறான்!' கபிலர் பேச்சை முடிக்கவில்லை, 'வேறு யார் இருக்கிறார்கள்? பரபரப்பாக'ப் புலவர்கள் கேட்டார்கள்.

'பாரிக்கும் அவருக்கும் பெயரில் ஒரு எழுத்து தான் வேறுபாடு. உலகு புரப்பதற்கு மாரியும் இருக்கிறதே, அதை மறந்து விட்டீர்களே. பாரி ஒருவர் மாத்திரம் அல்ல; மாரியும் உலகு புரக்க இருக்கிறதே'. பாரி பாரி யென்று பல ஏத்திய புலவர்கள் கபிலருடைய சதுரப் பாட்டை நினைந்து மகிழ்ந் தார்கள். 'எங்களை ஏமாற்றி விட்டீர்கள். உலகத்தில் உள்ள வள்ளல் யாரையோ சொல்லப் போகிறீர்கள் என்றல்லவா எண்ணினோம்? பாரியின் புகழைத் தாங்கள் அழகாகச் சொல்லி விட்டீர்களே' என்று பாராட்டினார்கள்.

நான்கு வரி புறநானூற்றுப் பாடலை ஓர் அழகிய சிறுகதை யாகவே வடித்திருப்பதைக் காணலாம்.

### மூவிடங்களிலும் விரவி வருதல்

இவருடைய எழுத்தில் பெரும்பாலும் படர்க்கையிலேயே சொல்லுகின்ற செய்திகள் அமைந்திருந்தாலும், இடையிடையே தன்மை, முன்னிலை இடங்களிலும் கூறிச் செல்வதைக் காணலாம்.

உலகில் துன்பப்படும் மக்கள் 'கடவுள் கண் திறந்து பார்க்க வில்லையே' என்று வருந்தி உரைப்பதை நாம் கேட்டிருக்கிறோம் (கற்பக 41). மலரின் நிறத்தில் ஈடுபட்டால் அதை அப்படியே சிறிது நேரம் அநுபவிக்கிறோம் (மல் 12).

இந்த இடங்களில் தன்மைப்பன்மையைப் பயன்படுத்தி முன்னிலையிலும் சில இடங்களில் கருத்துக்களைக் கூறுகிறார்.

> **தனக்கு இது வேண்டும் என்ற நினைப்போ, அது பற்றிய குறையோ இல்லாமல் வாழும் இளங் குழந்தையைப் பாருங்கள்** (கற்பக. 72).

என்பது சான்றாகும்.

### சொல்லமைப்பு

ஒருவர் மீது தாம் கொண்டிருந்த மதிப்பைத் தம் எழுத்திலேயே வெளிப்படுத்திக் காட்டுபவர் கி.வா.ஜ. ஞானசம்பந்தரைக் குழந்தைப் பெருமான் என்று (நாயன் 10) கூறுமிடத்தில் இதனைக் காணலாம். அது மட்டுமின்றி, பக்திப் பெருக்கினால், இறைத் தொடர்பான சொற்களைப் பல இடங்களில் 'திரு' என்று சேர்த்துக் கூறுவது உண்டு. நாயன்மார் கதை என்ற நூலில் இவ்வாறு திரு சேர்த்துக் கூறும் சொற்கள் வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| **திருக்கரம்** | 25 | **திருநாமம்** | 36 |
| **திருப்பதிகம்** | 25 | **திருத்தலம்** | 37 |
| **திருப்பாட்டு** | 25 | **திருமேனி** | 37 |
| **திருக்கோயில்** | 25 | **திருச்செவி** | 43 |
| **திருமனை** | 32 | **திருவுள்ளம்** | 44 |
| **திருமார்பு** | 32 | **திருவீதி** | 34 |
| **திருப்பெருகு சிவஞானம்** | | **திருவாயில்** | 49 |
| **திருவயிற்றில்** | 89 | **திருமுகம்** | 71 |
| **திருமகள்** | 96 | **திருமஞ்சனம்** | 91 |

வாயாடிக் குறத்தி (மல் 91) என்று ஓரிரு இடங்களில் அடைசேர்த்துச் சொற்களை அமைக்கிறார்.

தம்மை மீறி வியப்புச் சொற்களும் இதில் இடம்பெறுவதைக் காணலாம்.

"அப்போது அவன் தேரில் வராமல் நடந்து வந்திருந்தால், தானே கொழுகொம்பாக நின்றிருப்பான்! என்ன அருமையான பண்பு!" என்று வியப்பதைச் சுட்டலாம்.

இவற்றோடு வடசொற்களும், ஆங்காங்கே தவிர்க்க முடியாத நிலையில் கலந்து வந்திருப்பதைக் காணலாம்.

பவ்யம், சாதுர்யம் (மல் 20) என்று வடசொற்களைக் கையாள்கிறார். ஒரே இடத்தில் வடசொல்லும் அதற்கிணையான தமிழ்ச் சொல்லும் கூறிச் செல்கிறார். "ஒரு வருஷம் கடந்தது; இரண்டு ஆண்டுகள் ஆயின" (புது 24) என்பது சான்று.

ஆங்கிலச் சொற்களை அப்படியே தமிழ்ப்படுத்தியும், மொழிபெயர்த்தும் பிறைக்குள் ஆங்கிலத்தைக் குறிப்பிட்டும் செல்வதைக் காணலாம்.

பொயெட்ரி (poetry) (தமிழ் 15) பாமரர் பாட்டுக்கள் (folk songs) (மல் 73) என்று வருவனவற்றை இதற்குச் சான்றுகளாகக் கூறலாம்.

## ஆய்வுப் போக்கு

விளக்கக் கட்டுரைகளுக்கிடையேயும், தம் ஆராய்ச்சித் திறனையும் ஆங்காங்கே காட்டிச் செல்கிறார் கி.வா.ஜ.

## பிழை சுட்டல்

தண்டியலங்கார உரை பற்றிக் கூறுமிடத்தில் தண்டியலங் காரத்துக்குப் பழைய உரை ஒன்று உண்டு. அதனைத் திருவாவடுதுறையாதீனத்தில் 14ஆம் பட்டத்தில் தலைவராக வீற்றிருந்த சுப்பிரமணிய தேசிகர் இயற்றியதாகச் சிலர் பதிப்பித்தனர். அது பிழை. அது பழைய காலத்திலேயே இயற்றப் பட்டதென்று தெரிகிறது, என்று பிழை சுட்டி, அதற்குச் சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும் நூலிலிருந்து சான்றும் தருகிறார் (தமிழ் 49).

## நூற்பெயர் ஆராய்ச்சி

தண்டியலங்காரம் - பெயர் பற்றிய சில நுணுகிய செய்திகளைத் தருமிடத்தில் இதனைக் காணலாம்.

> **தண்டியலங்கார நூலுக்கு அப்பெயர் பிற்காலத்தே வழங்கியது போலும். காவ்யா தர்சமென்ற முதனூற் பெயரை இந்நூல் பெறவில்லை. தண்டியலங்கார உரையில் 'இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோவெனின்**

அணியினது இலக்கணம் உணர்த்தினமையான் அணியதிகாரம் என்னும் பெயர்த்து என வருவதனால் இதற்கு அணியதிகாரம் என்ற பெயரே முற் காலத்தில் வழங்கியிருக்கும் எனத் தோன்றுகிறது (த.கா. 51-52)

என்பது காட்டாகும்.

## ஊர்ப்பெயர்க் காரணம்

ஊர்ப்பெயர் எப்படி ஏற்பட்டது? எப்படித் திரிந்தது என்பதை ஆராய்ந்து கூறும் பார்வையும் இவரிடம் உண்டு. சான்று:

சீகாழி – ஏன் இந்தப் பெயர் வந்தது? இந்தத் தலத்தில் பத்திரகாளி சிவபெருமானைப் பூசை பண்ணி வரம் பெற்றாளாம். அதனால் காளிபுரம் என்ற பெயர் அதற்கு ஏற்பட்டதாம். காளிபுரம் காளி யாகி அதில் உள்ள ஸ்ரீ என்ற எழுத்தும் தமிழாகத் தேய்ந்து சீகாழியென்று ஆகிவிட்டனவாம். அழகொழுகு பழந்தமிழ்க் காளி காழியானது ஆச்சரியம் அன்று (வா.பா. 5).

## சொற்பொருளாய்வு

திருக்குறளில் 'அறவாழி அந்தணன்' என்ற குறளிலுள்ள ஆழி என்பதற்குப் பரிமேலழகர் உரை பொருத்தமானது என்பதை எடுத்துக் கூறி விளக்குகிறார் (கற். 81).

'எழுமை எழுபிறப்பும்' என்ற குறளில் பிறப்பு என்பது தொடர்ந்து வரும் பல பிறப்புகளிலும் என்பதைக் குறிக்கும் என்று அதற்குச் சான்றாக, வேறு சில குறள்களையும் எடுத்துக் காட்டுகிறார் (கற் 85).

## சொல்லாய்வு

அறு என்பதன் அடியாகப் பிறந்தது அறம் என்ற சொல். இன்னது செய்ய வேண்டும் என்று வரையறுக்கப்பட்ட நெறியே அறம் (கற்பக 77) என்று வருமிடத்தில் சொல்லாராய்ச்சியைக் காணலாம்.

## பல பெயர் சுட்டல்

ஒரு பொருளைக் குறிக்கும் பல பெயர்களையும் செய்யவள், செய்யாள், தாமரையினாள், திரு என்ற பெயர்கள் திருமகளுக்கு வழங்கும் என்பதையும் அறிந்து கொள்கிறோம் என இடை யிடையே சுட்டிச் செல்கிறார்.

### தமிழ்ச் சொல் கூறல்

சில சொற்களுக்கு ஏற்கெனவே இருந்த தமிழ்ச் சொற்களை எடுத்துக் கூறுகிறார். சான்று: 'கணம்' என்பதற்கு,

> **பழைய காலத்தில் இந்த மாதிரி மார்க்கம் தமிழ் நாட்டிலே இருந்ததாம். அதற்கு உள்ளாளப் பாட்டு என்ற தமிழ்ப் பெயர் இருந்தது** (மல். 149).

### ஒப்பிடுதல்

தமிழ்த் தாத்தாவையும், காந்தித் தாத்தாவையும் ஒப்பிடுவதில் நயம் காண முடிகிறது. தம் வாழ்க்கையையே இலக்கியமாக்கி அதன் கண் சத்திய சோதனை செய்யலானார் காந்தித் தாத்தா. தமிழிலக்கிய உலகிலே புகுந்து பல காலமாக மங்கி மறைந்து சத்திய சோதனை செய்தார் தமிழ்த் தாத்தா. அறிவாலும் தியாகத்தாலும் அன்பினாலும் இருவரும் தம்முடைய சோதனைகளில் வெற்றி பெற்று வந்தவர்கள்; ஒருவர் உலகறிய வெற்றி பெற்றார்; மற்றொருவர் தமிழுலகறிய வெற்றி பெற்றார் (மல். 176).

### மேற்கோள் காட்டல்

பாரியின் சிறப்பினைக் கூறும்பொழுது பிங்கல நிகண்டு, சூடாமணி நிகண்டு முதலியவற்றில் வரும் பகுதிகளை மேற் கோளாக எடுத்துக்காட்டுகிறார். மேலும் உரையாசிரியர் உரைகளில் கூறும் பாரி தொடர்பான செய்திகளையும் இணைத்துக் காட்டுகிறார்.

### இலக்கிய மேற்கோள்

பொருத்தமான இடங்களில் பாடலடிகளை மேற்கோளாகக் காட்டிச் செல்வதும் இவர் எழுத்தில் உண்டு. இறைவன் அந்தணனாக நின்று அறம் வகுத்தான்; அறமே வடிவாக அறக்கூறுபாடுகள் யாவும் தானாக, அறக்கடலாக விளங்கு கிறான். அருளும் அறமும் இணைந்த இந்த நிலையைத் திருநூற்றந்தாதி ஆசிரியர் 'அருளோடெழும் அறவாழி அப்பா' என்று கூறுவர். 'அறவனை ஆழிப்படை அந்தணனை' என்பது திருவாய்மொழி.

### உரையாசிரியர் மேற்கோள்

வீரசோழிய உரையாசிரியர் ஓரிடத்தில், 'இனிக் கோவை கலித்துறையென்றும் காப்பியக் கலித்துறையென்றும்

இரண்டாக்குவார் எனக் கொள்க என்றார்' (தமிழ் 165) என்று உரையாசிரியர் கூற்றை எடுத்துக் காட்டுகிறார்.

### தம் ஆசிரியர் கூற்று மேற்கோள்

பல பாடலடிகளை, அறிஞர் கூற்றுகளை மேற்கோளாகக் காட்டுவதோடு தம் ஆசிரியர் என்று தனியே குறிப்பிட்டு உ.வே.சா. கூற்றினை மேற்கோளாகக் காட்டுவதையும் இவர் எழுத்தில் காணலாம்.

> **புறநானூறோ தமிழ்நாட்டுச் சரித்திரத்தை அறிவதற்கு இன்றியமையாததாய், பெரிய சரித்திரக் கருவூலமாய் விளங்குகிறது. இதனைத் தேடிக் கண்டுபிடித்துத் தமிழுக்கு அளித்த என்னுடைய ஆசிரியப் பெருந் தகையாகிய மகா மகோபாத்தியாய டாக்டர் உ.வே.சாமிநாதையரவர்கள் "பண்டைக் காலத்தில் இத்தமிழ் நாட்டில் இருந்த சேர, சோழ பாண்டியர் களாகிய முடியுடை வேந்தர், சிற்றரசர், அமைச்சர், சேனைத்தலைவர், வீரர் முதலிய பலருடைய சரித்திரங்களும், கடையெழு வள்ளல் களின் சரித்திரங்களும், கடைச்சங்கப் புலவர் பலருடைய வரலாறுகளும் அக்காலத்தவருடைய நடை முதலியனவும் இன்னும் பற்பலவும் இந் நூலால் நன்கு புலப்படும்' என்று எழுதி இருக்கிறார்கள் (மல் 125) என்று மேற்கோளாக எடுத்துக்காட்டுகிறார்.**

### அடுக்கி வரல்

### வினையெச்சங்கள் அடுக்கி வருதல்

அடுக்கி எழுதுவதில் கை தேர்ந்தவராகக் கி.வா.ஜ. விளங்கு வதை, 'சங்கீத மழை பொழிய, மனத்தில் அன்பு பொழிய, பக்திப் பெருக்கமாய், கண்ணில் நீர்பொழிய, இறைவனைத் தரிசித்துக் கொண்டு புறம் போந்தார்' (வா. பா. 86) என்பதில் காணலாம்

### வினைமுற்றுகள் அடுக்குதல்

சான்று: ஒவ்வொரு முறையும் பாரிக்கும் கபிலருக்கும் இடையே தோன்றிய அன்பு முறுகியது; இறுகியது; வன்மை பெற்றது; அது நட்பாக மாறியது (பாரி 18).

### இரட்டைக் கிளவியும் அடுக்குத் தொடரும்

தள தள, ஜாம்ஜாமென்று என்பன போன்று வரும் இரட்டைக் கிளவிகளும் படித்துப் படித்து, உருகி உருகி, எத்தனை எத்தனையோ என்பன போன்று வரும் அடுக்குத்

தொடர்களும் இவருடைய எழுத்தின் இடையே சுவை சேர்ப்பது போல் காணப்படுகின்றன. இந்தச் சொற்களைக் கொண்டு என்பன போன்று குறிப்பால் பொருள் உணர்த்துவதையும் காணலாம்.

*காரணம் அந்தப் பெயரைப் போலவே விஷயங்களும் வளவள கொழகொழவாயிருந்தன (மாலை 64)*
*சுடச் சுடச் செய்திகளையும் விஷயங்களையும் குறிப்பதில் பத்திரிகைக்காரர்கள் ஒருவரை ஒருவர் முந்திக் கொள்கின்றனர். (மல் 36)*

### அடுக்குதல்

புகுந்தது என்ற சொல்லை அடுக்கி அமைக்கும் பொழுது என்னென்ன புகுந்தது என்பதை வெவ்வேறு விதமாக இவர் கூறிச் செல்லும் பாங்கு,

*கோவூர் கிழார் முகத்தில் ஒளி புகுந்தது.*
*இளந்தத்தன் உடம்பில் உயிர் புகுந்தது.*
*யமன் வாயில் மண் புகுந்தது. இந்த நிகழ்ச்சியை*
*அறிந்த உலகத்தார் உள்ளத்தில் வியப்பு புகுந்தது (புது 48)*

என மிகவும் கவரத் தக்கதாகக் காணப்படுகின்றது.

### சிறப்பு ஏற்றிக் கொண்டே செல்லல்

அடுக்கிச் சொல்லும் பொழுது சிறப்பினை ஒன்றைக் காட்டினும் ஒன்று உயர்ந்ததாக ஏற்றிச் செல்லும் நயத்தை,

*கலையிலே சிறந்தது கவிதை. அந்தக் கவிதைகளிலும், இறைவன் இசைபாடும் கவிதை மிகச் சிறந்தது, அவற்றுள்ளும் சம்பந்தப் பெருமானுடைய திருவாக்குப் பின்னும் சிறந்தது; எழுதும் மறை என்று போற்றுவதற்குரியது (நாயன் 14)*

என்பதல் காணலாம்.

### வினா அடுக்குதல்

செய்திகளைத் தொடர்ந்து கூறிச் செல்லும் பொழுது இடைஇடையே வினாக்களைத் தொகுத்து நடையை மாற்றிப் படிப்போர்க்குச் சோர்வு வராமல் செய்யும் உத்தியிலும் தேர்ந்தவர் கி.வா.ஜ. வினாக்களையும் தொடர்ந்து அடுக்கிச் செல்வதை இவரிடம் காணலாம். சான்று:

*அவரை கவிஞர் என்று அறிந்துவிட்டால் ஊரினர் சும்மா விடுவார்களா? அப்பால் அவர் இஷ்டப்படி போக முடியுமா? வர முடியுமா? பட்டினி கிடக்க முடியுமா? நடக்க முடியுமா? (புது. 86)*

## விடை வினா வடிவம்

விடையும் வினாவாகக் கூறிச் செல்வதை,

**தவம் செய்து பெற்ற பிள்ளையைப் பெறும் இன்பத்தை நழுவ விட மனம்வருமா? 'மாதவம் செய் தாதையர்' அல்லவா? அவர் வந்து எடுத்துத் தம்முடைய தோளின் மேல் வைத்துக் கொண்டார்** (நாயன் 24)

என்பது போன்றவற்றில் காணலாம்.

## கேள்வி – விடை கூறல்

கேள்வியை அடுக்குவது போலன்றி, ஒரு செய்தி அதை யொட்டிய கேள்வி - அதற்கொரு விடை என்ற வகையிலும் கூறிச் செல்வதைக் காணலாம். சான்று:

**சக்கரவர்த்தியின் அவைக்களப் புலவராக இருந்தவர் பழக்கமில்லாத மக்களிடையே யாரோ அயலார் போல நடக்கும் நிலைக்கு வந்து விட்டார், வந்தால் என்ன? அந்த நிலையிலும் அவருக்கு இன்பம் இருந்தது** (புது 86-87)

## தொடர்ந்து செல்லல்

கேள்வி, பதில் என்று ஒன்றோடு நிறுத்தாமல் அதைத் தொடர்ந்து மேலும் கேள்வி - பதில் என்று கூறிச் செல்வதை இவரிடம் காணலாம். சான்று:

**அந்த மரத்திற்குப் பெருமை வேரினாலும், கிளைகளி னாலும் வந்ததா? மலரினால் வந்ததா? மரத்திற்குப் பெருமை சந்தேகமில்லாமல் மலரினால் உண்டாவது தான். வேரும் கிளையும் மலருக்கு ஆதாரமாக இருந்தாலும் அவற்றின் சமுதாயத்துக்கே புகழை வருவிப்பது மலரே. ஆனால், அந்த மலரின் மணமும், பொலிவும் எப்படி வந்தன? வேரின் செம்மை யாலும், கிளையாலும் வளப்பத்தாலும் மலர் மலர்கிறது; மணக்கிறது** (மல். 38).

## உவமையை வினாவாக்கல்

கேள்வியை அமைப்பதோடு, உவமை கூற வந்த செய்திகளையும் வினா போன்று கூறிச் செல்வதையும்,

**'புஸ்தகத்தின் உருவ அழகைப் பற்றிச் சொல்லப் போனால் அடேயப்பா! அந்தக் காலம் எங்கே! இந்தக் காலம் எங்கே! மடுவுக்கும் மலைக்கும் உள்ள**

> **வித்தியாசம் என்று சொல்லலாமா? மண்ணாங் கட்டிக்கும், பொன்னாபரணத்துக்கும் உள்ள வித்தியாசம் என்று சொல்லலாமா? இன்னும் கூட அதிகமாகச் சொல்லலாம்** (மல். 37)

என்பது போன்று இவரிடம் காணலாம்.

### பகுத்தலும், தொகுத்தலும்

செய்திகளைக் கூறும்போது இயன்ற இடங்களிலெல்லாம் வகுத்தும், பகுத்தும் கூறிச் செல்வதை,

> **வாக்கினால் நிகழும் குற்றங்களை நால்வகையாகப் பிரிப்பர். திருவள்ளுவரும் அந்த நால்வகைக் குற்றங்களையும் அகற்ற வேண்டுமென்று நான்கு அதிகாரங்களில் கூறுகிறார். பொய் கூறல், புறங் கூறுதல், இன்னாத கூறல், பயனில கூறல் என்பவை அந்த நான்கு குற்றங்கள்** (கற். 47)

என்று தெளிவாகப் பகுத்துக் காட்டுகின்றார்.

### கட்டுரைத் தொடக்கம் – முடிவு

நூலை எழுதும் பொழுது நூற்செய்தியைப் பல தலைப்பு களிட்டுப் பிரித்துத் தரும் வழக்கத்தை இவரிடம் காண முடிகின்றது. கட்டுரைகளில் செய்தியைக் கூற ஆரம்பிக்கும் பொழுது தொடக்கத்தை வெவ்வேறு உத்திகளில் அமைக்கிறார். முதலில் கதை கூறிக் கட்டுரையை ஆரம்பிப்பதை ஓர் உத்தியாக இவரிடம் காணலாம் (மல். 48). மரபு வழிப்பட்ட ஒரு தொடக்கத்தையும் இவரிடம் காண முடிகின்றது.

'ஒரே ஒரு ஊரில் ஒரு ராஜா இருந்தார்' என்பது போன்ற தொடக்கத்தையும் அமைப்பதைக் காணலாம்.

> **கோயம்புத்தூர் ஜில்லாவில் பழைய கோட்டை என்பது ஒரு பாளையக்காரரின் ஊர். அங்கு உள்ள பாளையக்காரர் கொங்கு வேளாளருக்குத் தலைவர்** (புது 99)

என்று கூறிக் கட்டுரையைத் தொடங்குகிறார்.

மல்லிகையைப் பற்றிக் கூறும் பொழுது மல்லிகை மலர் பற்றிய வருணனையைத் தொடக்கத்தில் அமைக்கிறார்.

> **ஊர் வருணனை வருமிடத்தில் விமானத்தில் ஏறி ஊரைப் பார்த்து வருவதாக ஆரம்பித்து அந்த விமானம் பெரிய புராணம் என்றும் விமான ஓட்டி சேக்கிழார் என்றும் பின்பு விளக்குகிறார்** (வா.பா.1).

முடிவில் செய்திகளைத் தொகுத்துக் கூறும் பாங்கினைக் காணலாம்.

திருவள்ளுவர் ஆறு இடங்களில் தெய்வம் என்ற சொல்லை ஆளுகிறார். ஊழ்வினையின்படி இன்ப, துன்பங்களை வரையறுக்கும் பால்வரை தெய்வம் என்று சில இடங்களிலும், வழிபடு தெய்வமென்று ஓரிடத்திலும் தேவர் என்று சில இடங்களிலும் பொருள் கொள்ளும்படி அச்சொல் அமைந்திருக்கிறது என்பதை இதுகாறும் சொன்னவற்றால் உணர்கிறோம்.

இறுதியில் தாம் கட்டுரையில் கூறியவற்றைச் சுருக்கிக் கூறுவதை இவர் எழுத்தில் காணலாம். சான்று:

> **சுருக்கமாகச் சொன்னால் பயன் தருவன, பயனும் இனிமையும் தருவன என்று நல்ல நூல்களைப் பிரித்துவிடலாம். வேதம், ஆகமம், சட்டம் எல்லாம் முதல்வகையைச் சேர்ந்தவை. காப்பியம், நல்ல கதைகள் பின் வகையைச் சேர்ந்தவை** (கற்பக. 11).

முடிவுரையில் தம்முடைய கருத்து எது என்பதைக் கூறிச் செல்வதையும் உத்தியாகக் கையாளுகிறார். கி.வா.ஜ.

> **கவிதை வெறிமூண்டு தம் பாட்டுத் திறத்தாலே இவ் வையத்தையே பாலிக்கும் கவிமன்னர் பாரதியார். அவரால் இன்று அருணோதயம் ஆகியிருக்கிறது. இனிக் கவியுலகத்தில் ஒளி பரவ வேண்டும்; அதனால் தமிழுலகம் இன்பக் களி துளும்பி எழு வேண்டும்** (மல். 12).

என்பதைச் சான்றாக்கலாம்.

## முக்கியமான செய்திகளைத் தனியே குறிப்பிடல்

கட்டுரையில் மூன்று முக்கியமான விஷயங்களைக் கவனிக்க வேண்டும். 1. விஷயம், 2. அமைப்பு, 3. நடை என்று தனியே குறிப்பிட்டுச் சொல்கிறார்.

## உயர்த்திக் கூறல்

தாம் போற்றி வணங்குதற்குரிய தமது ஆசிரியரைத் தாம் மதிக்கும் எல்லையைக் காட்டப் பின்வருமாறு எழுதிச் செல்கிறார்.

> **தமிழிலக்கியத்தில் சங்க நூல்கள் மீண்டும் புத்துயிர் பெற்றுத் தமிழர்களுடைய உள்ளத்தில் ஊன்றத்**

> **தொடங்கிய இக்காலத்தைச் சாமிநாத சகாப்தம் என்றே சொல்லிவிடலாம்** (மல். 166).

## பெயர் விளக்கம்

கட்டுரை என்ற சொல்லுக்கான விளக்கத்தை, "அந்தக் காலத்தில் அதற்கு, 'வியாசம்' என்று பெயர். மேல் வகுப்பிற்கு வந்தால் அது 'காம்போஸிஷன்' என்று வேறு ஆங்கிலப் பெயரால் கௌரவத்தை அடைகிறது. பள்ளிக் கூடத்தை விட்டு வந்தால் பத்திரிகை உலகில் 'கட்டுரை' என்ற பட்டம் அதற்குக் கிடைக்கிறது" எனப் பல்வேறு விதமாக நகைச்சுவையோடு தருவதை இவர் எழுத்தில் காணலாம்.

## சொல் உருவாக்கம்

புதுப்புதுச் சொற்களை உருவாக்குவதும், பொருத்தமான சொற்களைப் பொருத்தமான இடங்களில் கையாள்வதும் இவரின் சிறப்பாகும்.

ஏற்றம் இறைத்துக் கொண்டு பாடுபவனை, 'ஏற்றப்பாவலன்' (புது 81) என்ற அருமையான சொல்லால் குறிக்கிறார். மேலும், 'மாதிருக்கும் பாதியன்' (நாயன் 35) என்று சிவனையும்; மனிதனுடைய உடம்பிலுள்ள கருவிகள் இரண்டு வகைப்படும். அறிகருவி, செய்கருவி என்பவை அவை; ஞானேந்திரியம், கர்மேந்திரியம் என்று கூறுவர் (கற். 46) என்றும் சொல் உருவாக்கம் செய்கிறார்.

## பொருள்

இவருடைய எழுத்தில் அக்காலச் செய்திகளும் பல துறைச் செய்திகளும் ஆங்காங்கே விரவிச் செல்வதைக் காணலாம்.

> **புஸ்தக வியாபாரிகள் லாபத்தை மட்டும் எதிர்பார்த்துச் சுடச்சுட விற்கும் புஸ்தகங்களைக் கொண்டு வருகிறார்கள்'**

என்று கூறிவிட்டு, போர் நடைபெறும் காலத்தில் அதைக் கொண்டு ஆதாயம் தேட நினைக்கும் மக்களைப் படம்பிடித்துக் காட்டுகிறார் (மல் 25).

## இலக்கியம்

இலக்கியம் என்பது இனிமேல் எவ்வாறு இருக்க வேண்டும். எத்தகைய நூல்கள் வரவேண்டும் என்பது பற்றிய தமிழ்த் தாத்தாவின் எண்ணத்தை இடையில் எடுத்துத் தருகிறார்.

பிற்காலத்து நூல்களில் வர வர உயர்வு நவிற்சியும், ஸ்வாப விரோதமாகிய வருணனைகளும், அளவுக்கு மேற்பட்ட சிருங்காரமும் விரோத உணர்ச்சியை உண்டாக்கும் மத விஷயங்களும் புகுந்து ஒற்றுமைக்குப் பங்கம் விளைவித்தன. இனி நூல் செய்யப் புகுவோர் அவற்றை நீக்க வேண்டும்; பழைய நூல்களில் இருந்தால் அவற்றை இலக்கிய இன்பத்திற்காகப் பாது காத்துக் கற்றல் வேண்டும். புதிய இலக்கியங்கள் இயற்றுவதற்கு எவ்வளவோ துறைகள் இருக்கின்றன. பல பாஷைகளிலுள்ள விஷயங்களையறிவதனால் இத்துறைகள் இன்னும் விரிவடையும். நாளடைவில் மனிதர்களுடைய வாழ்க்கை நிலை மாறுகிறது. அதற்கேற்பக் கொள்கைகளும் மாறுபடுகின்றன; அக்கொள்கை களுக்கு ஏற்றபடி இலக்கியங்களும் நல்வழியில் மாற வேண்டியது இயல்பே (மல் 179)

இவற்றோடு மறைந்து போன பல தமிழ் நூல்களைப் பற்றி அறிந்த செய்திகளை இதில் எடுத்துக் கூறுகிறார். மாபுராணம், பூதபுராணம், அவிநயம், பல்காப்பியம், பல் காயம், காக்கைப் பாடினியம் என்று பல இலக்கண நூல்களைக் குறிப்பிட்டுச் செல்கிறார் (தமிழ் 30-36).

கட்டுரை

அக்காலத்தில் கட்டுரைகளைவிடக் கதைகளே அதிகம் காணப்பட்டன என்பதையும்,

தமிழ்நாட்டில் இப்போது உற்பத்தியாகியிருக்கும் இலக்கியத்தில் நூற்றுக்குத் தொண்ணூறு பங்கு கதைகளே. பள்ளிக்கூடத்தில் மூன்றாம் வகுப்பு முதல் பி.ஏ. வகுப்பு வரையில் கற்றுக் கொள்வதோ கட்டுரை எழுத. ஆனால் இன்று தற்காலத் தமிழிலக்கியத்தில் முக்கியமான குறை நல்ல கட்டுரைகள் அதிகமாக இல்லாமையே. பள்ளிக்கூடச் சட்டதிட்டங்களுக்கு உட்பட்டுக் கற்றுக் கொண்ட சரக்கு ஒன்றும் வாழ்விலே பிரயோசனப்படுவதில்லை என்ற அபாக்கியாவதிக்கு இந்தக் கட்டுரையும் சாட்சி சொல்கிறது. அதற்கு நாம் என்ன செய்வது! கல்வியின் கோணலோ; கட்டுரையின் கோணலோ! கோணல் எங்கே இருந்தாலும் சரி நமக்கு அழகான கட்டுரை கிடைப்பதில்லை என்பதை யாரும் மறுக்க முடியாது (மல். 65)

என நகைச்சுவையோடு எடுத்துக் கூறுகின்றார்.

## வாழ்வியல் நெறி

மனிதன் எப்படி வாழவேண்டும் என்ற வாழ்வியல் நெறியினையும்,

> **மனிதன் இன்ப வாழ்வு வாழ வேண்டுமானால் அவனுக்குப் பொன்னும் பொருளும் ஆற்றலும் கல்வியும் உறவினரும் நண்பரும் இருந்தால் மட்டும் போதுவதில்லை. அவன் உள்ளம் அமைதி பெற வேண்டும். பொருள் ஏதும் இன்றி மனஅமைதியுடன் வாழ்பவர்கள் இன்ப வாழ்வு உடையவர்களே** (கற்பக. 72)

என எடுத்துக் கூறுகின்றார்.

மேலும் அறம், பொருள், இன்பம் மூன்றிலும் அறம் உண்டு என்பதையும் தெளிவாகப் புரியும் வண்ணம் விளக்குகிறார் (கற்பக 76-77).

## தொகுப்புரை

தமிழில் இவர் தொடாத செய்திகளே இல்லை, என்னுமளவுக்குப் பல செய்திகளை இவருடைய நூல்களில் நாம் அறிந்து கொள்ளலாம். பலவிதமான செய்திகளையும் பொருத்தமான இடங்களில் சோர்வு ஏற்படாதவாறு கொண்டு செல்வதை இவர் நடைத்திறமாகக் காண முடிகிறது.

ஒரே உத்தியைக் கையாளாமல் பல்வேறு இடங்களில் பலவகையான உத்திகளைக் கையாளுவதை இவருடைய நூல்களில் காணலாம்.

கட்டுரைத் தொடக்கம், முடிவு, உள்ளமைப்பு என்று ஒவ்வொன்றிலும் பலவகையான உத்திகளை அமைத்துச் செல்கிறார். அணி போன்றவற்றையும் ஒரே விதமாக அமைக்காமல் பல்வேறு வகைகளில் அமைத்துச் செல்கிறார்.

மேலும் சொற்களையும் தொடர்களையும் அடுக்கிச் செல்வதை இவரது தனிப்பட்ட உத்தியாகக் கூறலாம். வினையெச்சங்கள், பெயரெச்சங்கள், வினைமுற்றுக்கள், வினாக்கள், சிறுதொடர்கள், இரட்டைக்கிளவி, அடுக்குத்தொடர் எனப் பலவகைப்பட்ட அடுக்குதல்களைக் காணலாம்.

இடையிடையே வினாக்களையும் வியப்புக் குறிகளையும் அமைத்துச் செல்வதையும் இவருக்குரிய தனிப்பட்ட நடைத் திறனாகக் கூறலாம்.

வடமொழிச் சொற்கலப்பு அவருடைய காலத்தில் தவிர்க்க முடியாததாகிவிட்டது. எனினும் அதிலும் பல இடங்களில் தமிழ்ச் சொல்லாக்கங்களையும் அமைத்திருப்பது குறிப்பிடத்தக்கது.

சொற்களையும் தொடர்களையும் முரண் பொருளில் அமைத்துச் செல்வதும் இவருடைய உத்திகளில் ஒன்றாகும்.

மொத்தத்தில் தொல்காப்பியத்தையும், சங்க இலக்கியத்தையும் கூட எளிய தமிழில் அனைவரும் விரும்புமாறு சோர்வு படாத வண்ணம் ஓரளவு படிக்கத் தெரிந்த மக்களுக்கு எடுத்துரைப் பதில் வல்லவர் கி.வா.ஜ. என்பதில் ஐயமில்லை.

இசை அறிவும் இலக்கண, இலக்கிய அறிவும் நடைமுறை உலகியல் அறிவும் இவருடைய எழுத்தில் பரவலாகக் கிடப்பதைக் காண முடிகிறது.

### பயன்பட்ட நூல்கள்


1. **கற்பக மலர்**, த.எ.கூ. சங்கம், சென்னை, 1969.
2. **தமிழ்க் காப்பியங்கள்**, அமுத நிலையம், சென்னை, 1971.
3. **நாயன்மார் கதை**, இரண்டாம் பகுதி, அமுதநிலையம், சென்னை, 1973.
4. **பாரிவேள்**, அமுத நிலையம், சென்னை, 1957.
5. **புது மெருகு**, கலைமகள் காரியாலயம், சென்னை, 1945.
6. **மல்லிகை மாலை**, அல்லயன்ஸ், சென்னை.
7. **வாருங்கள் பார்க்கலாம்**, அமுத நிலையம், சென்னை, 1978.
8. **வாழ்வரசி**, அமுத நிலையம், சென்னை, 1956.
9. **விடையவன் விடைகள்**, இரண்டாம் பகுதி, அமுத நிலையம், சென்னை, 1975.

# புலமைத்திறன்

க.ப. வித்யாதரன்

இறை உணர்வை மையமாகக் கொண்ட ஆன்மிக நெறி ஆன்றோர்களால் மூன்று வழிகளில் வளர்க்கப்பட்டது. படைப்பாளர்களாக விளங்கி இறை உணர்வையும் இறைச் சிறப்பையும், இறைவன் எழுந்தருளிய உயர் தலங்களின் தன்மைகளையும் இலக்கியமாகப் படைத்து ஆன்மிகப் பணியை நிறைவு செய்தல் முதல் நிலை. இரண்டாம் நிலையில் திருவுடையார் பலர் அருள் நோக்கோடு மக்கள் நலன் கருதி மடங்கள் நிறுவனங்கள் அமைத்து அவற்றின்வழி இறையாண்மை போற்றுதல். மூன்றாம் நிலையில் ஆன்மிகநெறியின் கருவாக விளங்கும் பக்தி மக்களிடம் குன்றிவிடாமல் அது நாளும் தழைக்க, சொற்பொழிவாளர்கள் தங்கள் கல்வி, கேள்வி, ஞானத்தின் துணை கொண்டு சொற்பெருக்காற்றிப் பக்திநெறி பரப்பும் பணியைச் செய்தல் என அமையும்.

அருணகிரியாரிடத்துக் கி.வா.ஜ. கொண்ட பக்தி அளப் பரியது. அதன் வெளிப்பாடே கந்தலங்காரச் சொற் பொழிவுகள். அச்சொற்பொழிவுகளின் ஊடே கலந்துகிடக்கும் கி.வா.ஜா.வின் புலமைத் திறத்தைத் தொகுத்துக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

## சொற்பொழிவு வரலாறு

சென்னைத் தேனாம்பேட்டைப் பாலசுப்ரமணிய சுவாமி தேவஸ்தானத்தில் அறப்பாதுகாப்பாளராகிய ஸ்ரீ சந்திரசேகரன் வேண்டுகோளுக்கு இணங்க 25-1-1956 முதல் அக்கோயிலில் பொதுமக்கள் முன்னிலையில் நடைபெற்ற தொடர் சொற்பொழிவே இக்கந்தரலங்காரச் சொற்பொழிவாகும்.

## அச்சான வரலாறு

தொடக்கத்தில் ஒவ்வொரு புத்தகமாக 25 புத்தகங்கள் வெளிவந்தன. புத்தகம் ஒன்றுக்கு நான்கு அல்லது ஐந்து பாடல்கள் வீதம் கந்தரலங்காரப் பாடல்கள் நூற்றேழும் (107)

விரிவுரையுடன் வெளிவந்தன. முதற் பதிப்பு 1956ஆம் ஆண்டு கண்டது.

இப்புத்தக உருவாக்கம் பற்றிக் கி.வா.ஜ. கூறும் விவரம் வருமாறு: "கந்தரலங்காரச் சொற்பொழிவுகளைப் புத்தகமாக உருவாக்குவதனால் என்ன பயன் என்று தொடக்கத்தில் நான் நினைத்தது உண்டு. ஆனால் இவற்றைப் படித்த அன்பர்கள் தாம் பல கருத்துகளைத் தெளிவுபெற அறிந்து கொண்டதாக எழுதினார்கள். நேரில் சொன்னார்கள். இலக்கியத்துறையில் இப்பாடல்களின் நயன்களை அன்பர்கள் தெரிந்து கொள்ள வேண்டும் என்பது என் தாழ்மையான நோக்கம் அன்று. பெருங் கருணையாளராகிய அருணகிரிப் பெருமான் வாக்கினால் வாழ்க்கைக்குப் பயன் உண்டாக வேண்டும். அனுபவத்தில் ஏதாவது வளர்ச்சி அமைய வேண்டும். அவன் அருளைப் பெறு வதற்கு இப்பொழுதே ஏதேனும் முயற்சி செய்யத் தொடங்கு வோம் என்ற ஆசை எழவேண்டும். முருகன் திருவருள் வெல்வது வெறும் கற்பனை அன்று. உண்மையில் ஆன்மலாபம் அடைவிக்கச் செய்யும் செல்வம் அது என்ற நம்பிக்கை நெஞ்சறிய ஏற்பட வேண்டும். இந்த நோக்கத்தோடுதான் இந்தச் சொற்பொழிவுகளை ஆற்றுகிறேன். இவற்றைப் புத்தக உருவில் வெளியிடுகிறேன்" என்ற கூற்றின் வாயிலாகக் கந்தரலங்காரம் எத்துணை முக்கியத்துவமுடையது என்பதனை ஐயர் தெளிவுபடுத்துவதோடு நூலாக்கத்திற்கான அடிப்படைக் கருத்தினையும் தெளிவுசெய்துள்ளதைக் காணலாம்.

முருகனை நம்பி அவருடைய திருவருளில் முழு நம்பிக்கை வைத்து ஒளிநெறியிலே பழகுகிறவர்களுக்கு இவை போன்ற பாடல்கள் துதியாகவும் மந்திரமாகவும் கவசமாகவும் பயன்படுபவை. அப்பாடல்களைப் பாராயணம் பண்ணுவதால் நம் உள்ளமும் உறுதி பெறும் என்ற நோக்கிலேதான் இச்சொற்பொழிவுகள் புத்தகங்களாயின எனப் பிறிதொரு இடத்தில் கூறுகிறார் கி.வா.ஜ.

## சொற்பொழிவும் உத்திமுறைகளும்

சொற்பொழிவு என்பது கற்றறிந்த பெரியோர்கள் கூடி ஒருங்கிணைந்து நடத்தும் கருத்தரங்கில். அதன் தரம் மிகுந்து நின்று கருத்து வெளிப்பாட்டாலும், அக்கருத்து வெளிப்பாட்டிற் குரிய மொழி நடையாலும் செம்மாந்தப் போக்கைப் பெற்று விளங்கும். பாமரருக்கு அம்மொழிநடைபுரியாமல் போகலாம். இது கற்றோர் கூடும் அவைநிலை.

பொதுவிடத்தில் அறிஞர் பெருமக்கள் சொற்பொழிவு ஆற்றும்பொழுது பலதரப்பட்ட நுகர்வோர்களைச் சந்திக்க நேரிடும். அப்பொழுது பொழிவாளர் பல்வேறு விதமான உத்திகளைப் பயன்படுத்தித் தங்கள் கருத்தை மன்றத்திற்கு ஏற்றவாறு பேச வேண்டிவரும். இத்தகைய இடம், பொருள், ஏவல் அறிந்து பேசும் ஆற்றல் என்பது எல்லாப் பேச்சாளர் களுக்கும் கிட்டிவிடுவதில்லை. உரத்த சிந்தனையை எளிய தமிழில் கூறுவது என்பது கடினமான ஒன்று. அதற்குப் பட்டறிவும், உத்தித் திறனும் வேண்டும். அவ்வகையில் கி.வா.ஜ. தம் சொற்பொழிவுகளில் கையாண்டுள்ள உத்திகள் எண்ணில. அவை தொடர்பான குறிப்புகள் அவருடைய ஒவ்வொரு நூலின் முகவுரையில் ஆங்காங்கே காணமுடிகிறது. அவற்றின் மொத்தத் தொகுப்பே கீழ்வரும் செய்திகள்:

இந்தச் சொற்பொழிவுகள் கந்தரலங்காரப் பாடல்களைப் பூதக் கண்ணாடியில் வைத்துப் பெரியவையாகக் காட்டுகின்ற முயற்சி. அப்பாடல்களிலுள்ள அழகு அநுபவ உண்மைகள் பின்னும் நன்றாகப் புலனாக வேண்டும் என்பது என் ஆசை.

கந்தரலங்காரப் பாடல்களுக்கு மாத்திரம் விளக்கம் எழுதினால் அது இவ்வளவு விரியாது. சொற்பொழிவுகளாக ஆற்றியதால் சொல் விளக்கமும், பொருள் விளக்கமும் இருப்பதோடு உவமை, உதாரணம், மேற்கோள், தத்துவம், பழங்கதை, ஒப்புமை, அனுபவச் செய்தி ஆகியவற்றையும் இதில் காணலாம். வழக்கம் போல இந்தப் பாடல்களை வைத்துக் கொண்டு உரையாற்றும் பொழுது சுருதி, உத்தி, அனுபவம் என்ற மூன்றையும் பயன்படுத்திக் கொண்டிருக்கிறேன். பழைய அருளாளர்களின் திருவாக்குகள், பல நுட்பங்களை விளக்க ஒப்புமையாக வந்து விளக்குகின்றன. உலக வாழ்வில் நாம் கண்ட அனுபவங்களிலிருந்து ஊகித்து உத்தியினால் பல செய்திகளை உணரமுடிகிறது. அத்தகைய இடங்களில் உவமைகளும், உதாரணங்களும் உதவியாக இருக்கின்றன. முருகனை நம்பி வாழும் எளியேன் வாழ்வில் பெற்ற சில அனுபவங்களை இடையிலே சொல்லிச் சில கருத்துக்களை விளக்க முயன்று இருக்கிறேன்.

இலக்கியச் சம்பந்தமான செய்திகளையும் அங்கங்கே விளக்கியிருக்கிறேன். ஐந்திணையைப் பற்றிய செய்திகள் முருகனைக் குறிஞ்சித் தெய்வமாக வைத்துப் போற்றும் மரபு, விழுப்புண், கள வேள்வி முதலியவற்றை இலக்கிய இலக்கண நூல்களில் கண்ட பொருள்களோடு வைத்துக் காட்டி விளக்க முயன்று இருக்கிறேன்.

பாடல்களுக்கு விளக்கம் கூறும்பொழுது வெறும் சொற் பொருளையோ, சிறப்புரையோ கூறுவதோடு நான் நிறுத்தவில்லை. சொற்பொழிவாதலின் அங்கங்கே வரும் கருத்துக்கு விளக்கமும் வரலாறுகளுக்கு விளக்கமும், உட்கருத்தும், பழைய மரபும் சொல்லி வருகிறேன். அருணகிரியாரின் பாடல்களில் காணப்படும் சமய சம்பந்தமான கருத்துகள் நுட்பமானவை. அவற்றை விளக்குவது எளிதன்று.

பெரியோர்களின் திருவாக்குகளை மேற்கோள் காட்டினால் மட்டும் போதாது. ஆதலின் வாழ்க்கையில் நாம் நேரே அறியும் நிகழ்ச்சிகளை உவமையாக வைத்துப் பல கருத்துகளை விளக்கியிருக்கிறேன். பழம் புலவர்கள் கூறுவன வற்றைப் புதிய முறை அமைத்துக் காட்டும் இடங்களும், முழுவதும் புதியனவாக உவமை கூறி விளக்கும் இடங்களும் உண்டு".

மேற்சொன்ன கூற்று மூலம் பாடலின் மூலக்கருத்தை விளக்க ஒருவர்தம் பட்டறிவு மட்டும் போதாது; கூறிய கருத்தை வலுப்படுத்தத் தமக்கு முன் வாழ்ந்த ஆன்றோர்களின் கருத்துகளும் கையாளப்பட வேண்டும் என்ற முறையில் பல இடங்களில் ஐயர் அவற்றை ஒரு உத்தியாகவே பயன்படுத்தி யுள்ளார் என்பதை அறிய முடிகிறது.

சொல்லுக்குப் பொருள் உரைப்பதோடு நில்லாமல் அங்கங்கே உள்ள பொருள்களை வேறு செய்திகளோடு சார்த்தி விளக்கும் முறையிலான உத்தியும் கையாளப்பட்டுள்ளது. மேலும் முழுவதும் புதியனவாகவே உவமை கூறி விளக்கும் முறையும் பின்பற்றப்பட்டுள்ளது.

ஒரு பெரும் தொடர் சொற்பொழிவு என்பதினால் ஒவ்வொரு நாளும் மக்கள் மன்றம் சொற்பொழிவாளரிடமிருந்து புதிய கருத்துகளை எதிர்பார்ப்பது என்பது இயல்பானது. அந்நிலையில் சொற்பொழிவாளன் தனது பட்டறிவை மட்டும் நம்பிப் பயனில்லை. ஆகவே பொழிவு தெளிவோடு அமைய மக்களின் மனத்தைத் தன் பக்கம் கவரும் வண்ணம் இடையிடையே சிற்சில கதைகளைக் கூறித் தன் கருத்தை வலுப்படுத்துதல் என்பது ஒரு வகை உத்தி. இதைப்பற்றிக் கி.வா.ஜ. கூறுவதாவது:

"இந்தச் சொற்பொழிவுகளில் பாடல்களின் விளக்கம் விரிந்து நிற்கிறது. பல பெரியோர்கள் சொன்ன கதைகளை இடையிடையே சொல்லியிருக்கிறேன். இராமகிருஷ்ண பரமஹம்சர் கூறிய கதைகள் வரும். டால்ஸ்டாய் கதை வரும்.

பரமஹம்சர் கூறிய கதைகள் வரும். டால்ஸ்டாய் கதை வரும். புதிய உவமைகளும் விரவி இருப்பதைக் காணலாம். நுட்பமாக உள்ள கருத்தைச் சொற்பொழிவில் விளக்கும் பொழுது இவைகள் எல்லாம் விவகாரமாகின்றன.

சில இடங்களில் மேற்கோளாகக் காட்டியிருக்கும் பாடல்களுக்கும் விளக்கம் கூறியிருக்கிறேன். திருக்குறட் பாக்களும், திருவாசகப் பாடலும் இப்புத்தகத்தில் விளக்கம் பெற்றுள்ளதைக் கண்டு மற்றொன்று விரித்தல் என்ற குற்றமாக அன்பர்கள் கொள்ளமாட்டார்கள் என்று எண்ணுகிறேன். சொல்ல வந்த கருத்துக்கு உபகாரமாக உள்ள பாடல்களின் பொருள் தெளிவாகத் தெரிந்தால்தான் எடுத்துக் கொண்ட கருத்தோடு ஒப்பு நோக்க இயலும் ஆதலால் விளக்க வேண்டியது இன்றியமையாதது ஆயிற்று.

இதே போன்று நுட்பமான கருத்தையும் ஏற்புடைய உவமையை எடுத்துக் கூறித் தெளிவாக்கி விடலாம் என்பது அனுபவத்தில் யான் கண்ட உண்மை. அப்படி விளக்கம் கூறும்பொழுது இடையிடையே வரும் கருத்தைத் தெளிவு படுத்த பிறநூற் மேற்கோள்களைச் சொல்லுகிறேன். அந்த முறையில் பாரதி பாடல், தாயுமானவர் பாடல், சுந்தரர் தேவாரம், திருக்குறள், பெரியபுராணம், கம்பராமாயணம் முதலிய நூல்களிலிருந்து சில செய்திகளின் விளக்கங்களும் இதில் இடம்பெறுகின்றன".

சொற்பொழிவாளன் தனது தொடர் சொற்பொழிவில் ஒரு செய்தியை விரித்துக் கூறும்பொழுது அதற்கான எடுத்துக்காட்டுகளை இலக்கியத்திலிருந்து தருவது மரபு. அப்படிச் சொல்லப்படும் உதாரணங்கள் பாமர மக்களுக்குப் புரியாமல் போய்விடக் கூடும். அதுபோன்ற நேரத்தில் அப்படிப் பட்ட சூழ்நிலையைத் தவிர்க்கச் சொற்பொழிவாளன் அந்த எடுத்துக்காட்டுகளின் உள்ளார்ந்த அர்த்தத்தைத் தெளிவுபடுத்த வேண்டிவரும். அப்படித் தெளிவுபடுத்தும் பொழுது சொல்ல வந்த மூலக்கருத்துத் தெளிவாகி விடும். இதனை அறிந்த கி.வா.ஜ. அதனையே ஒரு உத்தியாகப் பயன்படுத்தி வெற்றி பெற்றுள்ளார் என்பதை அவர் கூற்றாலேயே அறியலாம்.

சொற்பொழிவின் பொழுது இறைவனுடைய பெருமையை அல்லது இறைவன் எழுந்தருளியுள்ள தலத்தின் சிறப்பை விளக்கப் புராண இதிகாசக் கதைகளைக் கூறுவது மரபு. புராணங்களில் காணும் கதைகள் பற்றிக் கற்றோரிடையே

புராணக் கதைகள் ஏற்புடையன என்றும் அதற்கு மாறானவை என்றும் இருவேறு கருத்துகள் உண்டு. இதுகுறித்து ஐயர் கருத்து:

"புராணத்தில் வரும் கதைகள் இந்த நாட்டுக்கு மாத்திரமே உரியன என்பதற்கும் இல்லை. எல்லா நாடுகளிலும் எல்லாச் சமயங்களிலும், எல்லா மொழிகளிலும் இத்தகைய கதைகள் உண்டு. இந்தக் கதைகளை எண்ணித் தங்கள் சமய நெறிகளை இழிவாகக் கருதுபவர்கள் யாரும் இல்லை. மற்ற நாட்டுக் கதைகளில் உள்ளுறை இருக்கின்றதோ இல்லையோ திட்டமாகச் சொல்ல இயலாது. இந்த நாட்டுக் கதைகளுக்கு நிச்சயமாகத் தத்துவார்த்தம் உண்டு. மூர்த்திகளின் உருவ வேறுபாடுகளுக்குத் தனித்தனியே உள்ளுறை உண்டு. கோயிலின் அமைப்புக்கும் வழிபாட்டு முறைக்கும் இடையே நுட்பமாக அமைந்த கருத்துக்கள் உண்டு. அக்கருத்துக்களைக் கருவாகக் கொண்டு உருவெடுத்தவை அவை. பொதுவாக இந்திய நாட்டின் கலைகள் யாவுமே உள்ளுறையுடன் அமைந்த குறிப்புக் கலைகளே (Suggestion art) ஆதலின் புராணங்களின் சிறப்பை அறிய வேண்டுமானால் மேலெழுந்தவாரியாகப் பார்த்து 'இது என்ன பைத்தியக்காரக் கதை' என்று புறக்கணிக்கக் கூடாது. இதன் கருத்து என்ன வென்று கூர்ந்து ஆராயவேண்டும். நம்முடைய சமய உண்மைகளை நிலைக்களமாக வைத்துக் கொண்டு ஒப்புநோக்க வேண்டும். அப்பொழுது உள்ளுறை விளங்கும். நுண்பொருளைப் பருப்பொருளாகக் காட்டியிருக்கும் கலைத் திறத்தைப் பாராட்டிப் போற்றும் நிலைக்கு வந்துவிட்டோம்".

ஈண்டுப் புராணம் கூறும் கதைகளை வலுவான ஆதாரமாக ஏற்க அறிஞர்கள் முன்வருவதில்லை. இதனை, கி.வா.ஜ.வும் அறிவார். இருப்பினும் ஒவ்வொரு நாட்டின் இறை நேய அம்சங்களைக் கூறும் புராண நூல்கள் மதிக்கப்பட வேண்டும் என்ற கருத்தைக் கொண்டவர் கி.வா.ஜ. ஆகவே அவர்தம் சொற்பொழிவில் புராணக் கதைகளை உத்தியாகப் புகுத்தியிருக்கும் போக்கிற்கான காரணம் இங்குத் தெளிவுறும்.

பிறிதொரு இடத்தில் புராணம் பற்றிக் குறிப்பிடும் பொழுது இவ்வாறு குறிப்பிடுகின்றார்: "கற்பனையானாலும் அவற்றின் ஊடே ஒரு கருத்தும் இருக்கும். சமய நூல்களில் இப்படி ஒரு குறிப்பு இருப்பதைப் பழைய உரையாசிரியர்களின் உரையிலிருந்து தெரிந்து கொள்ளலாம். அத்தகைய உள்ளுறைப் பகுதிகளை இந்தச் சொற்பொழிவுகளில் ஓரளவுக்கு விரிக்க முயன்றிருக்கிறேன். இது இன்னும் சிறப்பான உள்ளுறை என்று

சொல்ல மாட்டேன். ஆயினும் ஓரளவுக்குப் பொருந்தும் என்று நம்புகிறேன்" என்று கூறுவதன் வாயிலாக எந்தச் செய்தியானாலும் அதனைக் கருத்துள்ள செய்தியாக மாற்றவல்ல உத்தியை ஐயர் கையாண்டுள்ளார் என்பதனை நூல் வழி அறிந்துகொள்ளலாம். தொடர் சொற்பொழிவில் அரிய கருத்துகளை விளக்கவேண்டி வரும்பொழுது பொதுவாகச் சொற்பொழிவாளர்கள் அலங் காரமான கட்டுமானங்களைத் தங்கள் உத்தியாக வைத்துக் கொண்டு சொற்பொழிவில் மூலக்கருவிற்குப் புறஅழகு சேர்ப்பர். ஆனால் கிவா.ஜ. அலங்காரமான கந்தரலங்காரத்திற்குப் புறஅழகு சேர்க்கத் தன் உத்தியைப் பயன்படுத்தவில்லை. அதற்குப் பதிலாகக் கேட்போர் தம் உள்ளத்தில் உறைந்து கிடக்கும் மாசு மருவுகள் களைந்து அவர்கள் உள்ளம் தூய்மையாக அமையவும் அத்தகைய இடத்தில் முருகப்பெருமான் குடி அமரும்படி யாகவும் அமையச் சொல் அலங்காரம் செய்துள்ளார்.

இச்சொல் அலங்கார முயற்சி வெற்றி பெறுவதற்குச் சொல் விளக்கம், பொருள் விளக்கம், ஏற்ற உவமை, தக்க உதாரணம், பொருத்தமான மேற்கோள் வழியாகத் தத்துவ விளக்கம், பழங்கதை கூறிப் பக்திச் சிறப்பை விளக்குதல், இணையான ஒப்புமை, அனுபவச் செய்தி போன்ற பொருண்மைகளை அடித்தளமாக அமைத்துக் கொண்டு இக்கந்தரலங்காரச் சொற்பொழிவைப் புத்தகமாக்கியுள்ளார். அத்தகைய படைப்பில் அமைந்துள்ள கி.வா.ஜ.வின் சொற்பொழிவுத் திறத்தையும், புத்தகப் படைப்பில் காணப்படும் புலமைத் திறத்தையும் இனி விரித்துக் காணலாம்.

அலங்காரம் என்ற சொல் அலங்காரம், சிருங்காரம், அழகு, ஆபரணம், விஷ்ணுகோயிலில் நிவேதிக்கப்படும் அன்னம், குழம்பு, ரசம் முதலிய ஆகாரம், செய்யுள் அணி, சங்கீத உறுப்பு வகை எனப்பல பொருண்மைகளைக் குறிக்கிறது என்பர் ச.வே. சுப்பிரமணியன். அலங்கு + ஆரம் = அலங்காரம் எனப் பொருள்படும். தே + ஆரம் = தேவாரம் என்பதற்கு இது இணையானது. தேவாரம் போன்று இறைவனுக்கு அணியும் சொல்மாலையாக, பாமாலையாக இதனைக் கொள்ளலாம் என்பார் ச.வே.சு. இவ்இலக்கிய வகையில் அருணகிரிநாதரின் கந்தர் அலங்காரமே மூத்த நூலாகும். சிதம்பர சுவாமிகளின் திருப்போரூர் சன்னிதி முறை அலங்காரம், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் தமிழ் அலங்காரம் என்பன பிறவாகும். ஏகாம்பர முதலியாரின் ஸ்ரீ கிருஷ்ண பகவான் அலங்காரச் சிந்து, ஸ்ரீரங்கம் வழிநடை அலங்காரச் சிந்து

ஆகியன நாட்டுப்புற இலக்கியத்தன்மையோடு அமைந்தவை என்பார் ச.வே.சு.

கந்தர் அலங்காரம் என்ற சொல்லுக்குக் கி.வா.ஜ. தரும் விளக்கம் வருமாறு: "முருகன் என்பது தமிழில் அமைந்த அழகிய பெயர். பெரும்பாலும் வடமொழி, தென்மொழி இரண்டிலும் பொதுவாக வளங்குவது ஸ்கந்தன் அல்லது கந்தன். கந்தன் என்பது ஸ்கந்தன் என்ற வடமொழிச் சொல்லின் திரிவு. "ஸகந்த" என்பதற்குப் பற்றுக்கோடு, கம்பம், இணைப்பு முதலிய பொருள் உண்டு.

முருகன் பற்றுக்கோடாக இருப்பதினால் ஸ்கந்தன் என்ற பெயர் பெற்றான். கம்பம் போல இருப்பதனால் கந்தன் ஆனான். இணைந்த பொருளாக இருப்பதனால் கந்தன் என்ற திருநாமத்தை ஏற்றான்.

அலங்காரம் பற்றிக் குறிப்பிடும்பொழுது "கண்ணுக்கு இன்பம்" அளிக்க ஆண்டவனது திருவுருவங்களுக்கு அலங்காரம் பண்ணுகிறார்கள். இறைவனுக்கு மாத்திரம் அலங்காரம் பண்ணவில்லை. இறைவன் வீற்றிருக்கிற இரதத்திற்கும் பண்ணி னார்கள். இறைவன் திருவுருவத்திற்கு அலங்காரம். சப்பரத்திற்கு அலங்காரம். சப்பரம் இருக்கிற தேருக்கு அலங்காரம். தேர் ஓடுகிற சக்கரத்திற்கு அலங்காரம். சக்கரம் ஓடுகிற வீதிகளுக்கு எல்லாம் அலங்காரம். இதன் காரணம் இவ்வளவு அலங்காரத் தினால் கவரப்பட்ட மனம் இவ்வளவுக்கும் நடுநாயகமாக விளங்குகின்ற இறைவன் திருவுருவத்தின்பால் கவியும், மனம் நேராக இறைவனிடத்தில் போய்ப்பாயாது. அங்கங்கேயுள்ள அலங்கரிக்கப்பட்ட பொருள்களின் மீது பாய்ந்து ஒன்றைவிட்டு ஒன்றாகத் தாவிக் கடைசியில் இறைவன் திருவுருவத்தின்பால் சென்று நிற்கிறது. அருணகிரிநாதர் கந்தபிரானுக்கு அலங்காரம் செய்தார். நம் மனம் அவனிடத்தில் கவிய வேண்டும் என்பதற்காக உத்தமமான சொல்லைக் கொண்டு அலங்காரம் பண்ணினார் அருணகிரிநாதர். ஆகவே உத்தமமான சொற்களைக் கொண்டு இறைவன் புகழ்பாடுவதே அலங்காரம்" எனக் கி.வா.ஜ. விளக்கம் தந்துவிட்டு நூலோடு தொடர்புபடுத்திப் புதுமையான முறையில் பிறிதொரு விளக்கம் தருகிறார். அது வருமாறு: "..... பல இடங்களில் தாம்படும் துக்கத்தைச் சொல்லு கிறாரே (அருணகிரி), துக்கம் எப்படி அலங்காரம் ஆகும் என்பது கேள்வி. கந்தப்பெருமானுடைய அழகைச் சொல்லட்டும், அவன் கருணை விலாசத்தைச் சொல்லட்டும். அவன் திருமேனியை வர்ணிக்கட்டும். இவையெல்லாம் அலங்காரமாகும்.

இன்றைக்குச் சாற்றப்படும் நறுமணமாலையின் ஊடே ஆடு கூடத் தொடாத இலையைப் பறித்து வைத்துக் கட்டுகிறார்கள். அந்த இலைக்கு வாசனை உண்டா? இல்லை. இருந்தாலும் அந்தக் கதம்பமாலை அழகை இடைஇடையே வைக்கிற அந்தப் பச்சிலை அதிகப்படுத்திக் காட்டுகிறது. அதுபோலவே இறைவனுடைய குணநலன்களைச் சொல்லுகிற பாட்டிற்கு இடையிலே குணநலன்கள் அற்ற மக்கள் புரிகின்ற குற்றங்களையும் எடுத்துச் சொல்லுகிறார். துன்புறுகிறவர்களைக் காப்பாற்றுகிறவன் இறைவன் என்பதை அறிவித்து ஆண்டவனது கருணையை அதிகமாக எடுத்துக்காட்ட உதவுவன அவை" எனக் கி.வா.ஜ. கூறுகிறார்.

ஆகவே இறைவனின் பெருமைகளைச் சொல்வது மட்டும் அலங்காரமாகாது. மனம் மாசு காரணமாகக் குற்றமுடைய மக்கள் தங்கள் துன்பத்தையும் சுவையோடு சொற்களால் சொல்லும் பொழுது அதுவும் அலங்காரமாகிறது. "இறைவன் பெருமை என்ற அலங்காரம், மானிடத் துன்பம் என்கிற விகாரம் இவை இரண்டறக் கலந்து வரும்பொழுது அதுவே அம்மனிதனின் மாசு மருவுகளை அகற்றி அவனது மன உள்ளுணர்வைத் தூய்மைப் படுத்தி இறைவன் வந்து தங்கும்படிக்கான அலங்காரத்தைப் பெறுகிறது" என்று கூறும் கி.வா.ஜ.வின் ஆன்மிகச் சிந்தனை அலங்காரம் என்ற சொல்லுக்குப் புதுவிளக்கம்.

இத்தகைய சிறப்புமிக்க இக்கந்தரலங்கார நூலை முன்னர் கூறியதுபோல உதாரணம் அல்லது உவமை, தத்துவம், பழங்கதை, ஒப்புமை, அனுபவச் செய்தி, சொல்விளக்கம், பொருள் விள்க்கம் என்ற பொருண்மைகளின் வழிக் கி.வா.ஜ. புலமைத் திறத்தை இனித் தொகுத்துக் காணலாம்.

**வாகீசரும் நடைமுறை எடுத்துக்காட்டும்**

அன்பு என்பது பரந்து விரியும் தன்மையது என்ற உண்மையை மக்களுக்கு உணர்த்த விரும்பிய கி.வா.ஜ. அதற்கோர் ஏற்ற உதாரணம் தருகிறார். அது வருமாறு:

ஒரு பிரமச்சாரி கடைக்குப் போய் ஒரு மாம்பழம் வாங்குகிறான். அதை நறுக்கித் தா என்று கடைக்காரனைக் கேட்டு, அவன் நறுக்கிக் கொடுக்க, கடை வாயிலிலேயே நின்று மாம்பழத்தைத் தின்றுவிட்டுப் போகிறான். கல்யாணம் ஆனபிறகு அதே கடைக்குப் போய் ஒரு மாம்பழத்தை வாங்குகிறான். வாங்குகிற பழத்தை நறுக்கித்தரச் சொல்லி அவனே உண்பது வழக்கமாதலால் இன்றைக்கும் கடைக்காரன்

அந்தப் பழத்தை நறுக்க முந்துகிறான். 'அப்பா நறுக்காதே' என்று சொல்லி மாம்பழத்தை முழுதாகவே வாங்கிக் கொண்டு வீட்டுக்குப் போகிறான் இளைஞன். ஏன் தெரியுமா? முன்பு அந்தப் பழத்தை வாங்கும்போது அவனுக்குத் தன்னைப் பற்றிய நினைவுமாத்திரம் இருந்தது. இன்றைக்கோ தன் மனைவிக்கும் அந்தப் பழத்தை நறுக்கிக் கொடுக்க வேண்டும் என்ற அன்பு பிறந்து விட்டது. முன்பு அவனுக்கு ஒரு வயிறுதான். இன்றைக்கு மனைவியின் மேல் அன்பு மனதில் பிறந்ததனால் வயிறும் இரண்டாக விரிகிறது. ஒரு குழந்தையும் பிறந்துவிட்டால் வயிறு மூன்றாகிறது.

இளைஞன் திருமணம் ஆகாத நிலையில் தனக்கு மட்டும் என்ற சுயநல நிலையில் அவனுக்கு ஒரு வயறு. திருமணம் ஆனதும் தன்னை நம்பியுள்ள மனைவி என்ற நிலை ஏற்பட்ட போது அன்பு முதிர்ந்து சுயநலம் தகர்ந்து, பழத்தைப் பங்கிட்டுக் கொள்ளத் துணிகிறான். அப்போது அவன் வயிறு மற்றும் அவன் மனைவி வயிறு என இரண்டாக அன்பின் காரணமாக விரிகிறது. ஒரு குழந்தை பிறந்துவிட்டால் வயிறு மூன்றாகிறது என எளிய மக்களும் புரிந்துகொள்ளும்படி கி.வா.ஜ. கையாண்டுள்ள உதாரணம் ஈண்டுச் சிந்திக்கப்பாலது.

ஐந்து இந்திரியங்களும் வெவ்வேறு காரியங்களைச் செய்ய நாம் பூசை செய்தால் அது பூசையாகி இராது என்ற கருத்தை விளக்க முனைந்த கி.வா.ஜ. மிக எளிமையான நமக்குத் தெரிந்த ஓர் உதாரணத்தைக் கொண்டு எடுத்துச் சொல்லும் விதம் அவருக்கே உரிய சிறப்பு எனலாம். வேற்றுமையில் ஒற்றுமை என்று சிறுதலைப்பட்டுக் கூறவந்த கருத்து:

ஒரு சங்கீதக் கச்சேரி நடக்கிறது. அங்கே ஒருவர் வாய்ப்பாட்டு பாடுவார். ஒருவர் மிருதங்கம் வாசிப்பார். ஒருவர் பிடில் வாசிப்பார். ஒருவர் குழல் ஊதுவார். ஒருவர் கஞ்சிரா தட்டுவார். இவர்கள் எல்லோரும் வேறுவேறு காரியங்களைச் செய்கிறவர்கள். வெவ்வேறு விதமான இசை ஒலியை எழுப்பு கிறவர்கள். வாய்ப்பாட்டின் ஒலி வேறு. குரலின் ஒலி வேறு. பிடிலின் ஒலி வேறு. இந்த ஒலிகள் எல்லாம் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாதவை போல இருக்கின்றன. ஆனால் எல்லாம் சேர்ந்து ஒரு சுருதியோடு பூர்ணமாகக் கலந்து ஒரு பாட்டைப் பாடினால் அது மிக இனிமையாக இருக்கிறது அதைச் சங்கீதம் என்கிறோம். எல்லாம் ஒரு சுருதியோடு சேர்ந்து அமைந்தால் "மேளம் கட்டி விட்டது" என்று சொல்வதுவழக்கம். மேளம் என்பது கூட்டுறவு என்று பொருள்படும் சொல்.

வாய்ப்பாட்டு வேறு, மிருதங்கம் வேறு, குழல்வேறு, பிடில் வேறு என்றாலும் எல்லாம் ஒரு நெறியிலே இயங்கும்போது இன்பம் உண்டாகிறது. பலவகையான இசைக்கருவிகளிடையே ஒலி ஒற்றுமை இருக்கிறது. இதை வேற்றுமையில் ஒற்றுமை (Unity in Diversion) என்று சொல்வார்கள்.

பூசையிலும் இந்த ஒற்றுமை வேண்டும். ஐந்து இந்திரியங்களும் வெவ்வேறாகச் சிதறுண்டு இருந்தாலும் அவற்றை ஒரு நெறிப்படுத்தி இறைவன்பால் அவற்றை ஒருமுகமாகச் செலுத்துவது பூசை, பூசைசெய்ய உட்கார்ந்தும் இந்த ஐந்து இந்திரியங்களை வெவ்வேறு வழியில் செல்லவிட்டு மனம் எதையோ நினைத்துக் கொண்டிருந்தால் அது பூசையாகாது.

ஐம்பொறிகள் என்பது படைப்பிலேயே ஒருவருக்கு அத்தனை எளிமையாகக் கட்டுப்படமுடியாதபடி அமையப் பெற்றது. அதாவது ஐம்பொறிகளின் செயல்பாடு மனத்தின் உந்துதலினால் செயல்படுவது. மனம் என்பது மனிதனுடைய செயற்பாடுகளின் வெளிப்பாடு அல்லது செயற்பாடுகளுக்கு மறைமுகமான இயக்கி எனலாம். ஆக மனம் கட்டுப்பட வேண்டுமானால் ஐம்பொறிகள் கட்டுப்பட வேண்டும். இத்தனைச் சிக்கலான தத்துவத்தைக் கி.வா.ஜ. எத்தனை எளிமை யாகக் கொண்டுகூட்டிக் கூறுகிறார் என்பதைக் கீழ்க்கண்ட கூற்றுவழிக் காணலாம்:

ஒரு பெரிய மேடை. அதில் திரை விட்டிருக்கிறார்கள். பொம்மலாட்டம் நடக்கிறது. பழங்காலத்திலிருந்து வரும் கலை பொம்மலாட்டம். மேடைகளில் பொம்மைகளே வந்து ஆடும். கையைத் தட்டும். ஆணும் பெண்ணும் கையைக் கோர்த்துக் கொண்டு நடனம் ஆடும். திரைக்கு முன்னாலேயே மேடையில் வந்து பொம்மைகள் ஆடும். அந்தப் பொம்மைகள் இயங்குவதற்குக் காரணமாய் இருப்பவன் பின்னால் இருப்பான். பொம்மையின் கை, கால், தலை திரைக்கு முன்னால் ஆடும் பொம்மைகளின் ஆட்டம் அத்தனையும் திரைக்குப் பின்னால் இருக்கிற மனிதனுடைய ஆட்டத்தை ஒத்தே நிகழும். அவன் ஆடாவிட்டால் அந்தப் பொம்மைகள் ஆடமாட்டா.

அவன் ஆடும்போது அந்தப் பொம்மைகள் எப்படி ஆடுகின்றன? மிகவும் மெல்லிய கறுப்புக் கயிற்றினால் பின்னால் ஆடுகின்ற மனிதனுக்கும் அந்தப் பொம்மைகளுக்கும் தொடர்பு இருக்கும். அவன் கையையும், காலையும் ஆட்டும் போது

அந்தப் பொம்மையின் கையும் காலும் ஆடும். இந்த இரண்டு பேரையும் இணைக்கும் பொருள் கயிறு. கயிற்றை வட மொழியில் பாசம் என்பார்கள். பின்னால் இருக்கிற ஆளுக்கும் முன்னால் இருக்கிற பொம்மைகளுக்கும் பாசம் ஆகிய கயிறு தொடர்பாக இருப்பதால் அந்த மனிதன் இந்தப் பொம்மைகளை எல்லாம் ஆட்டுவிக்கிறான். பொம்மைகள் ஆடுவதற்கு இரண்டு காரணங்கள். ஒரு காரணம் பின்னால் இருக்கிற மனிதனது ஆட்டம். மற்றொரு காரணம் அவனுக்கும் பொம்மைகளுக்கும் இடையில் தொடர்பாக உள்ள கயிறு.

பொம்மலாட்டத்தில் ஒரு ஆள் பின்னால் நின்று கொண்டு கயிற்றின் வழிப் பல பொம்மைகளை ஆட்டுகிறான். ஆனால் பின்னால் ஐந்து பேர் இருந்து கொண்டு ஒரு பொம்மையை ஆட்டுகிறார்கள். பின்னால் இருந்து கொண்டு உயிரை இயக்கும் பொறிகள் ஐந்து. ஆடுவது உயிர் விளங்கும் மனிதன். இந்நிகழ்வு நடைபெறுவதோ உலகம் எனும் மேடையில்.

பாசம் என்ற கட்டு, ஞானத்தை மறைத்து அறிவைச் செயற்பட விடாமற் செய்து நெஞ்சத்தை இருளடையச் செய்து விடுகிறது என்பதை உணர்த்த ஒரு அற்புதமான பின்னணியை உருவாக்கிக் காட்டியுள்ளதை ஈண்டுக் காணலாம்.

வேடனது கண்ணியை உதாரணமாக வைத்து ஒரு தத்துவத்தை இன்னும் தெளிவாக விளக்குவது. எளிமையோடு கூடிய சுவையான ஒன்றாகும். படிக்கப்படிக்க இன்பம் தரும் அது வருமாறு:

அறுபத்து மூவர் விழாவின் போது சிந்தாதிரிப்பேட்டை முருகன் வீதி வலம் வருகிறான். முழுக்க முழுக்க வைரத்தால் ஆன நகைகளினாலேயே அம்முருகனை அலங்கரித்து இருப்பார்கள். அதனாலேயே அவனை வைரமுருகன் என்று சொல்வது வழக்கம். ஒரே வைரக் கற்களாலான நகைகளாகவே போட்டுக் கொண்டிருப்பான். நம்முடைய நாட்டிலே பெண்களுக்கு நகை என்றால் கொஞ்சம் அதிகம் ஆசை. இறைவனிடத்தில் அன்புடையவர்கள் ஞானம் ஆகிய கத்தியைக் கட்டிக் கொண்டிருக்கும் நெஞ்சம் உடையவர்கள் அவனைத் தரிசித்து, சண்முகநாதனின் திருக்கோலந்தான் எத்தனை அழகு; இந்தக் குமரேசனது இருதாளும் சிலம்பும் சதங்கையும், தண்டையும், சண்முகமும், தோளும், கடம்பும் எனக்கு முன்னே சதா தோன்றிக் கொண்டே இருக்கக் கூடாதா! என நெகிழ்ந்து வேண்டுகிறார்கள் ஆனால் அங்கே வந்த பெண் அங்கேயுள்ள

கண்ணியில் சிக்கிக் கொள்கிறாள். எவ்வளவு பெரிய வைரப் பதக்கம் போட்டிருக்கிறது. பார்த்தாயா இது எத்தனை விலை இருக்கும் நம் ஜமீன்தாரணி அம்மாள் போட்டிருப்பதை விடப் பெரியதாக இருக்கிறதே என்கிறாள்.

இப்படி உலகம் முழுவதும் நல்ல இடமோ, பொல்லாத இடமோ எங்கே பார்த்தாலும் இந்தக் கண்ணி பரப்பப் பட்டிருக்கிறது. அதில் சிக்கிக்கொள்ளாமல் நெஞ்சம் தப்பிக் கொள்ள வேண்டுமென்றால் ஞானம் என்ற கத்தி வேண்டும். ஞானம் இருந்தால் கண்ணிகள் அறுபட்டுப் போகும். பெரும் பாலான நெஞ்சங்களுக்கு அது இல்லை. பாசவலைக்குள் சிக்கிக் கொள்கிற ஆற்றல்தான் இருக்கிறது. அப்படிச் சிக்கிக் கொள்ளும் போது பின்னால் இருக்கிற ஐந்து பேர் வழிகள் அதை ஆட்டத் தொடங்குகிறார்கள். உலகமாகிய பெரிய மேடையில் பாசமாகிய கயிற்றால் நம்மைப் பிடித்துக் கொண்டு ஐவரும் ஆட்டி வைக்கிறார்கள்.

அறிவை மழுங்கச் செய்யும் பாசவினைகள் இடத்து மனித நெஞ்சங்கள் செயலிழந்து போய்விடும். அதிலிருந்து விடுபட வேண்டுமானால் அறிவை ஒளிரச் செய்யும் ஞானம் என்ற ஒன்று வேண்டும். அந்த ஞானத்தைத் தெய்வ வழிபாட்டு வழியேதான் அடைய முடியும். தெய்வ வழிபாட்டில் கருத்தூன்றிப் புலன்களை அடக்கி, மனத்தைக் கட்டுப்படுத்தப் பழகிவிட்டால் ஞானம் என்பது கைகூடி மனித அறிவைத் திறமைமிக்கதாக ஒளிரச் செய்து பாசவலையில் வீழாது காத்து விடும் என்ற உண்மையைக் கி.வா.ஜ.வின் பொழிவு உணர்த்துகிறது.

## அநுபவமும் ஆன்மிகமும்

மரண பயம் என்பது மண்புழு முதல் மானிடர் வரை அனைத்து உயிருக்கும் இயற்கையாய் அமைந்தது. மானிடன் இறைபக்தி மூலம் இப்பயத்தினின்று வெளிவர இயலும். அருணகிரிநாதர், சூரனை வென்ற வேலினைப் பெற்ற முருகப் பெருமானிடத்துப் பற்றுமிக்கவருக்கு மரணம் குறித்த பயம் தோன்றாது எனக் கூறுகிறார்.

கி.வா.ஜ., அருணகிரியை உணர்ந்து அவர்தம் திருப்புகழில் தோய்ந்து அந்நூல் காட்டும் செம்பொருளாகிய மரணமிலாப் பெருவாழ்வு பற்றியும் அறம் தரும் ஆக்கம் பற்றியும் தம்பொழிவில் முத்தாய்ப்பாகச் சுட்டுகிறார். ஐந்தாம் புத்தகமாக விளங்கும் கந்தரலங்காரச் சொற்பொழிவு மரணமிலாப்

பெருவாழ்வு என்ற தலைப்பிலேயே உருவாக்கப்பட்டுள்ளது. ஆறு பாடல்களுக்கான விளக்கம் இதில் உள்ளது. 'மரணப் பிரமாதம்', 'தண்டாயுதமும்', 'நீலசிகண்டியில்' ஆகிய மூன்று பாடல்கள் மரணத்தை வெல்லும் செய்தியினைச் சொல்வன. இதில் முதற்பாட்டிற்கான கி.வா.ஜ.வின் விளக்கத்தை ஈண்டுக் காணலாம்.

**'மரணப்ர மாதம் நமக்கில்லை யாம்என்றும் வாய்த்த துணை**
**கிரணக் கலாபியும் வேலும் உண்டே; கிண்கிணி முகுள**
**சரண ப்ரதாப சசிதேவி மங்கல்ய தந்து ரக்ஷா**
**பரண க்ருபாகர ஞானாகர சுர பாஸ்கரனே!**

என்பது முதற்பாட்டு. இதில் முன் இரண்டு அடிகளில் பாட்டின் தலைமையான 'மரணமிலா வாழ்வு' வருகிறது. 'மரணமிலா வாழ்வையும், வேலும் மயிலும் துணையாக நின்றமையும் அங்கே காண்கிறோம். அவற்றின் பின் முருகனை முன்னிலைப் படுத்தித் துதிக்கிறார் அருணகிரி. ஆறுவகையாக முருகனை விளக்குகிறார். கிங்கிணி, முகுளசரண ப்ரதாப, சசிதேவி மங்கல்யதந்து ரட்சாபரண, க்ருபாகர ஞானாகர சுரபஸ்கானே என்பவை அவை. இந்த இடத்தில் கி.வா.ஜ. ஒரு தன்னிலை விளக்கம் தருகிறார். பொது மேடையில் பாடலைப் பதம்பிரித்து விளக்கும்பொழுது அதற்குத் துணையாக வரும் மேற்கோள் களையும் தக்கபடி விளக்க வேண்டிய கட்டாயம் ஏற்படுகின்றது. இதன் நோக்கம் சொற்பொழிவு செய்பவனுடைய சிந்தனை சொற்பொழிவைக் கேட்போனுக்கு இடர்ப்பாடின்றி, தடையின்றிப் புரிந்து மனத்தில் பதிய வேண்டும் என்பதே ஆகும். கி.வா.ஜ. இந்தப் பாடலுக்கு விளக்கம் கூறும்போது 'மரணம் என்ற தவறு நமக்கு இல்லையென்று சூத்திரம் போல அருணை முனிவர் சொல்லியிருப்பதைத் தெளிவாக்காமல் இருக்க முடியுமா' என வினவுகிறார். மேலும் "இறைவன் திருவருளைப் பெற்றவர்களுக்கு மரணமிலா வாழ்வு கிடைக்கும் என்று சொன்னால் போதாது. 'அவர்கள் உடம்பை விட்டுப் போனாலும் அது மரண மாகாது' என்ற உண்மையை விளக்கினால் தான் விளங்கும்" என்கிறார். ஆகவே மரணம் என்பது இன்னது என்றும் அருள் பெற்றோர் உடலை நீத்து மறைவதற்கும் ஏனையோர் இறப்பதற்கும் இடையேயுள்ள வேற்றுமை இன்னது என்றும் விடுதலை அடைவதையும் விளக்க வேண்டியுள்ளது. இந்த உத்தியை மேற்கண்ட பாடலில் அவர் பயன்படுத்தியுள்ள விதம் வருமாறு:

வேலும் மயிலும் பற்றி முன்னரே சொல்லிவிட்டதால் இப்பாடலில் வருகின்ற விளிகள், குறிப்பாகக் கிங்கிணி, முகுளம் என்பன விளக்கப்படுகின்றன. ப்ரதாபத்திற்கும் கீர்த்திக்கும் உள்ள வேறுபாடு சித்திரிக்கப்படுகிறது. முருகன் ப்ரதாபம் உடையவன் என்பதை அவன் சசிதேவி மங்கல்யம் தந்த செய்தி காட்டுகிறது. அவன் க்ருபாகரனாக எவ்வாறு விளங்குகிறான் என்பதை விளக்கி அதுவே அவன் கீர்த்தியாக அமையும் சிறப்புப் பொருத்திக் காட்டப்பட்டுள்ளது. அதன்பின் ஞானாகரன், சுரபாஸ்கரன் போன்ற சொற்களுக்கான விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. இறுதியில் பொருளைத் தொடர்புபடுத்திக் காட்டுகையில் எவ்வாறு மரணத்தை வெல்லலாம் என்பதைச் சுட்டிக்காட்டி மேற்சொன்ன பாடலுக்கான விளக்கத்தைக் காட்டியுள்ளார்.

ஒரு பக்கம் கி.வா.ஜ. தம் புலமைத்திறத்தைக் காட்டி னாலும் எடுத்துக் கொண்ட தலைமைக் கருத்தை விட்டு விலகாமல் பொழிவைக் கொண்டு சென்றுள்ள ஆற்றலை நாம் உணரலாம்.

மரண பயம் என்பது தேவையில்லாத அச்சம் இவ் அச்சத்தைப் போக்கும் எளிய மார்க்கம் இடையறா இறை பக்தி என்பதுவே அருணைமுனிவரின் கோட்பாடு என்பதைக் கி.வா.ஜ. தம் புலமைத்திறத்தால் பாமரனும் அறிந்து கொள்ளும்படிச் செய்துள்ள விதம் போற்றத்தக்கது.

### அறமும் – ஆண்டவனும்

'படிக்கும் திருப்புகழ்' என்ற தலைப்பில் அமைந்த நூலில் கி.வா.ஜ. அருணகிரியார் வற்புறுத்திச் சொல்லும் பிறிதொரு செய்தியை மிக விளக்கமாகச் சொல்லியுள்ளார். பக்தன் என்ற நிலையை அடைவதற்கு முன்னர் எளிய மானிடனாக விளங்கும் மனிதன் மனத்தில் உண்மை விளங்குவதில்லை. இறைவனைத் தன்னகத்தே ஏற்றுக்கொள்ளும் பொழுதுதான் இன்ப துன்பத்திற்கான காரண காரியங்களை அறிந்து கொள்ளுகிறான். அவ்வாறாகக் காரண காரியங்களை அறிந்துகொள்ளும்பொழுது அவனுக்கும் இறைவனுக்கும் ஒரு மானசீகமான உறவு ஏற்படுகிறது. அந்த உறவின் காரணமாக இறைவனுக்கும் அறத்திற்கும் இருக்கும் நெருக்கத்தை உணர்கிறான். அறத்தோடு வாழ்ந்து உயர்ந்தவர்கள் இறைவனோடு ஒப்பக் கருதப்படுவதைப் பலர் தந்த நூல்களின் வாயிலாக அறிகிறான். அருணகிரி சொல்லும் அறத்தின் வழி மானிடம் இயைந்து சென்றால் இறைவனால் அவனுக்குப்

பேரின்பம் அளிக்கப்படுகிறது என்ற திருப்புகழின் உண்மையைக் கி.வா.ஜ. மிக எளிமையாகச் சொல்லுகிறார். பக்தன் எனப்படுவன், இறைவனுடைய தலம் உலகமென்றும் அதில் உலவும் ஒவ்வொருவரும் அவனுடைய கோயில் என்றும் எண்ணி, அன்பு செய்யக் கூடியவர்கள். தன்னை உயர்த்திக் கொள்வதோடு தன்னுடைய இயல்பினாலும் செய்கையினாலும் பிறரை உயரச் செய்யும் ஆற்றல் பெற்றவன். பிறர் நலத்தையே கருதி வாழ்கிறவன். நல்ல அறம் செய்கிறான். பொருளீட்டுகிறான். இன்பம் நுகர்கிறான். மற்றவர்களுக்கும் அவனுக்குமுள்ள வேறுபாடு அவன் எதைச் செய்தாலும் எதை நுகர்ந்தாலும் இறைவனுடைய நினைவை மறவாமல் இருக்கிறான். ஏதேனும் ஒன்று செய்தால், தான் இறைவனுடைய கருவியாக நின்று அவன் அருளாணையின் வழியாகச் செய்வதாக உணர்கிறான். எதை அனுபவித்தாலும் அது இறைவன் அருளால் வரப்பெற்றது என உணர்கிறான். இன்பம் துன்பம் என்னும் இரண்டையுமே அவன் இறைவன் அருளால் விழைந்தது என உவப்புடன் ஏற்கிறான். அறுசுவை உண்டியில் கைப்பும் ஒரு சுவைதான். இனிப்புப் பண்டத்தையும் நுகர்ந்து கைப்புள்ள உணவையும் உண்டு மகிழும் இயல்புள்ளவர் களைப் போல அவன் இன்பத்தையும், துன்பத்தையும் நுகர்கிறான்.

ஆதலின் அன்பர்கள் (பக்தர்கள்) பொருள் ஈட்டுவார்கள், அதனைப் பிறர்க்கு அளிப்பார்கள். அவர்கள் தாம் ஈட்டும் பொருளில் இறைவன் திருவருளைக் காண்பார்கள். அவர்கள் செய்யும் அறம் இறைவனுடைய அன்பிலே கலந்து செய்வதாக அமையும். இதனால் அவர்களிடம் பொருள் பெறுகிறவர்களும் இறைவன் திருவருளுக்கு இலக்காகிறார்கள் என்ற கருத்தை கி.வா.ஜ. சொல்லியுள்ளார். ஆன்மிக நெறிவழி நிற்கும் மானிடன் இறைநேயனாக (பக்தனாக) மாறுகிறான். பக்தனாக மாறும் போது மனம் பண்படுகிறது. மனம் பண்படும்போது சிந்தை தெளிவடைகிறது. சிந்தை தெளிவடையும் காலத்து நான் என்ற அகந்தை வெளியேறுகிறது. அகந்தை வெளியேறும் காலத்து அகம் தூய்மை அடைகிறது. அகம் தூய்மை அடையும்போது கோயிலாகிறது. அந்தக் கோயிலில் இறைவன் அமரும்போது அறம் தழைத்தோங்குகிறது. அந்நிலையில் செய்யப்படும் அறத்தின் வழியே அத்தர்மத்தைப் பெறுபவனிடமும் இறைவன் சென்றடைகிறான் என்று புலமைத் திறத்தோடு கி.வா.ஜ. சொல்லும் இச்செய்தி படித்து இன்புறத்தக்கது.

பிறிதொரு இடத்தில் தர்மதானம் பற்றி விளக்கிடும் போது கந்தரலங்காரத்தில் அறம் செய்ய வேண்டும் என்பதை வற்புறுத்தும் பாடல்கள் பல. பொருளை நல்ல முறையில் சேமித்து வாழ வேண்டும் என்பதைச் சொல்வன சில. நன்முறையில் இன்பம் துய்க்கும் முறையைக் குறிப்பாகப் பெறவைக்கும் இடங்கள் சில எனக் கூறிவிட்டு மேற்சொன்ன தர்மதானம் பற்றிப் பொருள் விளக்கம் தருகிறார். ஏழைகள் இறைவன் பெயரைச் சொன்னால் பிச்சை கிடைக்கும் என்ற உண்மையை இன்று மறப்பதில்லை. பிச்சைக்காரர்கள் இறைவன் பெயரைக் கூறி யாசிக்கிறார்கள். இந்த வழக்கத்தை இந்த நாட்டிலே தான் பார்க்கலாம்.அறம் செய்தவர்கள் இறைவன் நினைவோடு செய்தார்கள். இரவலர்களும் இறைவன் திருவருளை நினைப்பூட்டினார்கள். அந்த வழக்கம் இன்றும் இருந்து வருகிறது.

தாம் பெற்றதைப் பிறர்க்குப் பகிர்ந்து கொடுப்பதனால் மக்கள் இருவகை நலன்களைப் பெறுகிறார்கள். ஒன்று பொருள் மீதுள்ள பற்று நீங்குதல்; மற்றொன்று ஏழைகள் அவர்களால் பயனடைதல். செல்வத்தைப் பகிர்ந்து அளிக்கும் செயலையே தர்மம் தானம் என்றனர் பெரியோர்கள்.

### கி.வா.ஜ.வின் வித்தகம்

மனமலர் என்ற நூலில் கி.வா.ஜ. ஞானியர் நிலை பற்றி எளிய உவமை வாயிலாக விளக்குகிறார். நான்கு மாடிகள் கட்டி நாலாந்தளத்தில் வாழ்ந்து வரும் ஒருவனுக்கு அந்த நாலாந்தளம் மட்டும் சொந்தமன்று. அதன் கீழ் அமைந்த மற்ற மூன்று தளங்களும் அவனது உடைமையே என்பது போலச் சரியை, கிரியை ஞான யோக மார்க்கமெனும் நான்கு நிலைகளிலும் தேர்ச்சி பெற்ற மாமுனிவர் நான்காம் நிலையான யோகம் எனப்படும் நிட்டையில் இருந்தாலும் அவர்களுக்கு ஏனைய மூன்றும் தெரிந்த ஒன்றே.

ஞானசம்பந்தர் ஞானம் கைவரப்பெற்றவர். சரியை, கிரியை, யோகம் என்ற மூன்றையும் அறியப் பெற்றவர். அவ் வகையில் நிட்டை என்னும் நான்காம் பாதத்தை அடைந்தவர். நான்காம் பாதம் தெரிந்த ஒருவருக்கு ஏனைய மூன்றும் தெரிந்திருக்கும் என்பது சித்தியார் வாக்கு எனக் கி.வா.ஜ. சொல்வதோடு அந்தச் செய்யுளையும் குறிப்பிடுகிறார்.

## திருவடிப்பூசை

இறைவனை உச்சி முதல் பாதம் வரை ஆரத் தழுவிப் பூசை செய்ய விழைவது பக்தனின் பெரும் பற்றாகும். அங்க பூசை என்ற முறையே உண்டு. இறைவனுடைய அங்கங்களில் நமக்குச் சிறந்தது அவனுடைய திருவடி .மற்ற அங்கங்களைப் பூசிப்பதைவிடச் சிறந்து நிற்பது திருவடிப்பூசை. பூசையிற் சிறந்தது அருச்சனை என்றால் அங்க அருச்சனையில் சிறந்தது திருவடி அருச்சனை.

மனம் ஒன்றி எண்ணங்கள் சிதறாது அன்பு பரிமளிக்க மலர்களை இட்டுப் பூசிக்க வேண்டும். அப்படி இடப்படும் மலர்களில் ஒன்று கடம்பமாக இருக்க வேண்டும். பிறிதொன்று பக்தனின் மனமே மலராக இருக்க வேண்டும் என்று சொல்லும் கி.வா.ஜ. தம் கருத்துத் துணையாகத் திருவாசகத்தைக் காட்டுகிறார்.

**அருச்சனை வயலுள் அன்புவித்திட்டுத்**
**தொண்ட உழவர் ஆரத்தந்த**
**அண்டத் தரும் பெறல் மேகன் வாழி**

என்பது திருவாசகம். திருவடிப் பூசை தொடர்பாக அமைந்த கந்தரலங்காரப் பாடல்,

**தகட்டிற் சிவந்த கடம்பையும் நெஞ்சையும் தாளிணைக்கே**
**புகட்டிப் பணியப் பணித்தரு ளாய், புண்ட ரீகன் அண்ட**
**முகட்டைப் பிளந்து வளர்ந்திந்த்ர லோகத்தை முட்ட எட்டிப்**
**பகட்டிற் பொருதிட்ட நிட்டூர சூர பயங்கரனே!**

இந்தப் பாடலில் சிகப்புத் தகட்டைப் போலச் சிவந்த கடம்ப மலரையும் என்நெஞ்சையும் உன்னுடைய இரண்டு திருவடிக்கே செலுத்தி உன்னை வழிபடும்படி என்னைப் பணி கொண்டு அருள்வாய்; பிரமனது அண்டத்தின் உச்சியைப் பிளந்து அதற்கு மேலும் வளர்ந்து இந்திர லோகத்தை முட்டும்படியாக எட்டி எருதைப் போல மோதிய கொடுமையை உடைய சூரனுக்குப் பலத்தை உண்டாக்கிய பெருமானே என அருணகிரியார் முருகனை வர்ணிப்பதின் வாயிலாக அவனுக்குத் தன் சொற் களால் அங்க அருச்சனை செய்துள்ள அழகினைக் காட்டுகிறார்.

தகடு என்பதற்குக் கி.வா.ஜ. பொருள் தரும்பொழுது மாணிக்கத்தைப் பதிக்கும்படி அடியில் வைக்கும் செந்நிறம் பெற்ற வர்ணத் தகடு எனக் கூறித் தகட்டில் அழுத்தின

மாணிக்கம் போலே என ஈண்டுச் சுட்டிக்காட்டுவதையும் எடுத்துக் காட்டியுள்ளார். யாவருக்கும் புரியும்படியாகச் செப்புத்தகடு என்று சொல்லலாம் என்றும், தகடு என்பதற்குப் புறயிதழ் என்ற பொருளும் உண்டு எனவும் சுட்டுகிறார்.

ஞானியாருக்கும் பக்தருக்கும் உள்ள வேறுபாட்டைச் சொல்லிப் பக்தன் எப்படி இறைவனை வணங்கவேண்டும் என்பதற்குத் திருவடி அருச்சனையைச் சுட்டிக்காட்டி எவ் வகையான மலரிடவேண்டும் என்பதற்கு விளக்கம் சொல்லி முருகனின் திருவுருள் உள்ளத்தை எடுத்துக்காட்டி, "சிந்தனையும் அம்மலர்கே ஆக்கி" எனத் திருவாசகம் சுட்டுவது போலப் பக்தி குறித்துக் கி.வா.ஜ. சொல்லியுள்ள இக்கருத்து அவர்தம் நுண்மாண் நுழைபுலத்தைக் காட்டும்.

கி.வா.ஜ. பல் இலக்கியப் பயிற்சி உடையவர் என்பதற்கு வேலன் போதித்த ஞானம் என்ற தலைப்பில் அவர் ஆற்றிய சொற்பொழிவு சிறந்த எடுத்துக்காட்டாக அமையும். அருணகிரி நாதர் மணிவாசகர் போலத்தன்னைக் குறைத்து மதிப்பிட்டுக் கொண்டாலும் அது நம்மைப் போன்றோர்க் காகவே அன்றி உண்மையில் அவர் அவ்வாறில்லை என்பது கி.வா.ஜ..வின் துணிபு. 'கவிஞன்' என்ற நிலையில் பக்தனுடைய மனதைக் கவர வேண்டுமானால் பக்தனுடைய இன்ப துன்பங்களை அவ்வின்ப துன்பங்களுக்குக் காரணமான பல்வேறு நிலைகளைக் கவிஞன் அறிந்திருத்தல் வேண்டும். அருணகிரி பெருஞ்செல்வந்தர். ஆயினும், இல்லாதவனைப் போல அல்லலுற்றவர். துக்கம் இல்லாதவனும் துக்கப்படுவனோடு சேர்ந்து அழுதால் துக்கம் சமமாகும் என்பது ஆன்றோர் வாக்கு. இவ்வாக்கிற்கு ஏற்ப அருணகிரி மக்களுக்காக வருந்துவதைக் காண முடிகிறது.

குருவருள் இன்றித் திருவருள் பெறமுடியாது என்பது சமயப் பெரியோர் வாக்கு. இறைவன் அருளால் தான் மும் மலத்தை வெல்ல முடியும். அப்படி வெல்வதற்கு இறையருள் கூடிய ஒருவர் குருநாதராக அமையவேண்டும். திருமூலர் இது குறித்து இவ்வாறு கூறுகிறார்:

**சூரிய காந்தமும் சூழ்பஞ்சும் போலவே**
**சூரிய காந்தம் சூழ்பஞ்சைச் சுட்டிடா**
**சூரியன் சந்நிதி யிற்சுடு ஊறுபோல்**
**சூரியன் தோற்றமுன் அற்ற மலங்களே!**

குருவாக வருபவர்கள் இறை அம்சமானவரே என்ற மணிவாசகர் வாக்கை,

அருபரத் தொருவன் அவனியில்வந்து
குருபர னாகிய கொள்கையைச்
சிறுமை யென்றிகழாதே

என்பதை அடிப்படையாகக் கொண்டு,

செபமாலை தந்த சற் குருநாதா
திருவாவினன்குடிப் பெருமாளே

என முருகனையே குருவாக ஏற்கச் சொல்லுகிறார்.

உலகியல் வாழ்வில் ஊர், பேர், வீடு, வாசல், உற்றார், உறவினர் எல்லோரும் இருக்க வேண்டும். இவற்றில் ஒன்றும் இல்லாதவர்களே அனாதை என்று சமூகம் விளக்கும். ஆனால் அருள் உலகிற்கு இந்தக் கூட்டமெல்லாம் தேவையில்லை. அப்பர் சுவாமிகள்,

முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்
தன்னை மறந்தாள்தன் நாமங் கெட்டாள்
தலைப் பட்டாள் நங்கை தலைவன் தாளே

இப்பாடல் வழியாக உலகிலிருந்து விலகி இறைநிலை அடையும்பொழுது பேர் கெட்டுப்போகிறது; அதாவது ஜீவ போதம் கழன்றுவிடுகிறது. நான் நான் என்கிற நினைவு அற்றுப் போய்விட்டது. தான் வேறு தலைவன் வேறு என்ற நிலை அகன்று இறையோடு இரண்டற ஆன்மா இணைகிறது. ஆகவே பஞ்ச பூதங்களின் வாசனை அற்றுப் போய்விடுகிறது. அதன் பயனாகப் பேச்சு அற்றுப் போகிறது. உணர்வு அறுபட்டுவிடுகிறது. உபாயம் தேவைப்படாமல் போய்விடுகிறது. கரையற்றுப் போகிறது. இருள் அற்றுப் போகிறது. அகந்தை அற்றுப் போகிறது. மொத்தத்தில் உலக இச்சை அற்றுப் போய்விடுகிறது. இத்தகைய ஞானத்தைத் தரவல்லன் முருகனே.

வரை அற்று அவுணர் சிரம் அற்று
வாரிதி வற்றச் செற்ற
புரைஅற்ற வேலவன் போதித்த
வா! பஞ்ச பூதமும் அற்று
உரை அற்று உணர்வு அற்று உடல்அற்று
உயிர் அற்று உபாயமற்றுக்

**கரை அற்று இருள் அற்று எனது அற்று**
**இருக்கும் அக் காட்சியதே!**

என்ற அருணகிரியார் பாடலுக்கு அமைந்த விளக்கமே மேற்கண்ட பொழிவு. இப்பொழிவில் திருமந்திரம், திருவாசகம் திருப்புகழ், அப்பர் தேவாரம் போன்ற இலக்கியங்கள் எடுத்தாளப் பெற்றுள்ளன. சொல்ல வந்தது கந்தரலங்காரம் என்றாலும் அவ் வலங்காரத்துக்கு அழகு சேர்க்கச் சொல்லங்காரமாகச் செந்தமிழ் இலக்கியங்களைக் கி.வா.ஜ. எடுத்தாண்டுள்ளமை அவர் புலமைத்திறம் எத்தனைத் திண்மையானது என்பதைக் காட்டும்.

கந்தரலங்காரப் பாடல்களில் சொற்சுவை, பொருட்சுவை மிகுந்த பாடல்கள் பல இருந்தபோதிலும் காப்புப் பாடலாக அமைந்த விநாயகர் துதிப்பாடல் அறிஞர்தம் பாராட்டினைப் பெற்று விமர்சிக்கப்படும் பாடலாகும். அருணகிரியாரின் புலமைத் திறத்தைப் பறைசாற்றும் அப்பாடலை ஆன்றோர்கள் சமயம் கிடைக்கும் போதெல்லாம் சொல்லி மகிழ்வர். கதாகாலட்சேபம் செய்யும் பண்டிதர் ஆன்மிகப் பணியாற்றும் சொற்பொழிவாளர் உரையெழுதும் பெருமக்கள் இப்படிப் பலரும் கையாளும் பாடல்களில் இதுவும் ஒன்று.

**கடதட கும்பக்களிறு**

சம்பிரதாயப்படி ஒரு நூலைத் தொடங்க வேண்டுமெனில் அந்த நூலின் ஆரம்பத்தில் விநாயகரைத் துதிப்பது வழக்கம். சிவாலயத்துக்குப் போகும்போது முதலில் விநாயகரை வணங்குவது மரபு.

திருவண்ணாமலை ஆலயத்தின் கோபுரம் கிழக்கு நோக்கி யிருக்கிறது. அக்கோபுரத்தின் வழியே உள்வாசலுக்குச் சென்றால் அந்த வாசலின் ஒரு பக்கம் விநாயகப் பெருமான் வீற்றிருக்கிறார். மற்றொரு பக்கம் குமரக் கடவுள் எழுந்தருளி யிருக்கிறார்.

அருணகிரிநாதர் திருவண்ணாமலைக்குச் செல்கிறார். நம்மையும் உடன் அழைத்துப் போகிறார். கோபுர வாசலுக்கு வலப்பக்கம் விநாயகர் இருக்கிறார். இடப்பக்கம் முருகப் பெருமான் இருக்கிறார். ஒரு பாட்டிலேயே விநாயகரையும் சொல்லவேண்டும். முருகனையும் சொல்ல வேண்டும் என்று எண்ணுகிறார். அதை எப்படிச் செய்வது? நம் தாய்மார்கள் தம்முடைய மாப்பிள்ளையைச் சொல்லும்போது தம் பெண்ணைச் சொல்லி அவரைக் கூப்பிடுவார்கள். 'நம் லட்சுமி புருஷன்' என்று குறிப்பார்கள். இதைப் போலவே அருணகிரிநாதர் பாடுகிறார். நான்

திருவண்ணாமலைக்குப் போனேன் உன் வாசலில் உள்ள களிற்றுக்கு இளைய களிற்றைத் தரிசித்தேன் என்று பாடுகிறார்.

**அடலருணைத் திருக்கோபுரத் தேஅந்த – வாயிலுக்கு**
**வடவருகிற் சென்று கண்டு கொண்டேன்**

முருகனைக் கண்டு கொண்டேன் என்று சொல்ல வந்தவர். களிறாகிய விநாயகருக்குத் தம்பியாகிய களிற்றைக் கண்டேன் என்கிறார். அண்ணாவாகிய களிறு எத்தகையது? வருவார் தலையில் கடதடகும்பக்களிறு.

இந்தப் பாடலில் ஐந்து பகுதிகள் இருக்கின்றன. 'திருவண்ணாமலையிலுள்ள கோபுரம் அதிலே உள்ள உள்வாயில், அந்த வாயிலுக்குத் தெற்கே இருக்கிற விநாயகர் வடக்குப் பக்கத்தில் இருக்கிற குமாரசுவாமி ஆகிய ஐந்து பொருள்களையும் இந்தப் பாட்டில் காணலாம்.

மூத்த களிற்றைப் பற்றிச் சற்று விரிவாகப் பேசுகிறார் (அருணகிரி) ஆடல் என்றால் ஆடுதல் என்று ஒரு பொருள் உண்டு. வீரம் என்று மற்றொரு பொருளும் உண்டு. ஆடுதல் அழித்தல் அல்லது சங்காரம் செய்தல். அழித்தல் என்ற பொருளை ஆரம்பத்தில் வைத்து நூல் தொடங்கலாமா? ஆகவே ஆடல் என்பதற்கு இங்கே வீரம் என்று பொருள் கொள்ள வேண்டும். 'ஆடல் அருணை' என்பதற்கு வீரத்தை உடைய அருணை என்று பொருள். அருணைக்கு வீரம் ஏது? சென்னை பணம் பெருத்த ஊர் என்றால் சென்னையில் உள்ளவர்கள் பணக்காரர்கள் என்பது பொருள் அல்லவா! தஞ்சாவூர் மண்ணிற்கே சங்கீதம் சொந்தம் என்றால் மிகுதி என்றுதானே பொருள். அதைப்போலவே 'அடல் அருணை' என்றால் அந்த ஊரிலே வாழ்கிறவர்கள் வீரர்கள் என்பது பொருள். என்ன வீரம்? ஞான வீரம் படைத்த இடம் அது.

உள்ளத்திலே தோன்றுகின்ற காமம் முதலிய ஆறு குணங்களையும் வென்றவர்கள் ஞான வீரம் படைத்தவர்கள். வீரர்களில் புலனைந்தும் வென்றான் தன் வீரமே, வீரம் என்று ஔவையார் சொல்லுகிறார்.

ஊரின் சிறப்பை ஒரு சொல்லிலே சொல்லிவிட்டு அங்குள்ள கோயிலைப் பற்றிச் சொல்லுகிறார். கோயிலுக்கு அடையாளம் எது? நெடுந்தூரத்திலே இருந்து பார்த்தாலும் இங்கே ஆலயம் இருக்கின்றதென்று காட்டுவது கோபுரம். அதை ஸ்தூல லிங்கம் என்று சொல்வார்கள். இலட்சுமிகரம்

பொருந்திய ஊர் என்று காட்டுவதற்குக் கோபுரத்தைக் கட்டினார்கள். கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பது அந்தக் காலத்திய உபதேசமொழி. மாடர்க்குச் சித்திரமும் மாநகர்க்குக் கோபுரமும் அழகு என்று இலக்கண நூல் சொல்லுகிறது.

"திருக்கோயில் இல்லாத ஊர் திருஇல் ஊர்" என்பது அப்பர் வாக்கு. இவ்வாறாகக் கோயிற் கோபுரப் பெருமையைச் சுட்டிக்காட்டி அவ்வண்ணாமலையில் எழுந்தருளியுள்ள விநாயகர், முருகப் பெருமான் ஆகியோரையும் சுட்டிக்காட்டி அவர்களை அருணை முனிவர் வருணிக்கும் விதத்தைத் தனக்கே இயல்பான நகைச்சுவைப் பண்போடு கி.வா.ஜ. எடுத்துக்காட்டியிருப்பது, கடுமையான பொருள் பொதிந்த பாடலைக் கூட எளிய முறையில் மக்களுக்குப் புரியும்படிக் கூற முடியும்; அதற்குப் பட்டறிவுப் புலமைத் திறமும் வேண்டும் என்பதாகும்.

## முடிவுரை

ஆன்மிகத்தில் ஈடுபாடுடையோர் இறைவணக்கத்தை ஒரு சடங்காகச் செய்வதால் எந்தப் பயனும் இல்லை. ஆடம்பரமான பக்தி வெளிப்பாடு மட்டும் இறைவனின் பரிபூரணத்தை நம் மனத்தில் கொண்டு வந்துவிடாது. மனம் பண்படவேண்டும். சகிப்புத்தன்மை, விட்டுக் கொடுக்கும் மனப்போக்கு, ஆணவம் அற்ற மனோபாவம் ஆகியனவற்றை இறைவழிபாட்டுப் பயிற்சியின் மூலம் பெறவேண்டும்.

வேலவனின் வெற்றிகளைப் போற்றுவதனாலோ செந்தில் ஆண்டவனின் சிறப்பை நினைத்து இறுமாந்து இருப்பதாலோ நாளும் திருப்புகழ் ஓதுவதாலோ 'ஒருவன்' ஆன்மிக நெறியில் வெற்றி கண்டுவிட்டான் என்று சொல்ல முடியாது.

மரணம் நிச்சயமானது. பன்னிருவிழியோன் என்றாலும் அவன் அருள் நோக்கு, பன்னிருவிதம் கொண்டதல்ல. அது பன்னிரு விழிகளும் இணைந்த ஒரு நோக்கு என்பதை உணர்தல் வேண்டும். அருணகிரிநாதர் கந்தரலங்காரம் வாயிலாக முருகனின் அருளிச் செயல்களை எடுத்துக் கூறிப் பெருமை பேசினாலும் அதன் உள்ளார்ந்த பொருள், வாழ்க்கையை நல்வழியில் நடத்தி மண்ணில் நல்ல வண்ணம் வாழ, எந்த அளவிற்குக் கூறப்பட்டுள்ளது என்பதை அவரவர் உள்ளம் தேடிக் கண்டுபிடித்து அதனைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதே கி.வா.ஜ.வின் வேட்கை. இதுவே ஈண்டு இருபத்தைந்து புத்தகமாகப் பாடல் ஒவ்வொன்றுக்கும்

சிறப்புறு விளக்கங்கள் பெற்றுச் சொற்பொழிவு - பனுவலாக மாறியுள்ளது. சொற்சுவை பொருட்சுவைகளோடு இனிய பக்திச் சுவையும் சந்தச் சுவையும் நிறைந்த இந்தக் கந்தரலங்காரத்திற்கு எத்தனையோ உரை நூல்கள் எழுந்துள்ள போதும் கி.வா.ஜ.வின் சொற்பொழிவின் பயனாய் வந்த இக்கந்தரலங்காரச் சொற் பொழிவு நூல்கள் இருபத்தைந்தும் கந்தவேளின் பெருமையை வெளிப்படுத்தும் வியாக்கியானம் அல்லது விருத்தி உரை எனலாம். ஆகவே, இச்சொற்பொழிவு வழியாகக் கீழ்க்கண்ட சிறப்புச் செய்திகளை உணரமுடிகிறது.

முருகனுடைய அடியவர் இம்மை மறுமைப் பயனை அடைவர்; பக்தித் துணைவழியே ஆனந்த வாரியில் திளைத்தால் புத்தி தெளியும்; புத்தி தெளிந்தால் மனம் சீர்படும்; மனம் சீர்பட்டால் மயில்வாகனன் உள்ளம் என்னும் அகம் அமர்ந்து அருள்பாலிப்பான். முருகனடியார்க்கு இறைநேயம் மிகுந்து விளங்கும். மனத்திண்மையைக் குலைக்கும் காமனும் மரணத்தை உண்டாக்கும் காலனும் சேயோன் பெயர் சொல்லச் சொல்ல வெருண்டு ஓடுவர். இறைவனோடு நெருக்கம் உடையார்க்கு நாளாலும் வினையாலும் கோளாலும் கூற்றுவனாலும் உட் பகையாலும் வரும் துன்பங்களால் அச்சம் உண்டாகாது. உயர் ஞான நெறியை அறிவதற்குரிய சரியை கிரியை யோக மார்க்கங்கள் பற்றிய அறிவுதனை முறையாகப் பெற வழி கிடைக்கும்.

முருகன் குருவடிவானவன்; அருவாய் நின்று; அருள் பாலிப்பவன்; நிருத சங்கார பயங்கரன்; சேவற் கொடி யுடையவன்; அமர சிகாமணி; மயிலேறிய மாணிக்கம்; சிந்தனைச் சிறப்புமிக்கவன்; அடியார்க்கு எளியவன்; வேலாலும் மயிலாலும் நாளும் தன் நேயர்களுக்கு மெய்த்துணையாய் நின்று இருள் அகற்றி வாழ்க்கைக்கு ஒளிசேர்க்கும் கார்த்திகை தீபம். கி.வா.ஜ.வின் சொற்பொழிவுகளின் ஊடே ஊடாடிக்கிடக்கும் இவ்வனுபவ உண்மைகளே அவரது புலமைத்திறத்தை வெளிப் படுத்தும் காரணிகளாக விளங்குவன.

முருக பக்தியிலே நாளும் திளைத்த வாகீசர், சிலேடைச் சித்தர், கி.வா.ஜ.வின் நுண்மாண் நுழைபுலத்திறம் தமிழுலகிற்கு நல்லதோர் இலக்கியப் பனுவலை நல்கியது போலத் தமிழறிஞர் வரிசையில் மட்டுமல்லாது செங்கோடன் அடியவர் வரிசையிலும் இவருக்கென ஒரு சிறப்பான இடத்தை அளிக்கச் செய்து பெருமை சேர்க்கும் என்றால் மிகையாகாது.

## துணை நூற்பட்டியல்


1. கந்தரலங்காரச் சொற்பொழிவுகள் - பகுதி 1, கி.வா. ஜகந்நாதன், அமுத நிலையம் லிட்., சென்னை, 1956.
2. கந்தரலங்காரச் சொற்பொழிவுகள் - பகுதி 2, கி.வா. ஜகந்நாதன், அமுத நிலையம் லிட்., சென்னை, 1957.
3. கந்தரலங்காரச் சொற்பொழிவுகள் - பகுதி 3, கி.வா. ஜகந்நாதன், அமுத நிலையம் லிட்., சென்னை, முதற்பதிப்பு 1958, இரண்டாம் பதிப்பு 1970.
4. கந்தரலங்காரச் சொற்பொழிவுகள் - பகுதி 4, கி.வா. ஜகந்நாதன், அமுத நிலையம் லிட்., சென்னை, 1961.
5. தமிழ் வகையும் வடிவும், ச.வே. சுப்பிரமணியன், தமிழ்ப் பதிப்பகம், சென்னை, 1984.
6. கந்தரலங்காரம் மூலமும் மு. திருவிளங்கம் உரையும், யாழ்ப்பாணம் கூட்டுறவுத் தமிழ் நூற்பதிப்பு விற்பனைக் கழகம், யாழ்ப்பாணம், 1970.
7. ஸ்ரீ. அருணகிரிநாதர் அருளிச்செய்த கந்தரலங்காரம் (விரிவுரையுடன்), உரை - கிருபானந்த வாரியார், வானதி பதிப்பகம் (6ஆம் பதிப்பு), சென்னை, 1978.
8. கந்தரலங்காரம், அருணாச்சல முதலியார், மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை, 1876, 1882.
9. கந்தரலங்காரம் மூலபாடம், ஆறுமுகசுவாமிகள், திருவெண் காடு, பரப்பிரம்ம முத்திராக்ஷர சாலை, சென்னை, 1878.
10. கந்தரலங்காரம், இராமசாமிச் சுவாமி மெமோரியல் அச்சுக்கூடம், சென்னை, 1888.

# இதழியல் பணி

இரா. பிரேமா

தமிழ் இலக்கிய வரலாற்றில் இருபதாம் நூற்றாண்டு ஒரு மறுமலர்ச்சிக் காலம். இலக்கியப் பரப்பு - நாவல், சிறுகதை, புதுக்கவிதை, கட்டுரை என விரிந்து சென்றும், இலக்கணம் மொழியியலாகப் பரந்தும், விமர்சனம், திறனாய்வு, ஆய்வு என இலக்கியங்கள் பட்டை தீட்டப்பட்டும் சிறந்த அக்காலகட்டம் தமிழனின் நற்பேற்றுக் காலமாகும். இக்காலகட்டத்தில் பத்திரிகைகளும் தமிழ் வளர்ச்சியில் குறிப்பிடத்தக்க பங்கை வகிப்பதால் 'பத்திரிகை யுகம்' என்றும் இக்காலம் கொண்டாடப் படுகிறது. இத்தகைய நூற்றாண்டில் தமிழை வளப்படுத்தப் பிறந்த பெரியோர்கள் பலர். தாய்மொழிப் பற்று மிகுந்து, ஆர்வத்துடன் அதை வளர்த்துப் போற்றி, தன்னடக்கத்துடன் தம்மை மறைத்து, தமிழ் வளர்ச்சியைக் கண்டு பெருமிதத்துடன் நின்ற பெரியோர்கள் வரிசையில் முன் நிற்பவர் கி.வா. ஜகந்நாதன். அவர் பெயர் தமிழக எழுத்துலகில் சுமார் அரை நூற்றாண்டுக் காலத்திற்கும் மேலாகப் பல்லோராலும் மதிக்கப் பட்ட - போற்றப்பட்ட பெருமைக்குரியதாகும். தம் முதுமைப் பருவத்திலும் தமிழ் என்றால் இளமை ஆர்வத்துடன் காட்சி அளித்தவர் அவர்.

கி.வா.ஜ. என்றால் சிறந்த பேச்சாளர்; படைப்பாளர்; கட்டுரையாளர்; உரையாசிரியர்; பதிப்பாசிரியர்; சிலேடை மன்னர்; ஆன்மிகவாதி; நாட்டுப்புற இலக்கியத்தை வளர்த்தவர் என்று பலவிதப் பரிமாணங்கள் அவரை இனம் காட்டினாலும், 'இதழாசிரியர்' என்ற பரிமாணம் அவரை இன்று முன்னிறுத்திக் கொண்டிருக்கிறது. கி.வா.ஜ. என்றால் 'கலைமகள்' ஆசிரியர் என்ற பெயர், அவர் மறைந்து 15 ஆண்டுகள் ஆகியும் அவருக்குப் பின் கலைமகளுக்கு மூன்று ஆசிரியர்கள் வந்த பின்பும் நிலைபெற்று நிற்கிறது என்றால், அவரது 'இதழாசிரியர்' என்ற பரிமாணம் எந்த அளவு ஆழமானது; அழுத்தமானது என்பது தெளிவுபடும். தமிழில் புலமையுடன் நன்கு பேசவும் எழுதவும் தெரிந்தவர்கள் பத்திரிகைத் துறைக்கு வருவது என்பது மிகவும் அரிது. கி.வா.ஜ. இதற்கு விதிவிலக்கு. தம் பத்திரிகை மூலம்

நல்ல தமிழை வளர்ப்பது என்ற உயரிய கொள்கையோடு பத்திரிகை உலகிற்குப் புகுந்த அவர் இறுதிவரை, தம் கருத்தில் பின்வாங்காது செயல்பட்டுள்ளார்.

## கலைமகளும் – கி.வா.ஜ.வும்

1932 முதல் இன்று வரை, 74 ஆண்டுகளாக வெளி வந்து கொண்டிருக்கும் 'கலைமகள்' இதழின் ஆசிரியராகச் சுமார் 50 ஆண்டுக் காலம் பணியாற்றியவர் கி.வா.ஜ. 'கலைமகள்' என்றால், அதன் இலக்கியத் தரம் தமிழ் வாசகனின் மனத்தில் வந்து முன் நிற்கும். அன்றும் இன்றும் தம் வெளியீட்டுப் பாணியை மாற்றிக் கொள்ளாது, நல்ல தரமான இலக்கியப் படைப்புகளைத் தமிழுக்கு வழங்கி வருவதில் 'கலைமகள்' முன் நிற்பதற்கு அன்றே ஆழமாக வித்திட்டவர் கி.வா.ஜ.

கலைமகளில் கி.வா.ஜ. பணியாற்றிய 50 ஆண்டுக் காலமும் அதன் **பொற்காலம்** என்றே சொல்ல வேண்டும். அவர் தன்னைக் **கலைமகள் தொண்டன்** என்று கூறிக்கொள்வதில் பெருமை அடைந்துள்ளார். தமிழின் முன்னணி எழுத்தாளர்கள் பலரும் கலைமகளில் எழுதுவதைக் கௌரவமாக எண்ணி இருந்த காலகட்டம் அது. நாமக்கல் கவிஞர், கவிமணி, உ.வே.சா., வையாபுரிப் பிள்ளை என்ற தமிழ் இலக்கிய ஜாம்பவான்களும், புதுமைப்பித்தன், கு.ப.ரா., நா. பிச்சமூர்த்தி, அகிலன், நா.பா. ராஜம் கிருஷ்ணன், அநுத்தமா, ஆ ர்
சூடாமணி என்ற படைப்பிலக்கிய ஜாம்பவான்களும், கா.ஸ்ரீ.ஸ்ரீ., த.நா. சேனாதிபதி, த.நா. குமாரசாமி, கி. சந்திரசேகர் என்ற மொழிபெயர்ப்பு ஜாம்பவான்களும் கலைமகளோடு வைத்திருந்த தொடர்பு மிக நெருக்கமானது. எல்லோரையும் அரவணைத்துக் கொண்டு தமிழ் இலக்கிய மறுமலர்ச்சிக்கும் படைப்பிலக்கிய வளமைக்கும் தம் இதழியல் பணி மூலம் ஆரவாரம் இல்லாமல் வித்திட்டவர் கி.வா.ஜ. என்பதே இக்கட்டுரை முன் வைக்கும் செய்தியாகும்.

## கலைமகள் தோற்றம்

கலைமகள் இதழ் 1932ஆம் வருடம், நாராயணசாமி ஐயர் அவர்களால் தோற்றுவிக்கப்பட்டது. நாராயணசாமி ஐயர் சிறந்த கல்விமான். அவர் 'மெட்ராஸ் லா ஜர்னல்', இதழை ஆங்கிலத்தில் வாரம் தோறும் வெளியிட்டு வந்தார். அத்துடன் 'திரிவேணி' என்ற ஆங்கில இதழையும் வெளியிட்டு வந்தார். அப்பத்திரிகை 'லா ஜர்னல்' அச்சகத்தில் அச்சிடப்பட்டு வெளி

வந்து கொண்டிருந்தது. தமிழ் மொழி மீது ஈடுபாடும், தமிழறிஞர்களோடு நெருங்கிய தொடர்பும் கொண்ட நாராயணசாமி ஐயர் திரிவேணி இதழ் போன்ற ஒரு இதழைத் தமிழிலும் வெளிக்கொணர வேண்டும் என்று விரும்பி தம்மோடு ஒத்த கருத்துடைய நண்பர் பெ.நா. அப்புசாமி அவர் களுடன் தமிழ்த்தந்தை உ.வே. சாமிநாதையரிடம் சென்று அது குறித்து ஆலோசனை கேட்டார். உ.வே.சா.வும், தமிழ் இதழ் முயற்சியை வரவேற்று வாழ்த்துக் கூறியதுடன், தானும் அதில் எழுதுவதாகவும் கூறினார். அத்துடன் 'இவர் சில காலமாக என்னிடம் படித்துக் கொண்டும் ஆராய்ச்சிக்கு உதவி செய்து கொண்டும் வருகிறார்; நன்றாக ப்ரூப் பார்ப்பார்; தமிழ் வசனம் நன்றாக எழுதுவார்; பத்திரிகையில் இவரை உபயோகித்துக் கொள்ளலாம்; இடமிருந்தால் சேர்த்துக் கொள்ளலாம்' என்றுரைத்தார். (கி.வா.ஜ.; வளரும் கலைமகள்) உடனே நாராயணசாமி ஐயரும் மகிழ்ச்சியடைந்து அவரைக் கலைமகளின் துணை ஆசிரியராகச் சேர்த்துக் கொண்டார். இதனால், கி.வா.ஜ. கலைமகளின் முதல் இதழ் வெளிக்கொணரும் பணியிலேயே பங்குகொள்ளும் வாய்ப்பினைப் பெற்றார்.

கலைமகளின் முதல் நிர்வாக ஆசிரியராகப் பொறுப் பேற்றவர் டி.எஸ். ராமச்சந்திர ஐயர் ஆவார். முதல் இதழ் 108 பக்கங்கள் கொண்டதாக வெளிவந்தது. அவ்விதழில் ரா. ராக வையங்கார், பெ.நா. அப்புசாமி ஐயர், டி.எஸ். இராமசந்திர ஐயர், எம்.எஸ். சபேச ஐயர், மு. ராகவையங்கார், டி.கே.சி., எஸ். வையாபுரிப் பிள்ளை, மாதவையாவின் மகள் எம். லக்ஷ்மி, வி. விசாலாட்சி அம்மையார், கி.வா.ஜ. உட்பட பலர் தங்கள் படைப்புகளை நல்கியிருந்தனர். கி.வா.ஜ. கலைமகளின் மீது வாழ்த்துக் கவிதை எழுதியிருந்தார்.* இவ்வாறு, கலைமகளின் முதல்இதழ் பணியிலேயே கி.வா.ஜ. பங்குகொண்டிருக்கிறார். தொடக்க இதழ்களில், கிறித்துவக் கல்லூரித் தமிழாசிரியர் அநவரதம் பிள்ளை பழைய செய்திகள், புராண நூல்கள் பற்றிப் பல கட்டுரைகளை வழங்கியுள்ளார்; ரசிகமணி டி.கே.சி. நூல் மதிப்புரைகள் எழுதியுள்ளார்; தமிழ் வரலாறு, மொழி நூல், மொழிபெயர்ப்புக் கட்டுரைகள் இவற்றை எஸ். வையாபுரிப் பிள்ளை எழுதியுள்ளார்; பெ. நா. அப்புசாமி விஞ்ஞானக் கட்டுரை களைத் தொடர்ந்து எழுதி வந்துள்ளார். மு. ராகவையங்கார் பல தமிழாய்வுக் கட்டுரைகளை எழுதியுள்ளார்.

கலைமகளின் கௌரவ ஆசிரியர்களாகத் தி. சிவராம சேதுப்பிள்ளை, அநவரதம் பிள்ளை, டி.கே.சி., எஸ். வையாபுரிப்

பிள்ளை, பெ.நா.அப்புசாமி, மு.ராகவையங்கார், கே.சுவாமி நாதன், க.அ.நீலகண்ட சாஸ்திரியார், கே.வி.கிருஷ்ணசாமி ஐயர் ஆகியோர் தொண்டாற்றியுள்ளனர். அப்பொழுது அவர்களுடன் இணைந்து கி.வா.ஜ. உதவியாசிரியராகப் பணியாற்றியுள்ளார்.

### இதழ் வெளியீட்டில் கி.வா.ஜ.வின் தனித்திறன்

1932 முதல் 34 வரை, கலைமகள் வெளியீட்டில் கௌரவ ஆசிரியர்கள் பெரும்பங்கு கொண்டிருந்தார்கள். 34இல், கலைமகளின் முழுப்பொறுப்பும் கி.வா.ஜ.வின் கைக்கு வந்தது. அதுமுதல், அவர் கலைமகளைத் தரமான மாத இதழாகக் கொண்டு வருவதற்கான முயற்சியில் முழுமூச்சாகப் பாடுபடத் தொடங்கினார்.

கி.வா.ஜ., முந்தைய தலைமுறையினர்; தீவிர இலக்கியப் பற்றாளர் என்றாலும் தமிழில் மறுமலர்ச்சி இலக்கியங்கள் உருவாக வேண்டும் எனத் தம் இதழ் மூலம் பாடுபட்டுள்ளார்; பழமைக்கும் புதுமைக்கும் பாலமாகச் செயல்பட்டுள்ளார்.

முப்பதுகளில் பெரும்பாலான தமிழ்ப் புதினங்கள் துப்பறியும் கதைகளாக, வெறும் பொழுதுபோக்கு அம்சங் களோடு வெளிவந்து கொண்டிருந்தன. இதனால் தமிழ் வாசகர் களின், வாசிப்பு நிலையும் பின்தங்கி இருந்தது. இச்சூழலை மாற்ற எண்ணினார் கி.வா.ஜ.

அதே தமிழ்ச் சூழலில் 'மணிக்கொடி' இதழின் மூலம் சோதனை முயற்சிகளும், தமிழ் எழுத்தாளர்களால் மேற் கொள்ளப்பட்டன. மணிக்கொடியின் முயற்சி, சாதாரண மக்களுக்குப் புரியாததும், புதியதுமாக இருந்ததால் பெரும் பான்மையான சராசரி வாசகர்கள் அதில் ஈடுபாடு காட்ட வில்லை. இந்த இரு தரப்பு வாசகர்களையும் சமன்படுத்தும் முயற்சியில் கி.வா.ஜ. ஈடுபட்டார். பண்பாட்டைப் போற்றக் கூடிய, கருத்தியல் அடிப்படையில் எழுதப்பட்ட, இலக்கியப் பாங்கான படைப்பிலக்கியத்தைத் தம் இதழின் மூலம் தர முற்பட்டார். அதன் முதற்படியாக, சராசரி வாசகனின் வாசிப்புப் பழக்கத்தை முன்னேற்ற நினைத்துக் கலைமகளில், வடஇந்திய இலக்கிய ஜாம்பவான்களான காண்டேகர், சரத் சந்திரர், ரவீந்திரநாத் தாகூர், பக்கிங் சந்திர சட்டர்ஜி போன்றவர்களின் காலத்தால் அழியாக் காவியங்களைத் தமிழில் மொழி பெயர்க்கச் செய்து வெளியிட்டார். நல்ல இலக்கியங்களை அறிமுகப்படுத்தி, வாசகர் மனத்தில் ஒரு மாற்றத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக ஏற்படுத்தினார். சுமார் 5 ஆண்டுகள் வரை

இம்முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டுத் தமிழ் வாசகர்களை முதல்தர வாசிப்பிற்குப் பழக்கப்படுத்தினார் கி.வா.ஜ.

## தமிழ்ச் சிறுகதை உருவாக்கத்தில் கி.வா.ஜ.வின் பங்கு

முதல் இதழில் இருந்தே கலைமகள் 'கதை'களை வெளியிட்டு வந்தது. அவைகள் தரமான கதைகளாக இருக்க வேண்டும் என்பதில் தனிக் கவனம் செலுத்தியுள்ளது ஆசிரியர் குழு. தொடக்க இதழ்களில் எஸ். வையாபுரிப் பிள்ளை கதையைத் தேர்ந்தெடுக்கும் பணியைச் செய்துள்ளார்.

கி.வா.ஜ. முழுப் பொறுப்பேற்றவுடன் சிறுகதைப் போட்டிகள் நிகழ்த்தினார். தரமான கதைகளைத் தேர்ந்தெடுக்க ஒவ்வொரு வருடமும் மூன்று உறுப்பினர்கள் கொண்ட குழுவினை ஏற்படுத்தி, நியாயமான முறையில் கதைகளைத் தேர்ந்தெடுத்து அதற்குப் பரிசுத் தொகையும் வழங்கியுள்ளார். இந்தப் போட்டிகளில் புதியவர்களும் வரவேற்கப்பட்டதால் எழுத்தார்வம் கொண்ட பலரும் இதில் கலந்துகொண்டனர்.

'தேர்ந்தெடுத்த சிறுகதைகளை மிகுதியாக வெளியிடும் தொண்டில் பல காலமாகக் 'கலைமகள்' சிறந்து விளங்குகிறது... புதிய புதிய எழுத்தாளர்களை அறிமுகப்படுத்த வேண்டும் என்ற ஆர்வம் எங்களுக்கு எப்பொழுதுமே உண்டு. சிறுகதைப் போட்டி வைத்ததற்கு அதுவே காரணம்' (ஜூலை 1971) என்று கி.வா.ஜ. கூறியுள்ளது முற்கூறிய கருத்தை உறுதிப் படுத்துகின்றது.

கி.வா.ஜ. 'மணிக்கொடி' இதழ் நின்ற பிறகு, அதன் எழுத்தாளர்களான புதுமைப்பித்தன்,. ந. பிச்சமூர்த்தி, கு.ப.ரா., சிட்டி போன்றவர்கள் கலைமகளில் தங்கள் படைப்புகளை நல்க இடமளித்தார். புதுமைப்பித்தனின் கடவுளும் கந்தசாமி பிள்ளையும், சித்தி, கட்டிலை விட்டிறங்காக் கதை, அன்றிரவு போன்ற கதைகள் கலைமகளிலே வெளிவந்தன.

சிறுகதை இலக்கியத்தை வளர்த்தெடுப்பதில் கி.வா.ஜ.வின் ஆர்வம் அளவிட முடியாததாகும். புதிதாகச் சிறுகதை எழுதத் தொடங்குபவர்களுக்கும் சிறுகதையைப் படித்து இரசிப்பவர்களுக்கும் மிகவும் பயன்படும் விதத்தில் 'கதையின் கதை' என்ற கட்டுரைத் தொடரை 14 எழுத்தாளர் களைக் கொண்டு, அவர்கள் தங்கள் முதல் கதையை உருவாக்கிய விதத்தை எழுதச் செய்து வெளியிட்டுள்ளார்.

மேலும், சிறுகதைப் போட்டிகள் வைப்பதில் என்னென்ன முயற்சிகள் மேற்கொள்ளமுடியுமோ, அத்தனை முயற்சிகளையும் மேற்கொண்டுள்ளார் கி.வா.ஜ 1934ஆம் ஆண்டு ஜனவரி இதழில் முதல் சிறுகதைப் போட்டி நடத்தப்பட்டது. கலைமகள் நடத்திய முதல் சிறுகதைப் போட்டியில் ந. பிச்சமூர்த்தியின் 'முள்ளும் மலரும்' என்ற கதைக்கு முதல் பரிசு கிடைத்துள்ளது. 1947இல், யுனைடெட் இந்தியா இன்சூரன்ஸ் கம்பெனிக்காக ஆயுள் காப்பீடு செய்வதின் இன்றியமையாமையையும், அதன் நன்மைகளையும் எடுத்துக்காட்டும் சிறுகதைப் போட்டி ஒன்றைக் கி.வா.ஜ. நடத்தியுள்ளார். இப்போட்டியில் முதல் பரிசாக ரூ.200/- ஒரு நபருக்கும், இரண்டாம் பரிசாக ரூ.75/- நான்கு நபர்களுக்கும் வழங்கப்பட்டன.

கி.வா.ஜ. 1949ஆம் ஆண்டு, 'கதவைப் படீரென்று சாத்தினாள்', என்று முதல் வரி கொடுத்து, த.நா. குமாரசாமி, மாயாவி, அகிலன் இவர்களை எழுதச் சொல்லி வெளியிட்டுள்ளார். எதிர்பாராத விதத்தில் மூவர் கதைகளிலும் கதாநாயகனுக்குச் 'சுந்தரம்' என்ற பெயர் வைக்கப்பட்டிருந்தது வியப்புக்குரிய ஒன்று என்று அவர் குறிப்பிட்டுள்ளார். இக்கதைகளுக்கு வாசகர்கள் மிகுந்த வரவேற்பை நல்கியதால், 'குழந்தை வீரிட்டழுதது' என்ற தொடக்க வாக்கியம் கொடுக்கப்பட்டுப் போட்டி நடத்தப்பட்டது. அப்போட்டியில் வித்தியா எழுதிய 'அன்புமனம்' என்ற கதை பரிசு பெற்றது. 'நீண்ட பெருமூச்சு வெளிப்பட்டது' என்ற இறுதி வாக்கியத்தைக் கொடுத்து மற்றொரு போட்டி நடத்தப்பட்டது. அதிலும் விந்தியாவின் குழந்தை உள்ளம் என்ற கதைக்குப் பரிசு கிடைத்தது.

1950 - 51 இல், 'இரட்டைக் கதைகள்' என்ற தலைப்பில் சிறுகதைப் போட்டி நடத்தப்பட்டுள்ளது. அப்போட்டியில் குங்குமச் சிமிழ், புதுவீடு, கோபுரவாசல், கெட்டி மேளம் போன்ற தலைப்புகளில் இரண்டு இரண்டு எழுத்தாளர்கள் எழுதிய கதைகள் வெளியாகியுள்ளன. 'புதுவீடு' என்ற தலைப்பில் சரோஜா ராமமூர்த்தியும், குமுதினியும் எழுதியுள்ளனர். 'கோபுர வாசல்' என்ற தலைப்பில் கி. சந்திரசேகரன், கி.ரா. இருவரும் எழுத, 'கெட்டி மேளம்' என்ற தலைப்பில் லாச.ராவும், தி. ஜானகிராமனும் எழுதியுள்ளனர்.

1952இல், துணுக்குக் கதைப் போட்டி நடத்தியுள்ளார் கி.வா.ஜ. . . 'குளத்தங்கரையில் தலைப்பாகை, சட்டை முதலியன இருந்தன. ஆளைக் காணவில்லை. தேடிக் கொண்டிருக்கிறார்கள்!

இப்படி வந்த செய்தித் துணுக்கை வைத்துக் கொண்டு சிறுகதைப் போட்டி நடத்தப்பட்டது. சிறந்த இரண்டு கதைகளுக்குப் பரிசுகள் அறிவிக்கப்பட்டன. கதிரேசன் என்பவர் எழுதிய 'குளத்தங்கரை' என்ற கதைக்கும், தியாகி என்பவர் எழுதிய 'முருகன் பணம்' என்ற கதைக்கும் பரிசுகள் கிடைத்தன.

1953இல், 'இரட்டை மணிமாலைக் கதைகள்' என்ற போட்டி வைக்கப்பட்டுள்ளது. 'ஆழ்கடல்', 'மலையுச்சி' என்றும் 'நீருற்று', 'தீக்கொழுந்து' என்றும் மாறுபட்ட இரு தலைப்புகள் சில கொடுத்து இப்போட்டி நடத்தப்பட்டுள்ளது. 'ஆழ்கடல்' என்ற தலைப்பில் கா.ஸ்ரீ.ஸ்ரீ.யும், 'மலையுச்சி' என்ற தலைப்பில் த.நா.சேனாதிபதியும் கதைகள் எழுதியுள்ளனர். 'நீருற்று' என்ற தலைப்பில் கௌரி அம்மாளும், 'தீக்கொழுந்து' என்ற தலைப்பில் அநுத்தம்மாவும் எழுதியுள்ளனர். அதே ஆண்டில், நெசவாளர்களுடைய வாழ்க்கையை நிலைக்களனாகக் கொண்டு எழுதப்படும் சிறுகதைப் போட்டி ஒன்று நடத்தப்பட்டுள்ளது. அதற்குப் பரிசாக ரூ.100/- வழங்கப்பட்டுள்ளது. அப் போட்டியில் ராஜம் கிருஷ்ணன் பரிசு பெற்றுள்ளார்.

1954இல், 'அநுபந்த சிறுகதைகள்' வெளியாகியுள்ளன. விந்தியா என்பவர் கலைமகள் தீபாவளி மலரில் 'புள்ளிக்கோலம்' என்ற கதை எழுதியுள்ளார். அதனைத் தொடர்ந்து அதன் விரிவாக ரமணி ராமநாதன் என்பவர் 'தீபச்சுடர்' என்ற கதையும், அதைத்தொடர்ந்து 'அன்புவெள்ளம்' என்ற கதையும், அதனைத் தொடர்ந்து ஷோபனா என்பவர் 'குருதட்சணை' என்ற கதையும், வேமுகி என்பவர் 'எல்லைக் கோடு' என்ற கதையும் எழுதியுள்ளனர். 'போராட்டம்' என்ற சிறுகதைக்கு மட்டும் 15 அநுபந்த கதைகள் வெளிவந்துள்ளன.

1955இல், 'கிழமைக் கதைகள்' என்ற பெயரில் போட்டிகள் நடத்தப்பட்டுள்ளன. அதற்கும் ரூ. 100/- பரிசாக வழங்கப்பட்டுள்ளது. ஞாயிற்றுக் கிழமை கதையை எழுதிய அ. வேதாசலம் என்பவருக்கும், திங்கள் கிழமை கதையை எழுதிய ஏ.எல். ராகவன், ராஜம்கிருஷ்ணன் ஆகிய இருவருக்கும், செவ்வாய்க் கிழமை கதையை எழுதிய அநுத்தம்மாவிற்கும், புதன் கிழமை கதையை எழுதிய 'மஹி' என்பவருக்கும் பரிசுகள் வழங்கப்பட்டுள்ளன.

1957 இல், 'கலைமகள்' வெள்ளிவிழா கொண்டாடிய போது நடத்திய சிறுகதைப் போட்டியில் ஆர். சூடாமணியின்

'காவேரி' என்ற கதைக்குப் பரிசு நல்கப்பட்டுள்ளது. 1958, 59 ஆம் ஆண்டுகளில், வண்ணக்கதைப் போட்டிகள் நடத்தப்பட்டுள்ளன. 'வெண்புறா' என்ற தலைப்பில் நடத்தப்பட்ட சிறுகதைப் போட்டியில் அசோகமித்திரன், எஸ். விஜயராகவன் ஆகிய இருவருக்கும் ரூ. 250/- பரிசு பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளது. 'மஞ்சள் கயிறு', 'பச்சைக்கொடி', 'செம்மீன்', 'நீலக்கடல்', 'பொன்வண்டு', 'கருவளை' என்ற தலைப்புகளில் போட்டிகள் நடத்தப்பட்டுள்ளன.

1966 இல், போர்முனைக் கதைகள் என்ற பெயரில் சிறுகதைப் போட்டி நடத்தப்பட்டுள்ளது. அப்போட்டிக் கதைகள் எல்லையிருந்த இராணுவ வீரர்களுக்கு விருந்தளிப்பனவாக அமைந்தன. 1967இல், ஏர்முனைக் கதைகள் என்ற பெயரில் சிறுகதைப் போட்டி நடத்தப்பட்டது. அபிராமி துர்காதாஸ் எழுதிய 'ஏர்முனை' என்ற சிறுகதை முதல் பரிசும், என். முத்துராமன் எழுதிய 'காணி நிலம்' என்ற சிறுகதை இரண்டாம் பரிசினையும் பெற்றுள்ளன. மற்றொரு கதைப் போட்டியில் ஒருவர் கதை எழுதத் தொடங்கி இருவர் முடித்துள்ளனர்.

இவ்வாறு, கி.வா.ஜ. பலவிதமாகச் சிறுகதைப் போட்டிகள் வைத்து, புதிய எழுத்தாளர்கள் பலரையும் ஊக்குவித்துள்ளார். இப்போட்டிகள் மூலம் அவர் 'சாகாவரம்' பெற்ற கதைகளைத் தமிழுக்குத் தந்தார் என்று கூறுவதை விட, புதிய தமிழ் எழுத்தாளர்கள் பலரைக் கண்டுபிடித்துத் தந்தார் அல்லது உருவாக்கினார் என்று கூறுவதே சாலப் பொருந்தும். போட்டிகளில் வெற்றி பெற்ற எழுத்தாளர்களில் பலர் தமிழ் இலக்கிய உலகில் குறிப்பிட்டுச் சொல்லும்படியாகக் கால்தடம் பதித்து, படைப்பிலக்கியத்திற்கு வளமும் பெருமையும் சேர்த்துள்ளனர் என்பது மறுக்க இயலாத உண்மையாகும்.

அநுத்தமா, ராஜம் கிருஷ்ணன், ஆர். சூடாமணி, மாயாவி, வாசவன் போன்றவர்கள் கலைமகள் எழுத்தாளர்களாகத் தம் எழுத்துலக வாழ்வைத் தொடங்கி, நல்ல தமிழ் எழுத்தாளர் களாகத் தங்களை நிலைநிறுத்திக் கொண்டுள்ளனர். கி.வா.ஜ. சிறுகதை எழுதுவதில் வல்லவராகத் திகழ்ந்துள்ளார். மேக மண்டலம், பவள மல்லிகை, கலைஞன் தியாகம், அறுந்த தந்தி என்ற பெயர்களில் அவரது சிறுகதைத் தொகுதிகள் வெளியாகியுள்ளன.

### தமிழ் நாவல் வளர்ச்சியில் கி.வா.ஜ.வின் பங்கு

கி.வா.ஜ. கலைமகள் மூலம் நல்ல பல நாவல்களை உருவாக்கித் தந்துள்ளார். 1945, நவம்பரில் கலைமகள் அதிபர்

நாராயணசுவாமி காலமானார். 1946 இல், அவருக்கு அஞ்சலி செலுத்தும் விதமாக அவரது பெயரில் நாவல் போட்டி அறிவிக்கப் பட்டது. அப்போட்டிக்கு மூன்று நடுவர்கள் நியமிக்கப்பட்டு, சிறந்த கதை தேர்ந்தெடுக்கப்பட்டது. முதல் போட்டியில் அகிலன் வெற்றி பெற்றார். அவரது 'பெண்' என்ற நாவலுக்கு முதல் பரிசு கிடைத்தது. ஜி.எஸ். மணி என்பவரது 'புது உலகம்' என்ற நாவலுக்கு இரண்டாம் பரிசு நல்கப்பட்டது. தமிழில் முதல்தர நாவல்கள் வெளிவர வேண்டும் என்ற நோக்கில், இப்பரிசுப் போட்டி வைக்கப்பட்டது கி.வா.ஜ. காலம் வரை மட்டுமன்றி இன்று வரை, இப்போட்டி சிறப்பாக நடத்தப்பட்டு வருகிறது. கலைமகளின் முதல் நாவல் பரிசினைப் பெற்ற அகிலன் இந்தியாவின் மிகப்பெரிய இலக்கியப் பரிசான ஞானபீடப் பரிசு பெற்றது கி.வா.ஜ.வின் எண்ணத்திற்குக் கிடைத்த பெருத்த வெற்றியாகும்.

நாவல் போட்டியில் தொடர்ந்து, கு. ராஜவேலுவின் 'காதல் தூங்குகிறது', ராஜம் ராமமூர்த்தியின் 'பெண் உள்ளம்', ராஜம் கிருஷ்ணனின் 'பெண் குரல்', சூடாமணியின் 'மனத்துக்கு இனியவள்', கி. சரஸ்வதி அம்மாளின் 'நிழலும் ஒளியும்', அநுத்தம்மாவின் 'மணல் வீடு', லட்சுமி ராஜரத்தினத்தின் 'இதயக்கோயில்', கமலா சடகோபனின் 'கதவு', ரஸவாதியின் 'ஆதார சுருதி', கே.பி. நீலமணியின் 'புல்லின் இதழ்கள்', குமாரி இந்திராவின் 'லட்சியப் பாதை' போன்றவை பரிசு பெற்றன. கலைமகள் பரிசைப் பெற்ற இந்நாவலாசிரியர்கள் தமிழ் எழுத்துலகில் பெரும் புகழ் பெற்று விளங்குகிறார்கள். அவர்கள், பரிசு பெற்றதோடு நின்றுவிடாமல், கலைமகளில் தொடர்ந்து தங்களது படைப்புகளை வழங்கியுள்ளார்கள். அவர்களை மேலும் மேலும் எழுதத் தூண்டிய பெருமை கி.வா.ஜ.வைச் சாரும். அவ்வகையில் அகிலன், ராஜம்கிருஷ்ணன், ஆர். சூடாமணி, அநுத்தம்மா போன்றவர்களின் படைப்புகள் தொடர்ந்து கலைமகளில் வெளியாகியுள்ளன. சில எழுத்தாளர் களின் சோதனை முயற்சிகளுக்கும் கி.வா.ஜ. கலைமகளில் இடமளித்துள்ளார். உதகை மலைப்பகுதியில் வாழும் பழங்குடி மக்களான தோடர்களின் வாழ்வியல் மறுமலர்ச்சியை அடிப்படை யாகக் கொண்டு எழுதப்பட்ட ராஜம் கிருஷ்ணனின் 'குறிஞ்சித் தேன்' நாவல் ஒரு சோதனை முயற்சியாகும். அதுபோல, 'எரிமலை' என்ற சிறுகதையைக் கலைமகளில் வெளியிட்ட அகிலன், அதன் விரிவாக 'எங்கே போகிறோம்?' என்ற நாவலை எழுதினார். வாழ்க்கையில் தடம் புரண்டு, விபச்சாரத்தையே

தன் தொழிலாகக் கொண்ட ஒரு பெண்ணைக் கதைநாயகி ஆக்கி, அவளின் அறிவுக் கூர்மையை, ஆளுமை வளர்ச்சியைப் பேசும் இக்கதையும் ஒரு சோதனை முயற்சிதான். குடும்பம் சார்ந்த கதைகளும், பண்பாடு போற்றும் கதைகளும் மட்டுமே வெளியிடும் கலைமகளில் கி.வா.ஜ., 'புதுமை' என்ற பெயரில் கலாச்சாரச் சீரழிவை அனுமதிக்கவில்லையே தவிர, மேற்காட்டிய கதைகள் போன்ற சோதனை முயற்சிகளை நன்கு வரவேற்றுள்ளார்.

சிறுகதை படைப்பாக்கத்திலும் இவ்வகையான சோதனை முயற்சிகளைக் கி.வா.ஜ. ஆதரித்துள்ளார். 'மண்ணுக்குரியவன்', 'போர்வை', என்ற சிறுகதைகள் சோதனை முயற்சிகள் என்றும், அவற்றைக் கி.வா.ஜ. சிறிதும் தயக்கமின்றி வெளியிட்டார் என்றும் ராஜம் கிருஷ்ணன் தன் பேட்டியின்போது குறிப்பிட்டார். மேலும், தமது பரிசுபெற்ற நாவலான 'பெண்குரல்' கதையில் கூட, கதைநாயகி, கோழையும் தன்னலவாதியுமான தன் கணவனுடன் உடல் உறவு கொள்வதை மறுக்கிறாள். இது, அந்நாவல் வெளிவந்த காலகட்டத்தில் புரட்சிகரமானது என்றாலும், கதையின் நியாய தர்மங்களைக் கருத்தில் கொண்டு, தேர்வுக் குழுவில் ஒருவராக இருந்த கி.வா.ஜ.வும் மற்றவர்களும் அதற்குப் பரிசு கொடுக்க முன் வந்ததாக ராஜம் கிருஷ்ணன் அப்பேட்டியின் போது குறிப்பிட்டார்.

தமிழறிஞர் தெ.பொ.மீ. இது பற்றிக் குறிப்பிடும்போது,

> **ஆழ்ந்து அகன்று, பழந்தமிழ் இலக்கிய அறிவு பழுத்த கி.வா.ஜ. அவர்கள் இந்தப் புதுவகை இலக்கியப் படைப்பில் ஈடுபட்டதால், பழந்தமிழ் அறிஞர் கூட்டமே இந்த முயற்சியை வாழ்த்தவும் வளர்க்கவும் முன்வந்தது. இல்லையானால் புதிய வகை இலக்கியப் படைப்புக்கள் எல்லாம் தமிழுக்குப் புறம்பானவை என்று தமிழறிஞர்களால் ஒப்புக் கொள்ளாமல் புறக்கணிக்கப்பட்டிருக்கும்; தமிழுக்கே பெரும்கேடு விளைந்திருக்கும்**

என்று கூறியிருப்பதும் சிந்திக்கத்தக்கதாகும்.

கருத்தாக்கத்தில் மட்டுமல்ல நாவல் வடிவத்திலும், கலைமகள் மூலம் கி.வா.ஜ. சோதனை முயற்சியில் ஈடுபட்டார். குறுநாவல் என்றும், நெடுங்கதை என்றும் அவ்வடிவங்களுக்குப் பெயர் சூட்டினார். நெடுங்கதை என்பது சிறுகதையின் நீண்ட நெடிய வடிவம் என்றும், குறுநாவல் என்பது நாவலின் குறுகிய வடிவம் என்றும், இவ்வடிவ சோதனைகளுக்கு விளக்கமும்

அளித்துள்ளார் கி.வா.ஜ. அதாவது, நாவலின் பண்புகளை மிகுதியாகக் கொண்டது குறுநாவல் என்றும், சிறுகதையின் பண்புகளை மிகுதியாகக் கொண்டது நெடுங்கதை என்றும் அவர் விளக்கியுள்ளார். கலைமகளில் பல குறுநாவல்களும், நெடுங்கதைகளும் வெளிவந்து வாசகர்களுக்கு விருந்து படைத்துள்ளன. கலைமகள் அதிபர் ராமரத்தினம் பெயரால் குறுநாவல் போட்டிகளையும் கி.வா.ஜ. நடத்தியுள்ளார்.

**கட்டுரை ஆக்கத்தில் கி.வா.ஜ.வின் பணி**

கலைமகள் மூலம் கி.வா.ஜ. கட்டுரை ஆக்கத்திலும் குறிப்பிடத்தக்க பங்கு வகித்துள்ளார். தொடக்க கலைமகள் இதழ்கள் அறிவியல் கட்டுரைகளுக்குச் சிறந்த இடம் நல்கி வந்துள்ளன. பெ.நா. அப்புசாமி நல்ல பல அறிவியல் கட்டுரை களைத் தேர்ந்தெடுத்து 'கலைமகளில்' வெளியிட்டுள்ளார். வருடம் செல்லச் செல்ல கலைமகள் இதழ், கதை இலக்கியத்திற்கு முக்கியத் துவம் தரத் தொடங்கினாலும், கட்டுரை இலக்கியத்தை வளர்த் தெடுப்பதில் பின்வாங்கவில்லை. அறிவியல் கட்டுரைகள் மட்டுமல்ல, இலக்கியக் கட்டுரைகள், விமர்சனக் கட்டுரைகள், பயணக் கட்டுரைகள், அரசியல் கட்டுரைகள், வரலாற்றுக் கட்டுரைகள், சமூகநலக் கட்டுரைகள் என்று பலவகைக் கட்டுரைகள் கலைமகளில் வெளிவந்துள்ளன. கனரக ஆலைகள் பற்றியும், மின்சார சக்தியின் சில உபயோகங்கள், மின்சாரத்தின் விந்தை, ராக்கெட் விமானம், இந்திய மூலப்பொருட்கள், இரசாயனமும் தாவரங்களும், நெல்லின் கதை, கோதுமையின் கதை, சூரிய ராஜ்ஜியம், சோப்பு செய்முறை, பருத்தி, தேயிலை இவற்றின் வரலாறுகள் என அறிவியல் கட்டுரைகள், விவசாயம், தொழில்நுட்பம், மின்சாரம், மின்னணுவியல், மருத்துவம் என்று பல துறைகளில் விரிந்து பரந்துள்ளன. மேலும் கலைமகளில் சர்.சி.வி. இராமனின் அறிவியல் கட்டுரைகளும் மொழிபெயர்த்து வெளியிடப்பட்டன.

இலக்கியக் காட்சிகள், பர்மியப் பயணம், கதிர்காம யாத்திரை என்ற பெயர்களிலும், கண்டறியாதன கண்டேன் என்ற பெயரிலும் கி.வா.ஜ. தம் வெளிநாட்டுப் பயணங்கள் குறித்துக் கட்டுரைத் தொடர்கள் எழுதியுள்ளார். சைவ சமயக் குரவர் நால்வரோடும் தொடர்புடைய தலங்களுக்குச் சென்று, சுவையான பயணக் கட்டுரைகளை எழுதி, உரிய புகைப்படங் களுடன் வெளியிட்டுள்ளார். நவக்கிரகத் தலங்கள் பற்றியும் அவர் தொடர் கட்டுரைகள் எழுதியுள்ளார். மேலும் அவர், சங்க

இலக்கியக் காட்சிகள், திருக்குறள் விளக்கு, பிடியும் களிறும், காவியமும் ஓவியமும், புது மெருகு, ஓவியத்தில் உவமை என்ற பெயர்களில் இலக்கியக் கட்டுரைகள் எழுதியுள்ளார். 'அழியா அழகு' என்ற பெயரில் கம்பராமாயணத் தொடரும், 'கற்பக மலர்' என்ற பெயரில் திருக்குறள் தொடரும், 'பயப்படாதீர்கள் என்ற பெயரில் இலக்கண கட்டுரைத் தொடரும் எழுதியுள்ளார். கி.வா.ஜ. கனமான இலக்கியக் கட்டுரைகள் மட்டுமன்றி, இலகுவான பொழுதுபோக்குக் கட்டுரைகள் பலவும் எழுதியுள்ளார்.

கி.வா.ஜ. காலத்திற்கேற்ப, நல்ல பல ஆக்கப்பூர்வமான கட்டுரைகளையும் வெளியிட்டுள்ளார். முன்பே குறிப்பிட்டபடி, 'கதையின் கதை' என்ற கட்டுரைத் தொடரில் 14 எழுத்தாளர்கள் தாங்கள் கதை உருவாக்கிய முறையைச் சொல்லுகின்றனர் அவர் 1971ஆவது வருடத்தில் 'நாவல் பிறந்த கதை' என்ற கட்டுரைத் தொடரை வெளியிட்டார். அநுத்தம்மா 'கேட்ட வரம்', நாரண. துரைக்கண்ணன் 'தரங்கிணி', சாண்டில்யன் 'யவனராணி', ராஜம் கிருஷ்ணன் 'குறிஞ்சித் தேன்', பி.வி.ஆர். 'மணக்கோலம்', த.நா. குமாரசாமி 'கானல் நீர்', பூவண்ணன் 'ஆலம் விழுது', ந. சிதம்பரசுப்ரமணியன் 'மண்ணில் தெரியுது வானம்', ஜெகசிற்பியன் 'கிளிஞ்சல் கோபுரம்', அகிலன் 'எங்கே போகிறோம்?', மாயாவி 'ஜீவதிரை' ஆகிய கதைகள் பிறந்த வரலாறுகளை விரிவாகக் கட்டுரை வடிவில் விவரித்துள்ளனர்.

தமிழ் எழுத்துலகம் என்ற தலைப்பில், விமர்சனக் கட்டுரைத் தொடர் ஒன்றை உருவாக்க முற்பட்டார் கி.வா.ஜ. அதற்கு முன்னுரையாக,

> **இப்பொழுது தமிழ் எழுத்துலகில் பல மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. அவை மாற்றங்கள் அல்ல; ஏமாற்றமே என்ற எண்ணம் பலருக்கு உண்டாகி இருக்கின்றது. எழுத்தினால் மக்களின் பண்பை உயர்த்த வேண்டும் என்பது போய், மக்களுடைய கீழான உணர்ச்சிகளைக் கிளுகிளுக்கச் செய்ய வேண்டும் என்பதற்காகவே எழுதுவது போன்ற கட்டுரைகளும், கதைகளும், படங்களும் பத்திரிக்கைகளில் வருகின்றன.... புரட்சி எழுத்தாளர்கள் என்றும் முற்போக்கு எழுத்தாளர்கள் என்றும் சீர்திருத்த எழுத்தாளர்கள் என்றும் எழுத்தாளர்களிலும் சாதி வேறுபாடு வந்துவிட்டது. இப்பொழுது எழுத்து எந்தத் திசையில் போய்க் கொண்டிருக்கிறது, எந்தத் திசையில் திரும்ப வேண்டும், எதை எழுதக்கூடாது, எதை எழுதித்தான்**

> **தீர வேண்டும் என்ற கேள்விகளில் உள்ளத்தைச் செலுத்திச் சிந்தனை செய்து கருத்துகளை எழுதும்படி சிறந்த எழுத்தாளர்களைக் கேட்டுக் கொள்கிறோம்**

என்று எழுதியுள்ளார். இந்த விமர்சனக் கட்டுரைத் தொடரில் அகிலன், நா.பா., தி.ஜ.ர., டி.என். சுகி சுப்ரமணியம், வாசவன், ராஜம் கிருஷ்ணன் போன்றோர் பங்கு பெற்றுள்ளனர்.

> **வாரப் பத்திரிகையின் இலக்கியத் தரத்தைத் தினப்பத்திரிகைத் தரத்தில் கொண்டு நிறுத்தியுள்ளார்கள். தங்கச் சுரங்கங்களைத் தகவல் சத்திரமாக ஆக்கிவிட்டார்கள். கற்பனை இலக்கியத்திற்குச் சாவு மணி அடித்து, விற்பனை இலக்கியத்திற்குச் சங்கநாதம் செய்கிறார்கள்**

என்று சுகி. சுப்ரமணியமும்

> **பத்திரிகைகள் இலக்கியப் பிரக்ஞை இழந்து விட்டன. அவை 'விற்பனை' என்ற மட்டமான சூதாட்டத்தில் தர்மத்தையே பணயமாக வைத்து ஆடுகின்றன. படைப்பாளிகளின் இரு கண்களாக விளங்க வேண்டிய பத்திரிகை உலகம், பதிப்பகத் துறை ஆகிய இரண்டும் படைப்பாளிகள் அல்லாத காரிய வாதப் போலிகளின் புகழை அலங்கரிக்கும் ஜரிகை அங்கவஸ்திரங்களாக ஆகிக்கொண்டிருக்கின்றன. இவை இரண்டு துறைகளுமே அந்த விரும்பத்தகாத போலிகளிடம் இருந்து மீட்கப்பட வேண்டும்**

என்று வாசவனும் காரசாரமாக விமர்சித்துள்ளனர்.

1945 இல், **'புதுமைப் பெண்'** என்ற கட்டுரைத் தொடர் வெளியாகி உள்ளது. 'வருங்காலத்தில் பெண்ணுலகம் எப்படி இருந்தால் சமுதாயத்திற்கு நன்மை உண்டாகும்?' என்ற வினாவை எழுப்பி, குமுதினி, லோகசுந்தரி ராமன் (சர்.சி.வி. இராமனின் மனைவி), எஸ். அம்புஜம்மாள், சகோதரி. சுபலட்சுமி போன்ற பலரைக் கட்டுரைகள் எழுதச்சொல்லி அவற்றை ஒவ்வொரு மாதமும் வெளியிட்டுள்ளார் கி.வா.ஜ.

> ஒரு பெண்மணி டாக்டராகவோ, உபாத்தியாயராகவோ, சமூகத்தின் நலத்திற்காக உழைத்து, பிரம்மச்சரியம் பூண்டு, தனது காலத்தைக் கழிக்க

> விரும்பினால் அதற்குத் தடை இருக்கக் கூடாது. புருஷர்களுக்குத் தத்தம் வாழ்க்கை விஷயத்தில் இருக்கக்கூடிய உரிமை பெண்டிர்களுக்கும் வேண்டும்

என்று குமுதினியும்

> **'புதுமைப் பெண் தன்னம்பிக்கையுடன் நிமிர்ந்து நடப்பாள். கண்ணால் அவளை அளக்கமுடியாது; கருத்தால்தான் அவளை அறியலாம்'**

என்று திருமதி லோகசுந்தரி கூறியுள்ளதும் அக்காலத்திற்குப் புதுமையிலும் புதுமையாகும்.

எங்கள் ஊர், எங்கள் தொழில், முதல் வேலை, என் தந்தையார் என்ற தலைப்பிலும் கட்டுரைத் தொடர்கள் வந்துள்ளன. 1968 இல், தமிழகத்தில் உள்ள சிறந்த நூலகங்கள் பற்றிய கட்டுரைகள் வெளியாகியுள்ளன. கலைமகள் கட்டுரைகள் அனைத்தும் விஷய கனம் உடையவை; பொழுதுபோக்காகப் படித்து எறியத்தக்கவை அல்ல.

கி.வா.ஜ. சிறுகதை, நாவல் போட்டிகள் வைத்து அந்தந்த இலக்கியங்களை வளர்த்தது போல, கட்டுரைப் போட்டிகளும் வைத்து நல்ல கட்டுரைகளை வரவேற்றுள்ளார். 1970 களில் நல்ல விமர்சன கட்டுரைகளுக்குப் பரிசுகள் நல்கியுள்ளார். 'எதைச் செய்தாலும், அதை ஈடுபாட்டுடனும் பெருவிருப்புடனும் செய்து, நற்றிறனை வெளிக்கொணர்ந்த சிறப்பாளர் கி.வா.ஜ.

### பெண் எழுத்தாளர்களை உருவாக்கிய கி.வா.ஜ.

கி.வா.ஜ., எழுத்துத் துறைக்குப் பெண்கள் அதிகம் வர வேண்டும் என்ற ஆவலைக் கொண்டிருந்தார். 1932ஆம் ஆண்டு வெளியான முதல் கலைமகள் இதழிலேயே, பெண்கள் இடம்பெற்றுள்ளனர் என்றாலும், மற்ற சமகால இதழ்களைக் காட்டிலும், கலைமகள் மூலம் பெண் எழுத்தாளர்களைச் சிறப்பாக ஊக்குவித்துள்ளார் அவர்.

சிறுகதை, நாவல், குறுநாவல் போட்டிகளில் பெண்கள் கலந்து கொண்டு பரிசு பெற்ற போது, அவர்களை நேரில் சென்று வாழ்த்தியும், அவர்களை மேலும் எழுதச் சொல்லி ஊக்குவித்தும் வந்துள்ளார். எழுத்தாளர் ராஜம் கிருஷ்ணன், 'கி.வா.ஜ. பலமுறை எங்கள் வீட்டிற்கு வந்துள்ளார். நான் எழுதிய 'பெண்குரல்' கதை பரிசு பெற்ற போது, அதைத்

தெரிவிக்க அவரே நேரில் வந்தது எனக்கு இன்னும் நினைவில் நிற்கிறது' என்று கூறுகிறார். (12.7.04 அன்று எடுத்த பேட்டியின் போது கூறிய கருத்து). ராஜம் ராமமூர்த்தி, ஆர். சூடாமணி, கி. சரஸ்வதி அம்மாள், அநுத்தம்மா, லட்சுமி ராஜரத்தினம், கமலா சடகோபன், லட்சுமி ரமணன், சரோஜா ராமமூர்த்தி என்று பல பெண்கள் கலைமகளின் இலக்கியப் பரிசைப் பெற்றுள்ளனர். சிறப்பாக எழுதும் ஆற்றலை உடைய பெண் எழுத்தாளர்களைக் கண்டுபிடித்து, அவர்களை மேலும் மேலும் எழுதத் தூண்டி, அவர்கள் எழுத்துலக வாழ்விற்குக் கலைமகளில் ஆழமான தளம் அமைத்துக் கொடுத்துள்ளார். 1948இல், நடந்த நாவல் போட்டியில் 10 பெண் எழுத்தாளர்கள் கலந்து கொண்டுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். கலைமகள் நடத்திய போட்டிகளில் நடுவர்களாகக் குமுதினி, கி. சரஸ்வதி அம்மாள், ராஜம் கிருஷ்ணன், அநுத்தம்மா போன்றவர்கள் விளங்கியுள்ளனர். கௌரி அம்மாள், விமலா ரமணி, பத்மா ஷேசாத்திரி, தர்மாம்பாள், எஸ். லட்சுமி சுப்ரமணியம், எஸ். ரெங்கநாயகி, குமாரி எல்.என். பார்வதி, கமலா தோத்தாதிரி, கோமகள், ருக்மணி பார்த்தசாரதி, வாசந்தி, சி.ஆர். ராஜம்மா, விந்தியா, வேங்கடலட்சுமி, எல்.என். சியாமளா, சீதாதேவி, கி. சாவித்திரி அம்மாள், கு.பா. சேது அம்மாள், குகப்பிரியை, ஜெயலட்சுமி ஆர். சீனிவாசன் என்பவர்கள் கலைமகளில் எழுபதுகள் வரை எழுதிய பெண் எழுத்தாளர்கள் ஆவார்கள். இன்று 'பெண் எழுத்தில்' புகழ் நாட்டியுள்ள அம்பை 1966இல், கலைமகளில் 'அந்திமாலை' என்ற நாவலை எழுதியுள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

## நாட்டுப்புற இலக்கியப் பணியில் கி.வா.ஜ.வும் கலைமகளும்

கி.வா.ஜ.வுக்கு, வெகுஜன இலக்கியமாகிய நாட்டுப்புறப் பாடல்கள், பழமொழிகள், விடுகதைகள் இவற்றை அறிவதிலும், அவற்றை அழியாமல் தொகுத்துப் பாதுகாப்பதிலும் பெரும் விருப்பமுண்டு. சொற்பொழிவாற்ற தமிழ்நாட்டின் எந்த மூலைக்குத் தாம் சென்றாலும், அங்குள்ள நாட்டுப்புறப் பாடல்களையும், பழமொழிகளையும், விடுகதைகளையும் கேட்டறிவது வழக்கம். பழமொழிகளைத் தனித்தனித் தாள்களில் எழுதிக் கொண்டு வந்து, தம் வீட்டில் வைத்திருக்கும் அகரவரிசை டப்பாக்களில், அந்தத் தொடக்க எழுத்துகளுக்கு ஏற்பப் போட்டு, பின்பு இறுதியாக அவற்றை அகர வரிசைப்படித் தொகுத்து வெளியிட்டார். இப்பணியில் அவர் குடும்பத்தார் அனைவரும் ஈடுபட்டதாக அவர் மகன் ஒரு பேட்டியின் போது

குறிப்பிட்டுள்ளார். ஒரு தனி மனிதனாக நின்று அவர் செய்த இத் தொகுப்புகள் காலத்தால் அழியாது சாகாவரம் பெற்றுவிட்டன. இப்பணிக்கு, கலைமகள் இதழையும் கி.வா.ஜ. ஒரு கருவியாகப் பயன்படுத்திக் கொண்டார். கலைமகள் பத்திரிகை மூலம் பழமொழிகளையும், விடுகதைகளையும் தொகுத்துள்ளார். முக்கியமாக, விலங்குகளைப் பற்றிய பழமொழிகள், தாயைப் பற்றிய பழமொழிகள் இவற்றையெல்லாம் கலைமகள் வாசகர்கள் மூலம் சேகரித்துள்ளார். அதுபோன்று, விடுகதை களையும் சேகரித்து, பின்பு அவற்றையும் தொகுத்து வெளியிட்டுள்ளார். மலையருவி என்ற பெயரில் அவர் தொகுத்த நாட்டுப்புறப் பாடல்களின் தொகுப்பு தமிழ்நாடு அரசின் பரிசினைப் பெற்றது.

## சொல்லாராய்ச்சிகள்

கி.வா.ஜ., தமிழில் சொல்லாக்கங்கள் எவ்வாறு நிகழ்ந்துள்ளன என்பது குறித்து ஆராய்ந்து கலைமகள் இதழில் துணுக்குச் செய்தி போல அவற்றை வெளியிட்டுள்ளார். சிகைக்காய் என்பது சீயக்காய் என்று ஆனதாகவும், மாற்றுப் பெண் என்பது மாட்டுப் பெண் என்று மருவியதாகவும், கழல் என்பதிலிருந்து கழற்று, கழற்றுதல் என்ற சொற்கள் உருவாகின என்றும், வினைகெட்டு என்பதுதான் மெனக்கெட்டு என்று மருவியதாகவும், குரங்கு வலி என்பதுதான் குரக்கு வலியாகி, கொறக்குளி என்று மருவியதாகவும் அவர் ஆராய்ந்து கூறியுள்ளது இரசிப்பதற்கு மட்டுமல்ல, சிந்திப்பதற்கும் உரியன.

## விடையவன் விடைகள்

கலைமகளில், 'விடையவன் விடைகள்' என்ற பகுதியில், இலக்கியம், இலக்கணம், சொல் வழக்குகள், சமயம் சம்பந்தப் பட்ட வினாக்களுக்குக் கி.வா.ஜ. விடையளித்து வந்துள்ளார். இலக்கிய மாணாக்கர்களும், இலக்கிய மன்றங்களைச் சேர்ந்தவர் களும், பொதுமக்கள் பலரும் கி.வா.ஜ.விடம் நேரடியாகவும், தொலைபேசி, கடிதங்கள் மூலமாகவும், இலக்கியம், சமயம், இலக்கணம் சம்பந்தப்பட்ட வினாக்களை எழுப்பி விடை கேட்க, இஃது பல நாட்கள் தொடர, கி.வா.ஜ. கலைமகளிலேயே கேள்வி-பதில் பகுதி அமைத்து விடலாம் என்று முடிவு செய்து, 'இது பதில்' என்ற பெயரிலும், 'இதோ விடை' என்ற பெயரிலும், 'விடையவன் விடை' என்ற பெயரிலும் அப்பகுதியைப் பல காலம் வெளியிட்டு வந்தார். பின்பு அக்கேள்விகளும் பதில்

களும் தொகுக்கப்பட்டு அவரால் நூல்களாகவும் வெளியிடப் பட்டுள்ளது. அவற்றின் பக்கங்களைப் புரட் டினால் எத்தனை எத்தனையோ இலக்கண இலக்கிய விளக்கங்கள் கிடைக்கப் பெறும்.

## பிழைதிருத்தும் பணி

துணை ஆசிரியர்கள் இருந்தாலும், கி.வா.ஜ. தாமே கலைமகளுக்கு வரும் படைப்புகளைப் பார்வையிட விரும்புவார். 1973 வரை கலைமகளில் துணை ஆசிரியராக இருந்த கா.ஸ்ரீ.ஸ்ரீ.,

> **கலைமகளில் எழுதும் எழுத்தாளர்களில் ஒருவர், இருவருடைய கையெழுத்து விளங்காமல் பிரதி யெடுத்து அச்சகத்தில் கொடுக்க நேரிடும். புதுமைப் பித்தன் கையெழுத்து அவருக்கே சிலசமயம் புரியாது. அவர் கதைகளைப் பிரதியெடுக்கும்போது எனக்கு விளங்காத இடங்களை விட்டு வைப்பேன். கி.வா.ஜ. அவற்றைக் கண்டு நிரப்புவார்**

என்று கூறியுள்ளார். மேலும் எழுத்தாளர்கள் பிழைபட எழுதும் போது அவற்றைத் தாமே திருத்தி அச்சுக்கு அனுப்புவார். ராஜம் கிருஷ்ணன் இதைப் பற்றிக் கூறும்போது, 'நான் எழுதியதில் கி.வா.ஜ. எவ்வெவற்றைத் திருத்தி அனுப்பியுள்ளார் என்பதைப் பத்திரிகையில் கதை வரும்பொழுது ஆவலுடன் பார்த்துத் தெரிந்து கொண்டு, அப்பிழைகள் மறுபடியும் நேராதவாறு பார்த்துக்கொள்வேன்' என்று கூறுகிறார். கலைமகளில் பரிசு பெற்ற 'பெண் குரல்' என்ற தம் நாவலில், 'பல் துலக்கும் தூரிகை' என்று ஓரிடத்தில் குறிப்பிட்டதை, கி.வா.ஜ. 'பல் துலக்கும் ப்ரஷ்' என்று சுட்டுவதே யதார்த்தமானது என்று மாற்றியதை நினைவு கூரும் அவர், 'சுவற்றில்' என்பதை 'சுவரில்' என்றும், 'முயற்சித்தான்' என்பதை 'முயன்றான்' என்றும் மாற்றியதைத் தம் பேட்டியில் சுட்டிக்காட்டியுள்ளார். தமிழைத் தாய்மொழியாகக் கொண்டிருந்தும், தொடக்கப் பள்ளிகளில் மட்டுமே தமிழ் படித்த ராஜம் கிருஷ்ணன் புகழ்பெற்ற கதைகளை எழுதுவதற்கும், இன்று தாம் எதையும் மிகச்சிறப்பாகத் தமிழில் எழுதி வெளிப்படுத்த இயலும் என்று நம்புவதற்கும், கலைமகள் மூலம் கி.வா.ஜ.விடம் பிழையின்றி எழுதத் தாம் எடுத்துக்கொண்ட முயற்சிதான் அடிப்படை என்கிறார்.

கி.வா.ஜ. தம்மோடு பணியாற்றிய துணையாசிரியர்கள் மற்றும் அலுவலர்கள் வேண்டுகோளுக்கிணங்கி அவர்களுக்கு

இடைவேளை நேரத்தில் தமிழ் இலக்கணம் கற்றுத் தந்துள்ளார். அப்படிக் கற்றவர்களில் த.நா. சேனாதிபதியும் ஒருவராவார். அவரிடம் அப்படிப் படித்து, வித்துவான் தேர்வு எழுதி வெற்றி பெற்றவர்களும் கலைமகள் அலுவலகத்தில் உண்டு. யாரையும் மனம் நோகடிக்காமல் தட்டிக்கொடுத்து வேலை வாங்குவது கி.வா.ஜ.வின் இயல்பு. பிழைகளைக் கூட நாசூக்காக எடுத்துச் சொல்லித் திருத்துவதுதான் அவர் வழக்கம்.

## கி.வா.ஜ.வின் பேட்டிகள்

கி.வா.ஜ., கலைமகளுக்காகத் தானே முக்கியப் பிரமுகர்களைப் பேட்டி காணச் செல்வது வழக்கம். ஒருமுறை, காஞ்சிப் பெரியவர்களைப் பேட்டி எடுக்கச் சென்றுள்ளார். பெரியவர், கி.வா.ஜ. பேட்டி எடுக்க வந்திருக்கிறார் என்பதை மறந்து பல அன்பர்களுக்கு அருளாசி வழங்கிக்கொண்டிருந்தார். மாலை நேரமாகிவிட்டது. கி.வா.ஜ.வும் வந்த காரியத்தை நினைவுபடுத்தாமல் பெரியவரிடம் ஆசிபெற்றுத் திரும்பி விட்டார். அடுத்த கலைமகள் இதழில் அவர், 'பெரியவர் பக்தர்களுக்கு எப்படித் தரிசனம் கொடுத்தார்? தம்மைச் சந்திக்க வந்தவர்களிடம் என்னென்ன கேள்விகள் கேட்டு எப்படிப் பதில்களைப் பெற்றார்? அவர் கூறிய அருளுரை, அவர் பூஜை செய்யும்போது ஏற்பட்ட சுகமான அனுபவங்கள் என விரிவாக எழுதிக் கட்டுரை வெளியிட்டார். கி.வா.ஜ.வின் மதிநுட்பத்தையும், நுண்ணறிவையும், கட்டுரையின் உண்மைப் பாங்கினையும் கண்டு காஞ்சிப் பெரியவர் வியந்து பாராட்டி, அவருக்குச் சால்வை போர்த்திச் சிறப்புச் செய்தார்.

ஒருமுறை கி.வா.ஜ. குமுதம் இதழுக்காக முன்னாள் முதல்வர், அப்போதைய முன்னணி நடிகை ஜெயலலிதாவைப் பேட்டி கண்டார். அப்பேட்டி இரண்டு வாரங்கள் குமுதம் இதழில் தொடர்ந்து வெளிவந்தது. அதற்கு இலக்கிய உலகில் கடும் எதிர்ப்புத் தெரிவிக்கப்பட்டது. அதற்குப் பதிலாகக் கி.வா.ஜ. 'பேட்டி எடுத்தது என் பத்திரிகை வாழ்க்கையில் ஒரு நிகழ்வு அவ்வளவுதான்' என்று கூறியதுடன், 'காய்க்கிற மரம்தான் கல்லடி படும்' என்று கூறி, தன் மீது வைக்கப்பட்ட விமர்சனங்களைப் புறக்கணித்தார். தனக்கு எது சரியென்றுபட்டதோ அதைத் தைரியமாகச் செய்யக்கூடியவர் கி.வா.ஜ. என்பதை இதன்மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.

## கி.வா.ஜ.வும் வாசகர்களும்

கி.வா.ஜ., வாசகர்கள் கருத்தை அறிவதில் மிகுந்த ஆர்வம் உடையவர். அவர்கள் கருத்துக்கு உரிய மதிப்பளிப்பவர். கலைமகளுக்கு வரும் அனைத்துக் கடிதங்களையும் பார்வையிட்டு, அக்கடிதங்களுக்கு உடனடியாகத் தம் கைப்பட பதில் அளிப்பதில் தவறமாட்டார். 'ஒவ்வொரு கடிதத்திற்கும் உயிருண்டு; அதை மதிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்' என்று தன் சக பத்திரிகைத் தோழர்களிடம் அவர் அடிக்கடிக் கூறுவதுண்டு. நிறைய வாசகர்கள் அவர் கைப்பட எழுதிய கடிதத்தைப் படித்து மகிழ்ந்ததுடன், அதைப் பெரும்பேறாகவும் போற்றிப் பாதுகாத்துள்ளனர். வாசகர்கள்தானே என்று இரண்டு வரிகளில் பதில் எழுதமாட்டார். தேவையானால் பக்கம் பக்கமாக எழுதவும் தயங்கமாட்டார். கி.வா.ஜ. கடிதங்களின் மூலம் வந்த வாசகர் கருத்துக்களை அவ்வப்போது ஆசிரியர் பக்கத்தில் முக்கியச் செய்தியாக வைப்பது அவர் பழக்கமாகும். கலைமகளுக்கு உலகம் முழுவதும் வாசகர்கள் இருக்கிறார்கள். அமெரிக்கா, கனடா, இங்கிலாந்து, பிரான்சு, ஜெர்மனி, ஆஸ்திரேலியா, இலங்கை, மலேசியா, பர்மா என்று பல நாடுகளில் கலைமகள் அன்பர்கள் பரவி உள்ளனர்.

## கி.வா.ஜ.வின் தமிழ்ச் சான்றோர் பணிகள்

'கலைமகள்' இதழ் மூலம், கி.வா.ஜ., தமிழறிஞர்கள் பலருக்குச் சிறப்புக்கள் செய்துள்ளார்; மற்றும் பலருக்கு முக்கியத் துவம் கொடுத்துச் செய்திகள் வெளியிட்டுள்ளார். தமிழறிஞர்கள் இறந்தால் தவறாது அஞ்சலி செலுத்தியுள்ளார். ஏழ்மையில் நலிந்த தமிழ்க் குடும்பங்களுக்கு நிதி திரட்டி உதவியுள்ளார். தமிழறிஞர்களின் நூற்றாண்டுகளைக் கொண்டாடியுள்ளார். இவ்வாறு, அவர் தமிழறிஞர்களுக்குக் கொடுத்த முக்கியத்துவம் குறிப்பிடத்தக்கதாகும்.

1942இல், உவேசா. இறந்தபோது, தம் குருவுக்குக் கலைமகள் மூலம் அஞ்சலி செலுத்திய கி.வா.ஜ., 1947இல், அவரது சிலை திறக்க, கலைமகள் வாசகர்களிடம் நிதி திரட்டி அளித்துள்ளார்.

1944இல், குபரா. மறைந்தபோது,

**சிறுகதை எழுத்தாளர்களில் முன்னணியில் இருப்பவர் கு.ப.ரா. கதையில் சுவாரஸ்யம், நடையில் அழகு, சொற்செட்டு இவற்றை அவரது சிறுகதைகளில் காணலாம். அடக்கமான தோற்றம், அமைதியான**

**குணம், மென்மையான பேச்சு, அவர் தான் கு.ப.ரா. அவர் எழுத்தில் ஆழம் காணமுடியாத மனத் தத்துவத்தையும், வாழ்க்கைச் சிக்கலையும், காதல் உணர்ச்சியையும் காணலாம்**

என்று கி.வா.ஜ. அவரையும் அவர் எழுத்தையும் போற்றி அஞ்சலி செலுத்தியுள்ளார். அத்துடன், நலிவடைந்த நிலையில் இருந்த கு.ப.ரா.வின் குடும்பத்திற்கு, கலைமகள் வாசகர்களிடம் ரூ.5,000/- நிதி திரட்டி அளித்துள்ளார்.

1946இல், ரா. ராகவையங்கார் இறந்தபோதும், 1951 இல், வ.ரா. இறந்த போதும் அச்செய்திகளை வெளியிட்டு அஞ்சலி செலுத்தியதுடன், அவர்களைப் பற்றிய கட்டுரைகளையும் வெளியிட்டு இருந்தார்.

1948 ஜூன் 30ஆம் தேதி புதுமைப்பித்தன் திருவனந்த புரத்தில் மறைந்தபோது,

**புதுமைப்பித்தன் தம் கதைகளில் என்றும் வாழ்கிறார்**

என்று குறிப்பிட்டு அஞ்சலி செலுத்தியுள்ளார் கி.வா.ஜ.

**புதுமைப்பித்தனின் கற்பனையே ஒரு புதுமை. வாக்கிய இணைப்பே ஒரு புதுமை. வார்த்தைகளிலே கூட புதுமை உண்டு. அவருடைய நடையைப் பின்பற்றி எழுதுவது முடியாத காரியம். காம்பீரியமும், பலர் கண்டு அஞ்சும் கோபமும் அவருடைய எழுத்திலே விரவிக் கிடக்கும்**

என்று புதுமைப்பித்தனின் எழுத்தை அவர் விமர்சித்துள்ளார்.

புதுமைப்பித்தனுக்கும் பாரதிதாசனுக்கும் பிற அமைப்புகள் நிதி திரட்டிய போது, கலைமகள் மூலமும் நிதி திரட்டி அவர்களுக்கு உதவியுள்ளார்.

1954இல், கவிமணியும், கல்கியும் இறந்தபோது, அவர்களின் தமிழ்க் கொடை பற்றி எழுதி அஞ்சலி செலுத்தியுள்ளார்.

1972இல், அ. மாதவையாவின் நூற்றாண்டு நினைவாக 'வரன் தேடும் வைபவம்' என்ற அவரது சிறுகதையைக் கலைமகளில் வெளியிட்டார் கி.வா.ஜ. அத்துடன் அவரைப் பற்றி முத்தண்ணா என்பவர் எழுதிய கட்டுரையையும் 'குசிகர் குட்டிக் கதைகள்' பற்றிப் பெ.நா.அப்புசாமி எழுதிய கட்டுரையையும் வெளியிட்டு,

அ. மாதவையாவின் தமிழ்ப்பணியை வாசகர்களிடம் நினைவு கூர்ந்துள்ளார்.

அத்துடன், அதே ஆண்டு, வ.உ.சி. நூற்றாண்டு என்பதால் அவர் பிறந்த செப்டம்பர் மாத இதழில் அவர் பற்றிய கட்டுரையை வெளியிட்டு அஞ்சலி செலுத்தியுள்ளார். இவையெல்லாம் கி.வா.ஜ.வின் தமிழன்பர் பணிக்குச் சில சான்றுகளாகும். கலைமகளின் ஒவ்வொரு மாத இதழுமே ஒரு தமிழ்க் களஞ்சியமாகக் காட்சியளிக்கிறது என்றால் அது மிகையாகாது.

**கி.வா.ஜ.வின் இதழியல் கொடை பற்றிய பிற செய்திகள்**

1. கலைமகளில் ‘உரைகல்’ என்ற பெயரில் நூல் விமர்சனம் இடம்பெறுவதை ஒருபோதும் கி.வா.ஜ. தவிர்த்ததில்லை.

2. தமிழ் எழுத்தாளர் மாநாடு பற்றிய செய்திகளும் கலைமகளில் அவ்வப்போது வெளிவந்துள்ளன. 1954 இல், பிப்ரவரி 6,7 தேதிகளில் நடந்த எழுத்தாளர் மாநாட்டில் ந. சிதம்பர சுப்ரமணியம் ‘சிறுகதை’ பற்றியும், அகிலன் ‘நாவல்’ பற்றியும், ரா. சீனிவாசன் ‘தமிழும் விஞ்ஞானமும்’ என்ற தலைப்பிலும் உரை நிகழ்த்தியுள்ளனர்.

   1957இல், ஜூன் 22, 23 தேதிகளில் நடந்த எழுத்தாளர் மாநாட்டிற்குக் கி.வா.ஜ. தலைமையேற்றுச் ‘சிறுகதையின் இன்றைய நிலை’ என்ற தலைப்பில் சொல்லரங்கு நடத்தியுள்ளார்.

   இப்படி, தமிழ் குறித்த செய்திகள் அனைத்தையும் விடாது கலைமகளில் பதிவு செய்துள்ளார்.

3. கலைமகளில் நாடகப் போட்டிகளும், கவிதைப் போட்டிகளும் நடத்தப்பட்டுள்ளன. கி.வா.ஜ. இளைய சமுதாயத்தை ஊக்குவிக்கும் விதத்தில் மஞ்சரியில் ‘கவிபாடலாம்’ என்ற பகுதியைத் தொடங்கி நடத்தி வந்துள்ளார்.

4. கலைமகளின் வெள்ளிவிழாக் கொண்டாட்டம் 14.4.57 அன்று, அன்றைய முதலமைச்சர் பக்தவத்சலம் தலைமையில் ரசிக ரஞ்சனி சபாவில் நடைபெற்றது. வெள்ளிவிழாவை முன்னிட்டுக் கலைமகளில் சிறுகதை, கவிதை, நாடகம், கட்டுரை, நாவல் போட்டிகள் நடத்தப்பட்டன. ஆர். சூடாமணியின் ‘காவேரி’, என்ற

சிறுகதைக்கும், ராஜம் கிருஷ்ணனின் 'குருட்டுக் குழந்தைகள்' என்ற நாடகத்திற்கும், எச்.ஆர். கிருஷ்ணனின் 'தமிழ்க் காப்பியத்தில் ஓவியத்திறன்' என்ற கட்டுரைக்கும் ரா.பி. தங்கராசனின் 'சிலையின் கண்ணீர்' என்ற கதைக்கும் பரிசுகள் கிடைத்தன. அவை கலைமகள் வெள்ளிவிழா மலரில் வெளிவந்து, அம்மலருக்குச் சிறப்புச் சேர்த்தன. அம்மலரில் அமரர் கல்கி ஆனந்த விகடனில் எழுதிய 'கலைமகள் விஜயம்' என்ற கட்டுரையும் இடம்பெற்றது.

5. கலைமகளின் தீபாவளி மலர் ஒவ்வொன்றும் போற்றிப் பாதுகாக்கத் தகுந்த இலக்கியச் செல்வங்களாகும். ஒவ்வொரு வருடமும் அம்மலரை உருவாக்குவதில் கி.வா.ஜ. பெரும் கவனம் செலுத்தியுள்ளார். தீபாவளி மலருக்காக அவர் தம்முடைய துணை ஆசிரியர்களுடன் இணைந்து இரவு பகல் பாராமல் உழைத்துள்ளதைக் கா.ஸ்ரீ.ஸ்ரீ. தம் கட்டுரையில் நினைவு கூர்ந்துள்ளார்.

6. கல்கி, தேவன் போன்ற பிற பத்திரிகை ஆசிரியர்களையும் கலைமகளில் எழுத வைத்த பெருமை கி.வா.ஜ.விற்கு உண்டு.

7. கலைமகளின் துணைப் பத்திரிகைகளாக வெளிவந்த மஞ்சரி, கண்ணன் பத்திரிகைகளிலும் கி.வா.ஜ. எழுதிக் குவித்துள்ளார்.

8. கி.வா.ஜ. 1988இல், உடல்நலம் குன்றி படுத்த படுக்கையாகக் கிடக்கும் வரை, இதழ்ப் பணியில் சலியாது ஈடுபட்டுள்ளார். படுக்கையிலும் கூட, அவர் தலைமாட்டில் கலைமகள் இதழ்கள்தான் காட்சியளித்தன என்று கலைமகளின் மூத்த அலுவலர்கள் கூறுகின்றனர். இறுதி மூச்சுவரை கி.வா.ஜ.வின் பேச்சும் மூச்சும் கலைமகள் பற்றியதாகவே இருந்திருக்கின்றது. அதனால்தான், கலைமகள் என்ற வார்த்தையும் கி.வா.ஜ. என்ற பெயரும் காலம் கடந்தும் பிரிக்க இயலாதவை களாகச் சிறக்கின்றன.

## தொகுப்புரை

கி.வா.ஜ.வின் இதழியல் பணி தனித்துவம் வாய்ந்தது; வரலாற்றுப் பூர்வமானது.

எப்படியும் பத்திரிகை நடத்தலாம் என்ற இதழாளர்கள் மத்தியில் இப்படித்தான் நடத்தவேண்டும் என்ற குறிக்கோளோடு இதழியல் பணி செய்தவர் கி.வா.ஜ.

பத்திரிகைத் துறைக்கே உரிய சந்தைக் கலாச்சாரத்தை அறவே அண்டவிடாது, தரமான தமிழ் இதழாகக் கலைமகளை வளர்த்தெடுத்தவர் கி.வா.ஜ.

கலைமகளில் எழுதுபவர்கள் நல்ல எழுத்தாளர்கள் என்று மக்களை அடையாளம் காண வைத்தவர் கி.வா.ஜ.

கலைமகள் எழுத்தாளர்கள் என்றால் அவர்கள் கருத்து, நடை, சொல்லாட்சி, நல்ல தமிழ் இவற்றில் சிறந்து விளங்குவார்கள் என்ற நம்பிக்கையை மக்கள் மத்தியில் வளர்த்தெடுத்தவர் அவர்.

கலைமகளைப் பழமைக்கும் புதுமைக்கும் பாலமாகத் திகழச் செய்தார், கி.வா.ஜ. கலைமகளில் என்றும் புதியவர்களுக்கு ஆதரவு உண்டு; புதிய சிந்தனைகளுக்கு வரவேற்பு உண்டு. ஆனால், அது தமிழ்ப் பண்பாடு என்ற அடித்தளத்தின் மேல் தூக்கி நிறுத்தப்படவேண்டும் என்பதில் உறுதியாக இருந்துள்ளார் கி.வா.ஜ.

இதழியல் துறையில் தன்னை வல்லவராக உருவாக்கிக் கொண்டபோதும், தமிழறிஞர் என்ற பின்னணியில் இருந்து ஒருபோதும் அவர் வழுவியதில்லை.

சிறுகதை, நாவல், கட்டுரை, நாட்டுப்புறவியல், உரையியல், பதிப்பியல் வளர்ச்சி வரலாற்றில் மட்டுமல்ல தமிழ் இதழியல் வரலாற்றிலும் கி.வா.ஜ.விற்குத் தனித்ததொரு இடம் உண்டு.

**கலைமகளால் கி.வா.ஜ.வும், கி.வா.ஜ.வினால் கலைமகளும் பெற்ற பெருமை மகத்தானது.**

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை |
|---|---|
| நாசுதிர்ாதிக்-ஞாலமுதன்மொழிஆய்வுகளுக்குப் பாவாணர் தரும் ஒளி | 35.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 901 - கி.பி. 1300 | 100.00 |
| தொல். பொருள். (அகம்-புறம்)-ஆங்கில மொழிபெயர்ப்பு | 50.00 |
| தமிழ் ஆய்வு இதழ்கள் | 50.00 |
| வேதாத்திரியத்தில் சமூகவியல் இறையியல் சிந்தனைகள் | 130.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 1851 - 2000 | 180.00 |
| இதழாளர் பெரியார் | 160.00 |
| மகாவித்துவான் ரா. ராகவையங்கார் | 30.00 |
| தமிழக வானவியல் சிந்தனைகள் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள்-நாட்டுப்புறவியல்,கலை,பண்பாடு | 90.00 |
| தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 200.00 |
| வாழிய செந்தமிழ் | 140.00 |
| பேராசிரியர் அ.மு.பரமசிவானந்தம் | 40.00 |
| தமிழக எல்லைப் போராட்டங்கள் | 60.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - I | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - II | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - III | 80.00 |
| தொல்காப்பியம்-சொல்லதிகார மூலமும் சேனாவரையருரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 325.00 |
| தொல்காப்பியம் - பொருளதிகார மூலமும் பேராசிரியர் உரையும் | 300.00 |
| Economic Heritage of the Tamils | 115.00 |
| மலேசியத் தமிழரும் தமிழும் | 100.00 |
| மொழி, சமய, சமுதாயத் தளங்களில் பாவாணர் பங்களிப்பு | 50.00 |
| தமிழ்ப் புனைகதைகளில் உளவியல் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - தொல்லியல், வரலாறு, சமூகவியல் | 100.00 |
| கவிதையியல் | 50.00 |
| பண்பாட்டு நோக்கில் திருமுறைகள் | 30.00 |
| கதைப் பாடல்களில் கட்டுப்பாட்டு மீறல்கள் | 95.00 |
| Bibliography on Translations | 175.00 |
| சங்க இலக்கிய ஆய்வு தெபொமீயும் மேலை அறிஞரும் | 60.00 |
| அறந்தாங்கித் தொண்டைமான்கள் | 45.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 200.00 |
| **தமிழில் தத்துவ நூல்கள்** | **40.00** |

---

**595 வாகீச கலாநிதி கி.வா.ஜகந்நாதன் 60.00**